மயிலை சிவமுத்து



# திருக்குறள் இனிய எளிய உரை

மாணவர் மன்றம்
சென்னை

# திருக்குறள்

(இனிய எளிய உரை)

## அறம்-பொருள்

உரையாசிரியர்
தமிழ்நெறிக் காவலர், முதுபெரும் புலவர்
பேராசிரியர் மயிலை சிவமுத்து அவர்கள்

வெளியீடு
**மாணவர் மன்றம்**
41, இப்ராகிம் தெரு, சென்னை-600 001

முதற் பதிப்பு : 1960
இரண்டாம் பதிப்பு : 1968
மூன்றாம் பதிப்பு : 1971
நான்காம் பதிப்பு : 1973
ஐந்தாம் பதிப்பு : 1981
ஆறாம் பதிப்பு : 1984
ஏழாம் பதிப்பு : 1989



விலை ரூ. 20-00

அச்சிட்டோர் :
மூவேந்தர் அச்சகம்
இராயப்பேட்டை,
சென்னை-14

# படைப்பு

மணிதிரு நாவுக் கரசெனும் ஆசான்
துணிவுடன் எற்கே துகளறச் சொற்ற
அணிபெறு குறளின் அரும்பொருள் உரையை
பணிவுடன் அவற்கே படைத்துளம் அமைவேன்.

—சிவமுத்து

# பொருளடக்கம்

# பதிப்புரை

திருக்குறள் நெறியைத் தமிழகம் முழுவதும் பரப்புவது மன்றத்தின் தலையாய குறிக்கோள். அக் குறிக்கோள் நிறைவேற மன்றம் பலவழிகளி லும் பாடுபட்டு வருகின்றது. அம் முயற்சிகளுள் ஒன்றாகவே திருக்குறள் இனிய எளிய உரை என்னும் இந்நூல் வெளிவருகின்றது.

தமிழ்நெறிக் காவலர் பேராசிரியர் மயிலை சிவமுத்து அவர்கள் தம் வாழ்நாள் முழுவதையும் தமிழ் வளர்ச்சிக்கும், தமிழர் — சிறப்பாகத் தமிழிளைஞர் முன்னேற்றத்துக்குமாகவே செல விட்டுப் பல துறைகளிலும் உழைத்த உத்தமர். அப்பெரியார் திருக்குறளின் பொருளை அனை வரும் உணர்ந்து கற்றுப் பயன் பெறக்கூடிய வகையில் தெளிவான எளிய நடையில் இந்த உரை நூலை இயற்றி உதவினார்கள்.

மன்றத்திற்கு முழு உரிமையுடைய இந்நூல் இப்போது ஏழாம் பதிப்பாக வெளிவருகிறது. ஆறாம் பதிப்பைப் போலவே இந்நூலும் ஓரளவு சுருங்கிய பதிப்பாகவே வெளியிடப்பட்டுள்ளது.

இவ்வரிய இனிய நூலினை இயற்றியருளிய தமிழ்நெறிக் காவலர் மயிலை சிவமுத்து அவர்

களை என்றென்றும் நம் நெஞ்சக் கோயிலில் வைத்து அவர் தம் நினைவைப் போற்றுவோம்.

இந்நூலின் அச்சுப்படிகளைப் பிழையறத் திருத்தி யுதவிய மன்ற ஆட்சியாளர்கள் புலவர் தணிகை உலகநாதர், மி. ச. நடேசன், ப. கி பொன்னுசாமி, மா. இரா. வஞ்சிக்கோவன் ஆகியோருக்கு மன்றத்தின் நன்றி என்றென்றும் உரியதாகும்.

அச்சிட்டு உதவிய மூவேந்தர் அச்சகத்தின ருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளு கின்றோம்.

இந்நூலினை ஏற்றுப் போற்றுவதன் வாயி லாக மன்றத்தின் தொண்டு சிறக்க உதவுமாறு தமிழ்ப் பெருமக்களையும்—சிறப்பாக மாணவ மணிகளையும் விரும்பி வேண்டிக் கொள்கிறோம்.

இங்ஙனம்,

**கோ. வில்வபதி**
தலைவர்.

மாணவர் மன்றம்,
சென்னை-600 001.
14-4-1989

# அதிகார அகரவரிசை

(எண்கள் பக்கங்களைக் குறிக்கும்)

# அறத்துப்பால்

## 1. கடவுள் வாழ்த்து

1. அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

'அ' என்னும் எழுத்தில் இருந்தே எல்லா எழுத்துக்களும் தோன்றின. வரிசை முறையிலும் அகரமே முதல் இடத்தைப் பெற்றிருக்கிறது. அவ்வாறே எல்லாவற்றிற்கும் முற்பட்டவராகிய கடவுளையே இவ்வுலகம் முதலாக உடையது. 1

2. கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்?

தூய்மையான அறிவினையுடைய கடவுளின் சிறந்த திருவடிகளை நாம் வணங்க வேண்டும். அவ்விதம் வணங்காவிட்டால் நாம் கற்ற கல்வியால் பயனில்லை. 2

3. மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

அன்பர்களுடைய மனமாகிய தாமரையில் கடவுள் அமர்ந்திருக்கிறார். அக் கடவுளின் பெருமை வாய்ந்த திருவடிகளை நாம் வணங்கினால் நம் உள்ளத்திலும் அவர் எழுந்தருளியிருப்பார். அதனால் நாம் இந்த உலகத்திலே நெடுங்காலம் இன்பமாக வாழலாம்.

'நிலமிசை' என்பதற்கு மேலுலகம் என்றும் பொருள் கூறுவர். சேர்தல்-இடைவிடாது நினைத்தல். 3

4. வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.

கடவுள் விருப்பு வெறுப்பு இல்லாதவர்; அக் கடவுளை இடைவிடாது வணங்குவதால் நாமும் விருப்பு வெறுப்பு

அற்ற சிறந்த குணத்தை அடையலாம். அதனால் எத்தகைய துன்பங்களும் எந்தக் காலத்தும் நம்மை வந்து அடைய மாட்டா. 4

5. இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

கடவுளுடைய உண்மையான சிறப்புக்களை உணர்ந்து, நாம் அவரை இடைவிடாது வணங்குதல் வேண்டும். அவ்வாறு வணங்கினால் நாம் சென்ற பிறப்பில் செய்த வினைகள், இந்தப் பிறப்பில் செய்த வினைகள் ஆகிய இரண்டும் நம்மை வந்து துன்புறுத்த மாட்டா.

இருள்சேர் - துன்பம் பொருந்திய 'இருவினை' என்பதற்கு நல்வினை, தீவினை என்றும் பொருள் கூறுவர்; புரிதல் - எப்பொழுதும் சொல்லுதல்.

6. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும் ஐந்தின் வழியாகத் தோன்றத்தக்க ஐவகை ஆசைகளையும் இயல்பாகவே வென்று விளங்குபவரே கடவுள். அக்கடவுளின் நல்லொழுக்க வழியைக் கடைப்பிடித்து ஐவகை ஆசைகளையும் அடக்கி வாழ்பவர் இவ்வுலகின் கண் நெடுங்காலம் இனிது இருப்பர்.

'நீடு நிலமிசை வாழ்வார்' என்பதற்கு விண்ணுலகத்தில் நிலைத்து வாழ்வார் என்றும் பொருள் கூறுவர். 6

7. தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.

அறிவு, ஆற்றல், குணம் முதலியவைகளில் தனக்குச் சமம் எவரும் இல்லாத கடவுளின் பாதங்களை இடைவிடாது சிந்தித்தால் நாம் மனக்கவலை சிறிதும் இன்றி வாழலாம். அவ்விதம் நினையாதவர்க்கு மனக்கவலை நீங்குதல் அரிது. 7

8. அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

கடவுள் கடல் போன்று பரந்துள்ள அறச்செயலே வடிவாக உடையவர்; கருணையும் வாய்ந்தவர். அவருடைய

பாதங்களை நாம் இடைவிடாது நினைத்தல் வேண்டும். அவ்விதம் நினைத்தால் கடல் போன்று பரந்துள்ள எல்லாத் துன்பங்களையும் நாம் கடந்து விடலாம். மற்றவர் இத் துன்பங்களைக் கடத்தல் அரிது. 8

9. கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

ஒருவனுக்குக் கண், காது, மூக்கு முதலிய பொறிகள் இருந்தும் அவை பார்த்தல், கேட்டல், முகர்தல் முதலிய தொழில்களைச் செய்யாவிட்டால் அவற்றால் அவனுக்குச் சிறிதும் பயனில்லை. அவ்வாறே எண்வகைக் குணங்களையும் உடைய கடவுளின் பாதங்களை வணங்காத் தலை, கை முதலியன சிறிதும் பயன் அற்றவையே ஆகும்.

கோள் இல் பொறி - (புலன்களைக்) கொள்ளுதல் இல்லாத பொறி; எண் குணம் - மேல் எட்டுப் பாடல்களிலும் கடவுளுக்குக் குறிப்பிட்டுள்ள குணங்கள். 9

10. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

பிறப்பாகிய பெரிய கடலை நாம் கடக்க விரும்பினால் கடவுளின் திருவடிகளை இடைவிடாமல் தியானம் செய்தல் வேண்டும். அவ்வாறு துதிக்காதவர்கள் பிறந்து பிறந்து துன்புறுவர்.

கடவுள் திருவடியாகிய தெப்பத்தைக் கொண்டு பிறவிக் கடலைக் கடத்தல் வேண்டும். 10

## 2. வான் சிறப்பு

1. வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று.

இவ்வுலகத்தில் உள்ள உயிர்கள் யாவும் மழையால் உயிர் வாழ்ந்து வருகின்றன. ஆதலால், மழையானது அவ்வுயிர்களுக்குச் சாவா மருந்து போன்றது. 11

**2. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை.**

*மழையானது உயிர்களுக்குத் தூய்மையான உணவுப் பொருள்களை உண்டாக்கித் தருகிறது; தானும் ஓர் உணவுப் பொருளாக இருந்து உதவுகிறது.*

*துப்பார்க்கு - உண்பவர்க்கு; துப்பு ஆய - சுத்தமான; துப்புஆக்கி - உணவுப் பொருள்களை உண்டாக்கி; துப்பாய தூஉம்-உணவாகி இருப்பதும்.* 12

**3. விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உள்நின்று உடற்றும் பசி.**

*மழை பெய்யவேண்டிய காலத்தில் தவறாது பெய்தல் வேண்டும். அவ்வாறு பெய்யத் தவறுமானால் கடலால் சூழப்பட்ட இந்தப் பெரிய உலகத்தில் பசி மக்களை வருத்தும்.* 13

**4. ஏரின் உழாஅர் உழவர் புயல்என்னும்
வாரி வளங்குன்றிக் கால்.**

*உழவர்கட்கு நீர் வருவாய் மழையின் மூலமாகவே கிடைக்கிறது. மழை பெய்வதில் குறைவு நேர்ந்தால் உழவர்கள் ஏர் உழுது பயிர் செய்யமாட்டார்கள்.* 14

**5. கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை.**

*மழை, பெய்யவேண்டிய காலத்தில் பெய்யாமல் இருந்து மக்களைக் கெடுக்கவும் வல்லது; அங்ஙனம் நீரின்மையால் வருந்தும் மக்களுக்குத் துணையாக இருந்து நீரைப் பொழிந்து அவர்களை வாழ்விக்கவும் வல்லது.* 15

**6. விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண் பரிது.**

*ஆகாயத்திலிருந்து மழைத் துளிகள் விழுதல் வேண்டும்; இன்றேல் மழை பொழியாத அந்த இடத்திலே பசும் புல்லின் சிறு முனையையும் காணமுடியாது.* 16

7. நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின்.

மேகமானது கடலில் உள்ள நீரை முகந்து மழையாகப் பெய்து அக்கடலை நிரப்புகிறது. அஃது அவ்விதம் செய்யாவிடில் நீண்டு பரந்துள்ள கடல் நீரும் தன் இயல்பில் குறைந்து விடும். அந்தக் கடலில் உள்ள உயிர்களும் வாழ மாட்டா.

தடிதல் - குறைத்தல்; எழிலி-மேகம்; நீர்மை - தன்மை; முத்து முதலியன தோன்றுவ தற்கும் மழைநீர் காரணம். 17

8. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.

பெய்யவேண்டிய காலங்களில் மழை பெய்யாவிட்டால் மேலுலகத்தில் உள்ள தேவர்களுக்கும் அன்றாடப் பூசைகள் விழாக்கள முதலியன இங்கே செய்யமுடியாது.

பூசனை - அன்றாட வழிபாடு; சிறப்பு - திருவிழா. 18

9. தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்
வானம் வழங்காது எனின்.

மழை பெய்யவேண்டிய காலங்களில் பெய்யாவிட்டால் இந்தப் பெரிய உலகத்திலே தானம், தவம் என்னும் இரண்டும் நிலைபெற்று நடைபெற மாட்டா. 19

10. நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு.

எப்படிப்பட்டவர்க்கும் நீர் இல்லாமல் உலக வாழ்க்கை நடைபெறாது. அத்தகைய சிறப்பு வாய்ந்த நீரின் பெருக்கு மழை இல்லாமல் உண்டாகாது. 20

## 3. நீத்தார் பெருமை

**1. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து**
**வேண்டும் பனுவல் துணிவு.**

அறநெறியில் வழுவாது நின்று செய்யவேண்டிய கடமைகளையெல்லாம் செய்து பின் இல்லற வாழ்விலிருந்து நீங்கித் துறவறத்தை மேற்கொள்ளும் துறவிகளுடைய பெருமையை எல்லா நூல்களும் மேலானதாகப் போற்ற விரும்பும்.

ஒழுக்கம்-(இங்கே) இல்வாழ்க்கை; நீத்தார்-துறந்தவர்; விழுப்பம்-மேன்மை; பனுவல்-நூல். 21

**2. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து**
**இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.**

துறந்தவர்களுடைய பெருமையின் அளவைக் கண்டறிந்து கூறமுடியாது; கண்டறிய முயல்வது, இவ்வுலகம் தோன்றியதிலிருந்து எத்தனை உயிர்கள் பிறந்து இறந்தன எனக் கணக்கிட முயல்வதற்குச் சமம் ஆகும். 22

**3. இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்**
**பெருமை பிறங்கிற்று உலகு.**

இல்லறம், துறவறம் இவ்விரண்டின் தன்மைகளையும் நன்கு ஆராய்ந்து அறிந்து இல்லறத்தில் தாம் செய்ய வேண்டிய கடமைகளைக் குறைவறச் செய்து துறவறத்தை மேற்கொண்ட பெரியோர்களின் பெருமையே உலகில் உயர்ந்ததாக இருக்கிறது.

இருமை-இல்லறம், துறவறம்; சிலர் பிறப்பு, வீடு எனவும் சிலர் இம்மை, மறுமை எனவும் பொருள் கூறுவர். 23

**4. உரன்என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்**
**வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து.**

மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவைகளின் வழியாக வரும் ஐந்து ஆசைகளும் மதம் பிடித்த யானைகளைப் போன்றவை அவைகளை மனஉறுதி என்னும் அங்குசத்தால் அடக்கிக் காக்கவேண்டும். அவ்வாறு காக்க வல்லவர் வான் உலகம் என்னும் நிலத்திற்கு ஒரு விதை போன்றவர்.

உரன்-மன உறுதி; அறிவு எனினுமாம்; தோட்டி-அங்குசம்; வரன்-உயர்வு; வைப்பு-நிலம். 24

5. ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலும் கரி.

ஐந்து ஆசைகளையும் அடக்கியவன் வல்லமைக்கு, இடம் அகன்ற தேவலோகத்தை ஆட்சி புரியும் இந்திரனே சிறந்த உதாரணமாக விளங்குகின்றான். தவத்திற் சிறந்தவர்க்குத் தேவேந்திர பதவியும் எளிதில் கிடைக்கும். 25

6. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

ஐம்பொறிகளின் வழியாக வரும் ஆசையினை அடக்குதல் போன்ற செய்தற்கு அருமையான செயல்களைச் செய்வோர் பெரியோர் ஆவர். செய்வதற்கு அருமையான செயல்களைச் செய்யாதவர்கள் துறந்தோர் என்று சொல்லிக்கொண்டு இருப்பினும் சிறியோரே ஆவர். 26

7. சுவைஒளி ஊறுஓசை நாற்றம்என்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்தின் மூலமாகத் தொட்டறிதல், சுவைத்தல், பார்த்தல், முகர்தல், கேட்டல் என்னும் ஐந்து ஆசைகள் தோன்றுகின்றன. இந்த ஐந்து ஆசைகளாலும் வரும் நன்மை தீமைகளையறிந்து, அவைகளை அடக்கி ஆள வல்லவனிடமே இவ்வுலகம் அடங்கிக் கிடக்கிறது. இந்த உலகத்தால் அடையவேண்டிய நற்பயனை அவனே அடைய வல்லவன். 27

8. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

துறவிகள் அறிவு நிறைந்த மொழிகளையுடையவர்கள். இவ்வுலகில் அவர்களால் இயற்றப்பட்டுள்ள சிறந்த அறிவு நூல்களே அவர்கள் பெருமையை நன்கு விளக்கிக் காட்டிவிடும்.

மறைமொழி-அறிவு நூல். மந்திர நூல், வேத நூல் என்றும் பொருள் கூறுவர். 28

**9. குணம்என்னும் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது.**

நற்குணத்தினை ஒரு குன்றுக்குச் சமமாகச் சொல்லலாம். நற்குணத்திற் சிறந்த துறவிகள் ஒரு குன்றின்மேல் ஏறி நின்றவர்களைப்போல் எல்லாராலும் அறிந்து பாராட்டப்படக் கூடியவர்கள். அத்தகையோருக்குக் கோபம் சிறிதும் வாராது. வந்தாலும் அக்கோபம் ஒரு கண நேரத்திற்குள் அடங்கிவிடும்.

துறவிகளின் கோபம் கணநேரமே இருக்கக்கூடியதாயினும் அதனை நம்மால் சிறிதும் தடுத்துக்கொள்ள முடியாது என்றும் பொருள் கூறுவர். 29

**10. அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்**
**செந்தண்மை பூண்டொழுக லான்.**

அந்தணர் என்பதற்கு மிக்க கருணையை உடையவர் என்பது பொருள். துறவிகள் எல்லா உயிர்களிடத்தும் கருணை கொண்டு வாழும் குணமுடைவர்கள். ஆதலால், அந்தணர் என்னும் சொல் மிக்க கருணையுடைய துறவிகளுக்கே சிறப்பாகப் பொருந்தும். 30

## 4. அறன் வலியுறுத்தல்

**1. சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு?**

அறம் ஒருவனுக்கு நல்ல மதிப்பினைத் தரும்; செல்வங்களையும் அளிக்கும். ஆதலால், உயிர்களுக்கு நன்மையைத் தருவதில் அறத்தினும் மேம்பட்டது வேறு ஒன்றும் இல்லை. 31

**2. அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை**
**மறத்தலின் ஊங்கில்லை கேடு.**

அறம் செய்வதைக் காட்டினும் மேம்பட்ட செல்வமும் இல்லை. அதனைச் செய்யாது மறத்தலைக் காட்டலும் மிக்க துன்பமும் இல்லை. 32

3. ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்.

நாம் நமக்கு முடிந்த அளவில் சமயம் நேர்ந்த போதெல்லாம் அறச் செயலினை இடைவிடாமல் செய்து வர வேண்டும். 33

4. மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்துஅறன்
ஆகுல நீர பிற.

மனத்தில் சிறிதும் குற்றமில்லாமல் இருத்தலே அறம் ஆகும். மனத்தில் பொறாமை, கோபம் முதலிய குற்றங்களை யெல்லாம் வைத்துக் கொண்டு, நீதி நூல்களில் கூறியுள்ள பிற அறச்செயல்களைச் செய்வதில் சிறிதும் பயன் இல்லை. அப்படிப்பட்ட அறச்செயல்கள் வீண் பெருமைக்காகச் செய்கின்ற ஆரவாரச் செயல்களாகவே முடியும். 34

5. அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்.

பொறாமை, பேராசை, கோபம், கடுஞ்சொல் ஆகிய இந்த நான்கு குற்றங்களையும் நீக்கி நடப்பதே அறமாகும். 35

6. அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை.

'நமக்கு நல்ல காலம் வரும்போது பார்த்துக் கொள்ளலாம்' அல்லது 'நாம் இப்போது இளமை வாய்ந்திருப்பதால் வயது முதிர்ந்தபோது பார்த்துக் கொள்ளலாம்' என்றெல்லாம் காலம் போக்காமல் அறத்தினை உடனே செய்தல் வேண்டும். அவ்வாறு செய்தால் நமக்கு வறுமை, பிணி, மூப்பு முதலியவற்றால் அழிவு நேர்ந்தபோதும் அஃது அழியாத துணையாக இருந்து அந்தத் துன்பங்களைப் போக்கும். 36

7. அறத்தாறு இதுஎன வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தான் இடை.

அறத்தின் பயன் இது என்று நாம் நூல்களைக் கொண்டு ஆராய்ந்து அறிய வேண்டியதில்லை. பல்லக்

கினைச் சுமப்பவனுக்கும் ஊர்பவனுக்கும் இடையில் தோன்றும் உயர்வு தாழ்வு வேறுபாடுகளே அறத்தின் பயனை நமக்கு நேரில் விளக்கிக் காட்டும். 37

**8. வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்**
**வாழ்நாள் வழியடைக்கும் கல்.**

நம் நாளை வீணாக்காமல் என்றும் அறஞ் செய்தல் வேண்டும். அவ்விதம் செய்தால் அந்த அறம் நாம் பிறந்து பிறந்து துன்பம் அடைவதற்குள் வழியை அடைக்கும் கல்லாக இருந்து, என்றும் இன்பம் அடையும்படி செய்யும்.

ஒழிவில்லாமல் அறம்செய்வோர் இல்வுலகில் துன்புறாது மேல் உலகில் இன்புற்றிருப்பர். 38

**9. அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்**
**புறத்த புகழும் இல.**

அறநெறியில் நின்று அதனால் அடையும் இன்பமே இன்பமாகும். அவ்வாறு அறவழியில் அல்லாமல் வேறு தீய வழிகளில் வருவன எல்லாம் இன்பத்துக்குப் புறம்பானவை, துன்பத்தைத் தருபவை. அவற்றால் புகழும் இல்லை. 39

**10. செயற்பால தோரும் அறனே ஒருவற்கு**
**உயற்பால தோரும் பழி.**

ஒருவன் தன் கடமையாகக் கொண்டு தவறாமல் செய்ய வேண்டியது அறச்செயல் ஒன்றேயாகும். அவன் செய்யாமல் நீக்க வேண்டியது தீவினையே ஆகும்.

ஓரும் என்பது அசை நிலை; உயற்பாலது-செய்யாமல் காத்துக் கொள்ள வேண்டியது. 40

# 1. இல்லற வியல்

## 5. இல்வாழ்க்கை

1. இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.

மனைவி மக்களோடு இல்வாழ்க்கை நடத்தும் ஒருவன் இயல்பாகவே உதவவேண்டிய நிலையில் இருப்பவர் பிரமசாரி, வானப் பிரஸ்தன், சந்நியாசி ஆகிய மூவகையினர் ஆவர். அம்மூவகையினருக்கும் அவன் நல்வழியிலேயே தகுந்த துணையாக இருக்க வேண்டும்.

இயல்புடைய மூவர் பெற்றோர், பிள்ளைகள், உடன் பிறந்தார் ஆகிய மூவர் என்றும் கூறுவர்; நல்லாறு-நல்வழி. 41

2. துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.

சுற்றத்தாரால் காக்கமுடியாமல் கைவிடப்பட்டவர், வறுமையால் வருந்துகின்றவர், நோய் நொடி மூப்பு முதலியவற்றால் வருந்தி ஆதரவற்று இறந்தவர் ஆகிய இம்முப்பகுதியினருக்கும் இல்லற நிலையில் இருப்பவன் ஆதரவாக இருந்து செய்யத் தக்கனவற்றைச் செய்தல் வேண்டும். 42

3. தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் தான்என்றாங்கு
ஐம்புலத்தா றோம்பல் தலை.

நீத்தார் வழிபாடு, கடவுள் வணக்கம், புதியவராக வந்தவரை ஆதரித்தல், சுற்றம் தழுவுதல், தன்னைத்தான் காப்பாற்றிக் கொள்ளுதல் என்னும் ஐந்து பகுதிகளையும் பாதுகாப்போடு செய்தல் இல்வாழ்வானுக்கு முதன்மையான செயல் ஆகும்.

தென்புலத்தார்-இறந்து தென் திசையில் கடவுளாக விளங்குபவர்; விருந்து-புதியவர்; ஒக்கல்-சுற்றத்தார்; ஐம்புலம்-ஐந்து இடம்; ஆறு-வழி; ஓம்பல்-பாதுகாத்தல். 43

4. பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.

உலக நிந்தனைக்குப் பயந்து நேர்மையான வழியிலே பொருளைத் தொகுத்தல் வேண்டும். அப்பொருளை ஏனையவர்க்குப் பகுத்து உதவுதல்வேண்டும். மிகுந்ததனைத் தானும் தன் குடும்பத்தாரும் உண்ணுதல் வேண்டும். இல்லற வாழ்க்கை ஒருவனுக்குஇவ்விதம் நிகழ்ந்தால் அவன் குடும்பக் கால்வழி இவ்வுலகில் என்றும் நிலைத்திருக்கும்.

பாத்தூண்-பகுத்து உண்ணுதல்; வழி - கால்வழி, பரம்பரை; எஞ்சல்-ஒழிதல்; எஞ்ஞான்றும்—எப்போதும். 44

5. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

இல்வாழ்வான் என்பவன் எல்லோரிடத்தும் அன்பாக இருக்கும் தன்மையும், நல்வழியில் ஒழுகும் செயலும் உடையவனாக இருத்தல் வேண்டும். அவ்விதம் இருத்தலே இல்வாழ்க்கையின் சிறந்த தன்மை ஆகும். அவ்வாழ்க்கையில் அடையும் பயனும் அதுவே ஆகும். 45

6. அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன்?

நீதி நூல்களில் கூறியுள்ளபடி ஒருவன் இல்வாழ்க்கையைத் தவறாது நடத்தி வருவானானால் அவன் பிறகு துறவறத்திற்குச் செல்ல வேண்டிய அவசியமே இல்லை. இவ்வுலக இன்பம், மறுவுலக இன்பம் எல்லாவற்றையும் இல்வாழ்க்கையிலிருந்தே அவனால் அடைய முடியும். 46

7. இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை.

இவ்வாழ்க்கையில் இருந்து அவ்வில்வாழ்க்கைக்கு உரிய இயல்போடு கூடி வாழ்வது சிறப்புடையது. அவ்வாறு வாழ்பவன் ஐம்புலன்களையும் அடக்கித் தம் வயப்படுத்த முயற்சி செய்யும் எல்லாரினும் சிறந்தவன் ஆவான்.

முயல்வார்-ஐம்புலன்களையும் அடக்கித் தம் வயப்படுத்த முயற்சி செய்பவர்; அறிய முயல்பவர் என்றும் கூறுவர். 47

**8. ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை**
**நோற்பாரின் நோன்மை உடைத்து.**

தவம் செய்பவர்களைத் தவ ஒழுக்கத்தில் நிலைத்திருக்கச் செய்பவன் இல்வாழ்க்கை நடத்துபவனே ஆவன். அவன் அங்ஙனம் செய்தலோடு அவ்வில்வாழ்க்கைக்குரிய நெறியிலிருந்து தவறாமலும் இருப்பானாயின் அவனது இல்வாழ்க்கை தவம் செய்பவர்களுடைய நிலையைக் காட்டிலும் மிக்க பொறுமையை உடையதாகும்.

ஆறு-தவ ஒழுக்கம்; ஒழுக்கி-நடத்தி; அறன்-இல்லற நெறி; இழுக்காத-தவறாத; நோற்பார்-தவம் செய்வோர்; நோன்மை-பொறுமை; வலிமை என்றும் கூறுவர். 48

**9. அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்**
**பிறன்பழிப்ப தில்லாயின் நன்று.**

இல்லறம், துறவறம் ஆகிய இரண்டனுள் அறன் எனச் சிறப்பித்துச் சொல்லப்பட்டது இல்வாழ்க்கையேயாகும். துறவறமும் பிறனால் பழிக்கப்படாத பெருமையுடையதானால் இல்வாழ்க்கையைப் போலவே சிறப்புடையதாகும்.

'அஃதும்' என்னும் சொல் துறவறத்தைக் குறிக்கும். இச்சொல் இல்வாழ்க்கையையே குறிக்கும் என்றும் கூறுவர். 49

**10. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்.**

இந்நிலவுலகத்தில், இல்வாழ்க்கையில் இருந்து வாழ வேண்டிய முறைப்படி ஒருவன் வாழ்வானாயின் அவன் மனிதனே யானாலும், வானுலகத்தில் வாழ்கின்ற தேவருள் ஒருவனாக மதிக்கப்படுவான். 50

## 6. வாழ்க்கைத் துணைநலம்

**1. மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.**

ஒரு நல்ல மனைவி இல்லற வாழ்க்கைக்குத் தகுந்த நற்குண நற்செய்கைகளையும், தன் கணவனது வரு

வாய்க்குத் தக்க வாழ்க்கையையும் உடையவளாய் இருத்தல் வேண்டும். அத்தகைய மனைவி இல்லற வாழ்க்கைக்கு ஒரு சிறந்த துணையாவாள். 51

**2. மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித் தாயினும் இல்.**

இல்லற வாழ்க்கைக்குத் தகுந்த நற்குண நற்செய்கைகள் ஒரு மனையாளிடத்தில் அமைந்திருத்தல் வேண்டும். இல்லையானால் அந்த இல்லற வாழ்க்கை எப்படிப்பட்ட பெருமையை உடையதானாலும் பயனற்றதாகும். 52

**3. இல்லதென் இல்லவள் மாண்பானால்? உள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை?**

நற்குண நற்செய்கைகளையுடைய மனைவியைப் பெற்ற கணவனிடத்து இல்லாத செல்வம் இல்லை. மனைவினிடத்து நற்குண நற்செய்கைகள் இல்லையானால் கணவனிடத்து எந்தச் செல்வமும் இருப்பதாகக் கொள்ளமுடியாது.

இல்லது-இல்லாத பொருள்; இல்லவள்-வீட்டிற்கு உரியவள் (மனைவி); உள்ளது-இருக்கின்ற பொருள்; மாணாக்கடை-நற்குண நற்செய்கைகளால் பெருமையடையாத போது. 53

**4. பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மைஉண் டாகப் பெறின்?**

அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றினையும் அடைவதற்குத் துணையாய் இருப்பவள் கற்புடைய மனைவி. ஒருவன் அடையக்கூடிய பொருள்களுள் அப்படிப்பட்ட கற்புடைய மனைவியினும் உயர்வாகிய பொருள் வேறு ஒன்றும் இல்லை.

பெருந்தக்க-பெரிய தகுதியினையுடைய பொருள்கள்; யா-எவை; திண்மை-கலங்கா நிலைமை. 54

**5. தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை.**

ஒரு மனைவி கடவுளை வழிபடாவிட்டாலும் எல்லாத் தெய்வமும் தன் கணவனே என்று கருதி அவனை முறை

தவறாது வழிபடுவாளாயின், அவள், 'பெய்' என்று சொல்ல மழை பெய்யும்.

மழை மட்டுமல்லாமல் பிற இயற்கைப் பொருள்களும் அவள் சொல்வழிப் பணியாற்றும் என்றும் கூறுவர். 55

6. தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

கற்பினின்றும் வழுவாமல் தன்னைத் தானே காத்துக் கொள்வது ஒரு மனைவியின் கடமை. தன்னை மனைவியாகக் கொண்ட கணவனை உணவு முதலியவற்றால் உபசரிப்பது அவளது இயல்பு. தன்னிடத்தும் தன் கணவனிடத்தும் நன்கமைந்த புகழ் தம்மை விட்டு நீங்காத வகையில் நற்குண நற்செயல்களை மறவாது இல்வாழ்க்கை நடத்துதல் அவளது பெருமை. இத்தகைய இயல்புகள் வாய்ந்தவளே பெண்.

பேணுதல்-உபசரித்தல்; தகைசான்ற-நன்மையமைந்த; சொல்-புகழ்; சோர்வு-மறத்தல். 56

7. சிறைகாக்கும் காப்பெவன் செய்யும்; மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை.

மதில், வாயிற் காவல் முதலியவற்றால் பெண்களைக் காவல் செய்வது என்ன பயனைத் தரும்? அவர்கள் தமது நெஞ்சைக் கற்பு நெறியில் நிறுத்தித் தம்மைத் தாமே காத்துக் கொள்ளும் காவலே மேலான காவலாகும்.

சிறை-மதிற் காவல், வாயிற் காவல் முதலியன; நிறை-நெஞ்சைக் கற்பு நெறியில் நிறுத்துதல்; தலை-மேன்மையுடையது.

8. பெற்றான் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு.

தம் கணவரை முறையோடு உபசரிக்கும் இயல்பினைப் பெற்ற மனைவியர் தேவர்கள் வாழ்கின்ற உலகத்திலே இருப்பதாகக் கூறப்படும் பெரிய சிறப்புக்களையும் இவ்வுலகத்திலேயே பெறுவர்.

பெற்றான்- (மனைவியாகப்) பெற்றவன், கணவன்; பெறின்-(உபசரிக்கும் இயல்பைப்) பெற்றால்; புத்தேளிர்-தேவர்கள்.

இக்குறட்பாவினுக்குக் "கணவரை உபசரிக்கும் மனைவி யர் தேவருலகத்தில் தேவர்களால் மிக்க சிறப்புச் செய்யப் படுவர்" என்றும் பொருள் கூறுவர். 58

9. புகழ்புரிந்த இல்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை.

புகழை விரும்புகின்ற மனைவியைப் பெறாதவர்கள் தம்மை இகழும் தம் பகைவர் முன்னே சிங்க ஏறுபோலப் பெருமிதத்தோடு நடக்க முடியாது.

புரிந்த-விரும்பிய; இல்-மனைவி; ஏறு-ஆண் சிங்கம்; பீடு-பெருமை. 59

10. மங்கலம் என்ப மனைமாட்சி; மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.

ஒரு கணவனுக்கு அவனுடைய மனைவியின் நற்குண நற் செய்கைகளே நன்மை தருவன என்பர். அந்த நற்செய்கை களுக்கு அழகு செய்யும் அணியாவது நல்ல புதல்வரைப் பெறுதல்.

மங்கலம்-நன்மை; மனை-மனைவி; மாட்சி- பெருமை யைத் தரும் நற்குண நற்செயல்கள்; கலம்- அணி. 60

## 7. புதல்வரைப் பெறுதல்

1. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற.

ஒருவன் அடைதற்குரிய செல்வங்களுள் சிறந்தது அறிவிற் சிறந்த குழந்தைகளைப் பெறுதலேயாகும். குழந்தைச் செல்வம் அல்லாத, மண், பொன் முதலிய பிற செல்வங்களைக் குழந்தைச் செல்வத்திலும் சிறந்த செல்வ மாக மதிப்பதற்கில்லை.

பேறு-செல்வம்; அறிவு அறிந்த-அறியவேண்டியவை களை அறிதற்குரிய; மக்கள்-ஆண், பெண் குழந்தைகள். 61

2. எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

பிறரால் பழிக்கப்படாத நற்குணங்களையுடைய புதல்வர்களைப் பெற்றவர்களை ஏழு பிறப்புக்களிலும் துன்பங்கள் அணுகா.

எழு பிறப்பு-ஏழு வகைப் பிறப்பு. ஏழு தலைமுறைகள் எனவும் பொருள் கூறுவர்; பிறங்குதல்- அதிகரித்தல். 62

3. தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையால் வரும்.

மக்களுடைய நல்வினையினாலே விளையும் பொருள் அவர்தம் பெற்றோரைச் சேரும். எனவே, மக்கட் செல்வமே ஒருவருக்குச் சிறந்த செல்வமாகும். அச்செல்வம் பெற்றோர் செய்த நல்வினைப் பயனால் அவரை வந்து அடையும். 63

4. அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.

தாய் தந்தையர் உண்ணும்போது அவர்தம் குழந்தைகள் உடனிருந்து தம் சிறிய கைகளால் துழாவிய உணவானது சுவையினால் மிகுந்த அமிழ்தத்தினும் மிக்க இனிமை யுடையதாம். 64

5. மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம்; மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.

தம்முடைய குழந்தைகளின் உடம்பைத் தொடுவது தாய் தந்தையரின் உடம்புக்கு இன்பம் தரும். குழந்தைகள் பேசும் சொற்கள் அவர்தம் தாய் தந்தையரின் செவிக்கு இன்பம் அளிக்கும்.

தம் குழந்தைகள் தம் உடம்பைத் தொடும்போது தாய் தந்தையரின் உடம்பு இன்பமடையும் என்று பொருள் கூறுவர். 65

6. குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்.

குழலோசையும் யாழிசையும் இனிமையுடையன. ஆனால், தம் குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்டு இன்புற்ற பெற்றோர் அம்மழலைச் சொற்கள்

குழலோசையினும் யாழிசையினும் இனிமையுடையன என்பர். தம் குழந்தையின் மழலைச்சொற்களைக் கேளாதவரே குழலோசையும் யாழிசையும் இனியன என்பர். 66

7. தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்.

தந்தை தன் மகனுக்குச் செய்யும் நன்மை ஒன்று உண்டு. அது கற்றவர் கூடிய அவையிலே தன் மகன் மேம்பட்டிருக்கும்படி அவனைக் கல்வி யறிவுடையனாக்குதல். 67

8. தம்மில்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது.

தம் மக்கள், இயல்பாகிய அறிவோடு கல்வியறிவையும் பெற்றிருத்தலைக் கண்டு பெற்றோர் மகிழ்வர். ஆனால்; அவ்வறிவுடைமையை அறிந்து, இந் நிலவுலகத்தில் நிலைபெற்ற கல்வி யறிவுடையார், பெற்றோரினும் பெரு மகிழ்ச்சி கொள்வர்.

தம்மில்-தம்மைக் காட்டிலும்; மாநிலம்-பெரிய உலகம்; மன்னுயிர்-நிலைபெற்ற கல்வி யறிவுடையோர். தம்மில் தம் மக்கள் அறிவுடைமை-'தம்மினும் தம் மக்கள் அறிவிற் சிறந்து விளங்குதல்' என்றும் பொருும் கூறுவர். 68

9. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்.

குழந்தையைப் பெறும்போது தாய் அடையும் துன்பம் பெரிது ஆயினும், தான் பெற்ற குழந்தை ஆண் குழந்தை என்பதை அறிந்ததும் அவள் அடையும் மகிழ்ச்சியும் பெரிது. இம்மகிழ்ச்சியிலும் தன் மகன் கல்வி கேள்விகள் நிறைந்தவன் எனச் சான்றோர் சொல்லக் கேட்கும்போது அந்தத் தாயின் மகிழ்ச்சி அளவுகடந்து நிற்கின்றது. 69

10. மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்எனும் சொல்.

தன்னைக் கல்வியுடையவனாக்கிய தன் தந்தைக்கு மகன் செய்யும் நன்மை ஒன்று உண்டு; அது தன் அறிவையும் ஒழுக்கத்தையும் கண்டவர், "இவனைப் பெறுதற்கு இவன் தந்தை என்ன நல்வினை செய்தானோ?" என்று சொல்லும் படியாகத் தன்னை ஆக்கிக் கொள்ளுதலாம். 70

## 8. அன்புடைமை

**1. அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.**

எவரும் தம்மிடத்திலுள்ள அன்பினைப் பிறர் அறியாதவாறு மறைத்துத் தாழ்ப்பாள் இடமுடியாது. ஒருவர் எவரிடத்து அன்பு கொண்டுள்ளாரோ, அவர் துன்பப்படுவதைக் காணும்போது அன்புடையவருடைய கண்களிலிருந்து நீர் வழியும். அக்கண்ணீரே அவரிடத்துள்ள அன்பைப் பலரும் அறியக் காட்டிவிடும். 71

தாழ்-தாழ்ப்பாள்; பூசல் தரும்-வெளிப்படுத்தும்.

**2. அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.**

அன்புடையார் பிறர்க்குப் பயன்படுவார்; தமக்கென ஒன்றையும் விரும்பார்; தமது உடம்பும் பிறர்க்குப் பயன்படுமாயின் அவ்வுடம்பையும் அவர்க்கு அளிப்பார். அன்பில்லாதவர் பிறர்க்குப் பயன்படார்; எல்லாப் பொருள்களும் தமக்கு உரியனவென்று கொள்வார்.

என்பு-எலும்பு; (இங்கு எலும்போடு கூடிய உடம்பைக் குறிக்கும்.) 72

**3. அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு.**

மக்களாகப் பிறந்த ஒவ்வொருவரும் பிறரிடத்து அன்பாய் இருக்கவேண்டும். மக்கள் அவ்வாறு அன்பு செய்தல் பொருட்டே உயிர் உடலோடு தொடர்பு கொண்டுள்ளது. 73

**4. அன்பீனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு.**

அன்பு பிறரிடத்து விருப்பத்தைத் தோற்றுவிக்கும்; அவ்விருப்பம் எல்லாரும் அவருக்கு நண்பர் என்று சொல்லும்படியான அளவிறந்த சிறப்பையும் அளிக்கும்.

5. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு.

இவ்வுலகத்தில் தம் உற்றார் உறவினரோடு அன்பினால் பிணைக்கப்பட்டுஇனிதே இல்வாழ்க்கை நடத்தி மகிழ்ந்தவர் விண்ணுலகத்தும் இன்புறுவர். அவர் வானுலகத்தே அடையும் சிறப்பு, அவர் மண்ணுலகத்தே நடத்திய அன்பு வாழ்க்கையின் விளைவேயாம்.

இக்குறளுக்கு "இவ்வுலகத்தில் இன்பத்தோடு வாழ்வார் அடையும் பெருஞ் சிறப்பு அவர் முற்பிறவியில் பிறர்பால் செலுத்திய அன்பின் விளைவே யாம்," என்றும் பொருள் கூறுவர். 75

6. அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.

அறியாதார் அறச்செயல்கள் மட்டுமே அன்பின் விளைவு எனக் கூறுவார். மறச்செயலை நீக்கவும் அன்பு துணை செய்கிறது. ஒருவன் செய்த பகைமைபற்றி மனத்திலே மறச் செயல் தோன்றியபோது அவனை நட்பாகக் கருதி அம்மறச் செயல் எண்ணத்தைப் போக்குவதும் அன்பேயாம்.

அறத்திற்கு - அறச்செயல்கள் செய்வதற்கு; சார்பு-துணை; மறத்திற்கு-மறச்செயகளை நீக்குவதற்கு. 76

7. என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.

எலும்பே யில்லாத உடலையுடைய புழுவைக் காய்ந்து கொல்லும் வெயில்போல் அன்பில்லாதவர்களை அறக்கடவுள் வருத்தும்.

8. அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று.

அன்பில்லாத ஒருவன் இல்வாழ்க்கை நடத்துதல் பாலைவனத்தில் உலர்ந்ததாகிய மரமொன்று தளிர்ப்பது போன்றது. பட்டுப்போன மரம் பாலைவனத்தில் தளிர்க்காது. அது போலவே அன்பில்லாத இல்வாழ்க்கையும் நடைபெற முடியாது.

வன்பால்-வலிய பாலை நிலம்; தளிர்த்தற்று-தளிர்த்தது போன்றது.

9. புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பண்பி லவர்க்கு?

ஒருவனுடைய மனத்தின்கண் இருக்கவேண்டிய சிறந்த உறுப்பு அன்பேயாம். இடமும், பொருளும், ஏவல் செய்வோரும் ஆகிய வெளியுறுப்புக்கள் அன்பின் துணைகொண்டே பயன்படுவன. அந்த அன்பு ஒருவனிடத்து இல்லையாயின் அவற்றால் பயன் இல்லையாம்.

புறத்துறுப்பு-கை, கால், கண், செவி முதலிய உறுப்புக்களுமாம். 79

10. அன்பின் வழிய துயிர்நிலை அஃதுஇலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.

அன்பின் வழி நின்ற உடலே உயிரோடு கூடிய உடலாகும். அன்பின் வழிச் செல்லாதவருடைய உடல் உயிரோடு கூடிய உடலன்று; அஃது எலும்பைத் தோலால் போர்த்த உடலாகும்.

வழியது-வழி நிற்பது (இங்கு வழி நிற்கும் உடல்); உயிர்நிலை-உயிர் நிலைத்திருக்கும் இடம், உடல். 80

## 9. விருந்தோம்பல்

1. இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

மனைவி மக்களோடு வீட்டில் இருந்து, பொருள் சம்பாதித்து நாம் வாழ்ந்து வருவது எதற்காக எனில் நம் வீட்டிற்குப் புதிதாக வருகின்றவர்களைப் பெருமைப்படுத்தி அவர்கட்கு வேண்டிய உதவிகளைப் புரிதற் பொருட்டே ஆகும்.

ஓம்புதல்-பாதுகாத்தல்; விருந்து-நமக்கு முன் பின் தெரியாத அயலார்; வேளாண்மை-உதவி. 81

2 விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

புதிதாக நம்மை நோக்கி வந்த ஒருவர் நம் வீட்டின் வெளிப்புறத்திலே பசியோடிருக்க, நாம் உண்ணும் உணவு

என்றும் இறவாமலிருக்கச் செய்யும் தேவாமிர்தமாக இருந்தாலும் விரும்பத்தக்கது அன்று. 82

3. வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று.

தன்னை நாடி வருகின்ற விருந்தினர்களை நாள் தோறும் வரவேற்று, அவர்கட்கு வேண்டுவன அளித்து, அவர்களைப் போற்றிவரும் இயல்புடையவனின் இல் வாழ்க்கை எந்தக் காலத்திலும் வறுமையால் வருந்திக் கெடுவதில்லை. 83

4. அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல்.

நல்ல விருந்தினர்களை முகமலர்ச்சியோடு உபசரிக்கும் இயல்புடையவனின் இல்லத்தில் திருமகள் உள்ளம் மகிழ்ந்து தங்கியிருப்பாள்.

அகன் அமர்ந்து-மனத்தில் மகிழ்ச்சி பொருந்தி. 84

5. வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்.

விருந்தினரை உண்ணும்படி செய்து உபசரித்து அவர் உண்டு மிகுந்ததைத் தானும் தன் குடும்பத்தாரும் உண்ணும் இயல்புடையவன் நிலத்துக்கு விதை விதைத்தலும் வேண்டுமோ? (வேண்டுவதில்லை; தானே விளையும்.) 85

6. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

தன்னிடத்து வந்து செல்லும் விருந்தினர்களை உபசரித்து அவர்களை வழிகூட்டி அனுப்பிவிட்டு, மேலும் வரக்கூடிய விருந்தினருக்காக எதிர்பார்க்கும் இயல்புடையவனை மேலுலகத்திலுள்ள இந்திரன் முதலிய தேவர்கள் ஒரு விருந்தினனாகப் பாவித்து அவனுக்கு மதிப்புத் தந்து அவனைப் போற்றிப் புகழ்வார்கள். 86

7. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.

விருந்தினரை உபசரித்தலால் ஆகிய பயன் இன்ன அளவினது என்று அளவிட்டுச் சொல்வதற்கில்லை. அவ்விருந்தினரின் குண நலன்களுக்குத் தக்கபடி அந்தப் பயன் விளையும்.

இனைத்துணைத்து - இன்ன அளவினை யுடையது; துணை - அளவு; துணைத்துணை - (குண நலன்களின் அல்லது தகுதியின்) அளவே அளவாகும்; வேள்வி - உதவி. 87

**8. பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி வேள்வி தலைப்படா தார்.**

விருந்தினரை உபசரித்து, அதனால் ஆகிய பலனை அடைய முயலாதவர்கள் வருந்தித் தேடிப் பாதுகாத்த தம் பொருளை இழந்து, "எத்தகைய ஆதரவும் இல்லாதவராய் இருக்கின்றோம்" என்று சொல்லி வருந்தக்கூடிய நிலையில் இருப்பர்.

பற்றற்றேம் - ஆதரவற்ற நிலையில் இருக்கின்றோம்; விருந்தினருக்கு உதவாத பொருள் தம்மாலும் அனுபவிக்கப் படாமல் தொலைந்து போகும் என்பது கருத்து. 88

**9. உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா மடமை மடவார்கண் உண்டு.**

விருந்தினரை உபசரியாமல் இருக்கும் அறியாமையை உடைய ஒருவன் செல்வத்தைப் பெற்றிருந்தாலும் அச்செல்வம் அவனிடத்து இல்லாமைக்குச் சமமாகும். விருந்தினரை உபசரியாமல் இருக்கும் பேதைமையான செயல அறிவில்லாதவர்களிடத்திலே இருக்கும். 89

**10. மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து நோக்கக் குழையும் விருந்து.**

அனிச்ச மலரானது மோந்தால்தான் வாடிப்போகும். விருந்தினரின் முகமாகிய மலரோ, முகம் வேறுபாட்டோடு ஒருமுறை நோக்கிய உடனே வாடிப் போய்விடும்.

விருந்தினர் அனிச்ச மலரினும் மென்மையான உள்ளம் வாய்ந்தவர் என்பது பொருள். 90

## 10. இனியவை கூறல்

1. இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

இன்சொற்களாவன அன்பு கலந்து வஞ்சனை அற்றவைகளாய், மெய்ப்பொருள் உணர்ந்தவர்களின் வாயிலிருந்துவரும் சொற்களாகும்.

ஈரம்-அன்பு; அளைஇ-கலந்து; படிறு-வஞ்சனை; செம்பொருள்-உண்மைப் பொருள். 91

2. அகன்அமர்ந்து ஈதலின் நன்றே முகன்அமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின்.

முகமலர்ச்சியோடு இனிமையான சொற்களைச் சொல்லுங் குணமானது வாய்க்கப் பெற்றால், அது மன மகிழ்ந்து ஒரு பொருளை உதவும் ஈகைக் குணத்திலும் சிறந்ததாகும்.

அகன்-மனம்; அமர்ந்து-விரும்பி, மகிழ்ந்து. 92

3. முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம்.

முகத்தினால் மகிழ்ச்சி பொருந்தி இனிமையாகப் பார்த்து, மனம் உவந்து தோன்றும் இனிய சொற்களைச் சொல்வதே அறமாகும்.

அமர்ந்து - (மகிழ்ச்சி) பொருந்தி; அகத்தான் ஆம்-மனத்தினிடத்ததாகிய; சொலினது-சொல்லைச் சொல்லுதலின் கண்ணது. 93

4. துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

எல்லாரிடத்தும் மகிழ்ச்சியை விளைவிக்கும் இனிய சொற்களைச் சொல்ல வல்லார்க்குத் துன்பத்தை விளைவிக்கும் வறுமை நிலை இல்லையாகும். 94

5. பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற.

ஒருவனுக்கு அழகினை அளிப்பது அவன் பிறரிடம் வணக்கம் உடையவனாகவும், இன்சொல் பேசுபவனாகவும் இருத்தலே ஆகும். இவையல்லாத மற்றவை அவனுக்கு அழகைத் தாரா. 95

6. அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.

ஒருவன் பிறருக்கு நன்மை உண்டாகும் சொற்களை ஆராய்ந்து அவைகளை இனிமையான தன்மையில் சொல்லுவானேயானால் அதனால் அவனுக்குத் தீமைகள் குறைய, நன்மைகள் பெருகும்.

அல்லவை-நன்மையல்லாதவை, தீமைகள்; அறம்-நன்மையைத் தரும் செயல்கள். சிலர் அறம் என்பதற்குப் புண்ணியம் என்றும், அல்லவை என்பதற்குப் பாவம் என்றும் பொருள் கொள்வர். 96

7. நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல்.

நன்மையும் தந்து, இனிமையான தன்மையிலிருந்தும் நீங்காமலிருக்கும் சொல்லானது அச்சொல்லைக் கேட்போருக்கு நன்மையைத் தருவதோடு, சொல்லுவோனுக்கும் இன்பத்தை அளித்து நன்மையைத் தரும்.

நயன்-நன்மை, இனிமை, இன்பம்; நீதி என்றும் பொருள் கூறுவர்; பயன் ஈன்று-நன்மையைத் தந்து; பண்பு-குணம் (இங்கே இனிமைக் குணம்); தலைப்பிரியா-நீங்காத. 97

8. சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும்.

பிறரால் இகழப்படாத, நன்மையைத் தரத்தக்க, இனிமையான சொற்கள் அவற்றைச் சொல்லுவோனுக்கு இந்தப் பிறவியிலும், இதற்கு அடுத்த பிறவியிலும் இன்பம் தரும்.

சிறுமை-இழிவு; மறுமை-மறுபிறப்பு; இம்மை-இந்தப் பிறப்பு. 98

9. இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது?

பிறர் கூறும் இனிய சொற்கள் தனக்கு இன்பம் விளைவிப்பதை உணரும் ஒருவன் அத்தகைய இனிமையான சொற்களைச் சொல்லாமல் அவற்றிற்கு மாறாக உள்ள கடுஞ்சொற்களைப் பிறரிடம் வழங்குவது என்ன காரணம் கருதியோ? 99

10. இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

நன்மையைத் தரத்தக்க இனிமையான சொற்கள் இயல்பிலேயே அமைந்திருக்க, அத்தகைய சொற்களைக் கூறாது தீமையைத் தரத்தக்க இனிமையல்லாத சொற்களைக் கூறுதல நன்றாகப் பழுத்த பழம் கையிலே இருக்க அவற்றை விடுத்து, மரத்திலே உள்ள காயினைப் பறித்துத் தின்பதற்கு ஒப்பாகும்.

இன்னாத-துன்பத்தைத் தரத்தக்க; கவர்தல்-பறித்தல்; அற்று - அப்படிப்பட்டது.

இனிய கனிகள் என்பதற்கு ஔவை யுண்ட நெல்லிக் கனிபோல் உண்டாரை நீண்டநாள் வாழச்செய்யும் அமிழ்தமயமான கனிகள் என்றும், இன்னாத காய்கள் என்பதற்கு உண்டவரைக் கொல்லும் எட்டிக் காய் போன்ற நஞ்சான காய்கள் என்றும் கூறலாம். 100

## 11. செய்ந்நன்றி அறிதல்

1. செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.

தான் எத்தகைய உதவியும் முன்பு செய்யாமலிருக்கத் தனக்கு மற்றொருவன் செய்த உதவிக்குப் பதில் உதவியாக அவனுக்கு இந்த மண்ணுலகத்தையும், விண்ணுலகத்தையும் கொடுத்தாலும் அவன் செய்த உதவிக்கு அவை ஈடாக மாட்டா.

செய்ந்நன்றி அறிதல் - தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாமை. 101

2. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

ஒருவனுக்கு மிகவும் அவசியமான காலத்தில் பிறனொருவன் செய்த உதவியானது சிறியதாக இருநதாலும் அவன் உதவி செய்த நேரத்தை நோக்கும்போது அச்சிறிய உதவி உலகத்தினும் மிகவும் பெரியது ஆகும்.

காலம்-(ஒருவனுக்கு மிகவும் இன்றியமையாத) சமயம்; ஞாலம்-பூமி; மாணப் பெரிது-மிகவும் பெரியது. 102

3. பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது.

இதைச் செய்தால் இன்ன பயன் நமக்குக் கிடைக்கும் என்ற பயனை ஆராய்ந்து பார்க்காமல் செய்த உதவியின் நன்மையை ஆராய்ந்து பார்த்தால் அவ்வுதவியினால் வரும் நன்மை கடலைவிடப் பெரியது ஆகும்.

தூக்குதல்-ஆராய்ந்து பார்த்தல் ; நயன்-நன்மை. 103

4. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்.

ஒருவன் தமக்குத் தினை அரிசி போன்ற மிகச் சிறிய அளவுள்ள நன்மையைச் செய்தான் எனினும் அந்த நன்மையினால் விளையத் தக்க பயனை அறிந்து கொள்ளத் தக்கவர் அதனைப் பனம்பழம் போன்ற பெரிய அளவுள்ள உதவியாகக் கொண்டு அவனைப் பெருமைப்படுத்துவர்.

தினை-தினை அரிசி; தினை, பனை-சிறுமைக்கும் பெருமைக்கும் எடுத்துக்காட்டுக்கள்; துணை-அளவு. 104

5. உதவி வரைத்தன்று உதவி; உலவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

ஒருவர் மற்றவருக்குச் செய்யும் உதவியை அவ்வுதவியின் அளவாகக் கருதுதல் கூடாது. அவ்வுதவியைப் பெற்றுக் கொண்டவருடைய தகுதியின் அளவையே அவ்வுதவியின் அளவாகக் கருதுதல் வேண்டும்.

வரைத்து-அளவுடையது; சால்பு- தகுதி, குணம். 105

**6. மறவற்க மாசற்றார் கேண்மை; துறவற்க**
**துன்பத்துள் துப்பாயார் நட்பு.**

அறிவு ஒழுக்கங்களில் குற்றமற்றவருடைய நட்பினை மறவாமல் இருப்பாயாக. துன்பம் வந்த காலத்திலே உனக்கும் பேராதரவாய் இருந்தவரது நட்பை நீங்காம லிருப்பாயாக.

துறவற்க-நீங்காமலிருப்பாயாக; துப்பாயார்-பேராதர வாக இருப்பவர். 106

**7. எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்**
**விழுமம் துடைத்தவர் நட்பு.**

தமக்குற்ற துன்பத்தை நீக்கியவருடைய நட்பினை ஏழு வகையாகத் தொடர்ந்து வரும் எல்லாப் பிறப்புக்களி லும் மறவாமல் நினைப்பர் நல்லோர்.

எழுமை எழு பிறப்பும்-ஏழு வகையாகத் தோன்றும் எல்லாப் பிறப்புக்களும்; விழுமம்-துன்பம். 107

**8. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது**
**அன்றே மறப்பது நன்று.**

ஒருவர் செய்த உதவியை மறப்பது நல்ல குணம் அன்று. பிறர் செய்த தீமையை அப்பொழுதே மறந்து விடுவது நல்லதாகும். 108

**9. கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த**
**ஒன்றுநன்று உள்ளக் கெடும்.**

முன்பு நமக்கு ஒரு நன்மையைச் செய்தவர் பிறகு நம்மைக் கொல்வதைபோன்ற பெரிய துன்பங்களைச் செய் தாராயினும், முன்பு அவர் செய்த அந்த ஒரு நன்மையை நினைத்துப் பார்த்தால், பின்பு அவர் செய்த அந்தத் தீமை களெல்லாம் தீமையில்லாதனவாக ஒழிந்துவிடும்.

கொன்றன்ன இன்னா - கொலை செய்தாலொத்த துன்பங்கள்; உள்ள-நினைத்துப் பார்க்க. 109

**10. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு.**

எந்தகைய நற்செயல்களை அழித்துத் தீமைகள் செய்தவர்க்கும் அத்தீமைகளிலிருந்து தப்பிப் பிழைக்க வழி உண்டாகும். ஒருவர் செய்த உதவியை மறந்து அவருக்குத் துன்பத்தைச் செய்தவனுக்கு அத்துன்பத்திலிருந்து தப்பிப் பிழைக்க வழியே இல்லை.

நன்றி கொன்றார்-நற்செயல்களை அழித்தவர்; உய்வு-தப்பிப் பிழைக்கும் வழி; மகற்கு-மகனுக்கு. 110

## 12. நடுவு நிலைமை

1. தகுதி எனஒன்று நன்றே பகுதியால்
பாற்பட்டு ஒழுகப் பெறின்.

வேண்டியவர், வேண்டாதவர், அயலார் ஆகிய மூவகையினரிடத்தும், ஒருவர் நடுவு நிலைமைக்குரிய முறைமையோடு இருந்து நடப்பதாக இருந்தால் நடுவு நிலைமை என்னும் அந்த ஒன்றே நன்மையைத் தரும்.

தகுதி-நடுவு நிலைமை; பகுதி-அயலார், நண்பர், பகைவர் என்னும் பாகுபாடு; பாற்பட்டு-முறைமையோடு, பொருந்தி; நடுவு நிலைமை-நண்பர், பகைவர், அயலார் எல்லாரிடத்தும் அறத்தில் வழுவாது ஒரே தன்மையாக நடத்தல். 111

2. செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து.

நடுவு நிலைமை உடையவனது செல்வம் மற்றவர் செல்வம் போல் அழிந்து போகாமல் அவன் சந்ததியாருக்கும் உறுதி தரவல்லது.

செப்பம்-நடுவு நிலைமை; எச்சம்-சந்ததி; சிதைவு-அழிவு; ஏமாப்பு-உறுதி, இன்பம். 112

3. நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்.

நடுவு நிலைமை தவறியதால் கிடைத்த செல்வம் தீங்கு செய்யாமல் நன்மையே தருவதாக இருந்தாலும் அது கிடைத்த அப்போதே அதனை ஒழியவிடுதல் வேண்டும். 113

4. தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப் படும்.

இவர் நடுவு நிலைமை உடையவர், இவர் நடுவு நிலைமை இல்லாதவர் என்பதனை அவரவருக்குப் பின் எஞ்சி நிற்கக் கூடிய புகழைக் கொண்டும், பழியைக் கொண்டும் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

தக்கார்-நடுவு நிலைமை உடையவர்; தகவிலர்-நடுவு நிலைமையில்லாதவர்; எச்சம்-மிகுந்து நிற்பது; இங்கே புகழ்ச்சி, இகழ்ச்சிகளைக் குறிக்கும். 'எச்சத்தாற் காணப் படும்' என்பதற்கு நன்மக்கள் உண்மையானும், இன்மை யானும் அறியப்படும் என்று பொருள் கூறுவர். 114

5. கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கு அணி.

தாழ்வும் உயர்வும் ஒருவரது வாழ்வில் இல்லாதவை அல்ல; அவரவர் செய்த தீவினை நல்வினைகளின் பயனாக அவை வந்தே தீரும். ஆதலால், தாழ்வு வந்தபோதும் வாழ்வு வந்த போதும் நடுவு நிலைமையிலிருந்து தவறாமல் இருத்தலே அறிவு ஒழுக்கங்கள் அமைந்த சான்றோர்கட்கு அழகாகும்.

கேடு-கெடுதி, தாழ்வு; பெருக்கம்-செல்வம், நல்ல, நிலை; கோடாமை-தவறாமை; அணி-அழகு, ஆபரணம். 115

6. கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுஒரீஇ அல்ல செயின்.

தன் மனம் நடுவு நிலைமையிலிருந்து நீங்கி, நடுவு நிலைமை யல்லாத செயலைச் செய்ய நினைத்தாலும் "இதனால் நான் அழிந்து போவேன்" என்று ஒருவன் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

கெடுவல்-அழிந்துபோவேன்; நடுஒரீஇ-நடுவு நிலைமை யிலிருந்து தவறி. 116

7. கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.

நடுவு நிலைமையிலே இருந்து நீதி நெறியிலே நிலைத்து நிற்பவனுக்கு, அதனால் கேடு வருவதாக இருந்தாலும் அந்தக் கெடுதலை உலகத்திலுள்ள பெரியோர்கள் கேடாகக் கொள்ள மாட்டார்கள். 117

8. சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்
கோடாமை சான்றோர்க் கணி. [தொருபால்

துலாக்கோல் முதலில் தான் சமமாக இருந்து, பிறகு தன்னிடம் வைத்த பொருளின் எடையினைச் சமமாக அளந்து காட்டும். அதுபோல நடுவு நிலைமையைக் கடைப்பிடித்து, ஒரு பக்கமாகச் சாயாமல் இருத்தல் அறிஞர்களுக்கு அழகாகும்.

சமன் செய்து-சமமாக இருந்து; சீர் தூக்கும்—அளவினைச் சரியாகக் காட்டும்; கோல்- துலாக்கோல், தராசு; ஒருபால் கோடாமை-ஒரு பக்கமாக இல்லாதிருத்தல். 118

9. சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின்.

நடுவு நிலைமையாவது சொல்லில் குற்றமில்லாமலிருப்பது. ஒருவரது உள்ளம் நடுவு நிலைமையில் உறுதியாக இருக்குமானால் சொல்லில் குற்றமில்லாத நடுவு நிலைமை ஏற்படும்.

சொற் கோட்டம்-சொல்லால் விளையும் குற்றம்; செப்பம்-நடுவு நிலைமை; ஒரு தலையா-உறுதியாக; உட் கோட்டம் இன்மை-மனத்தில் குற்றம் இல்லாமல் இருக்கும் தன்மை. இங்கே நடுவு நிலைமையைக் குறிக்கும். 119

10. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின்.

வாணிகம் செய்பவர்கள் பிறர் பொருளையும் தம் பொருளைப் போலக் காப்பாற்றி வாணிகஞ் செய்வார்களானால் அவர்களுக்கு அதுவே சிறந்த வாணிகம் ஆகும்.

பிறவும் தம்போல்-பிறர் பொருளையும் தம் பொருளைப் போல். 120

## 13. அடக்கமுடைமை

1. அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

அடக்கம் என்னும் குணம் ஒருவரைத் தேவர்களுள் ஒருவராகச் சேர்க்கும்; அடங்காமல் இருக்கும் குணம் ஒருவரை இருள் சூழ்ந்த இடத்தின்கண் கொண்டுபோய்ச் சேர்க்கும்.

அடக்கம்-மனம், மொழி, உடல் முதலியவைகளால் அடங்கி இருத்தல்; ஆர் இருள்-இருள் நிறைந்த இடம், துன்பம் நிறைந்த இடம்; நரகலோகம் என்றும் கூறுவர்; உய்க்கும்-செலுத்தும். 121

2. காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங்கு இல்லை உயிர்க்கு.

அடக்கம் என்னும் குணத்தை உறுதிப் பொருளாகக் கொண்டு காப்பாற்ற வேண்டும். ஏனென்றால் அந்த அடக்கத்தைவிடச் சிறந்த செல்வம் உயிருக்கு வேறொன்றும் இல்லை.

பொருள்-உறுதிப் பொருள், அழியாத பொருள்; ஆக்கம்-செல்வம்; அதனின் ஊஉங்கு-அதைக்காட்டிலும். 122

3. செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து
ஆற்றின் அடங்கப் பெறின்.

அடக்கம் உடைமையே அறிவுடைமை என்று ஒருவன் நல்ல வழியில் அடங்கி நடப்பானானால், அந்த அடக்கம் நல்லோரால்அறியப்பட்டு அவனுக்குச் சிறப்பைத்தரும். 123

4. நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

இல்லற நெறியிலிருந்து மாறுபடாது அடங்கி நடப்போனுடைய உயர்ச்சி, மலையின் உயர்ச்சியினும் மிகவும் பெரியதாகும்.

திரியாது அடங்குதல்-ஐம்பொறிகளும் நல்ல நிலையில் இருக்கத்தான் அவைகளின் வழியே தன் மனத்தைச் செலுத்திக் கேடு அடையாமல் அடங்கி இருத்தல்; தோற்றம்-உயர்வு; மாண-மிகவும். 124

**5. எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்**
**செல்வர்க்கே செல்வம் தகைத்து.**

பிறரிடத்துப் பணிவாக நடந்துகொள்ளுதல் பணக்காரர், ஏழை முதலிய எல்லார்க்கும் நன்மையே தருவது. ஆனாலும் இந்தப் பணிவாக நடந்துகொள்ளும் குணம் செல்வமுடையவர்க்கே மேலும் ஒரு செல்வமாக இருக்கும் சிறப்பினை உடையது. 125

**6. ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து.**

ஆமை துன்பம் நேராமல் தன் தலைகால்கள் ஆகியவைகளைத் தன் ஓட்டுக்குள் அடக்கிக் காத்துக்கொள்ளும். அது போல் ஒருவன் ஒரு பிறப்பிலே தன் ஐம்பொறிகளையும் பாவம் நேராமல் அடக்கத்தக்க வல்லமையுடையவனாக இருந்தால் அவ் வல்லமை அவனுக்கு ஏழு பிறப்புக்களிலேயும் உறுதியை அளிக்கும்.

ஒருமை-ஒரு பிறப்பு; எழுமை ஏழு பிறப்பு; ஐந்து-ஐம்பொறிகள்; ஆற்றின்-வல்லவன் ஆயின்; ஏமாப்பு-உறுதி, பாதுகாப்பு. 126

**7. யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்**
**சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.**

காக்கவேண்டிய பலவற்றையும் காத்துக்கொள்ளாவிட்டாலும் நாவினால் வரும் குற்றத்தினையேனும் காத்து நாவடக்கம் கொள்ளல் வேண்டும். ஒருவர் தம் நாவினைக் காக்கத் தவறுவாரானால் அவர் சொற்குற்றத்திற்கு உள்ளாகித் துன்புறுவர்.

யா-எவற்றை; சோகாப்பர்-துன்புறுவர்; இழுக்கு-குற்றம். 127

**8. ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்**
**நன்றாகா தாகி விடும்.**

நல்ல சொற்களையே சொல்லும்பழக்கமுடைய ஒருவன் எப்போதேனும் ஒரே ஒரு தீமையான சொல் சொல்லுவானேயானாலும், அந்தத் தீமையான சொல்லினது பொருளின் பயனால், அவன் அதற்குமுன்பு சொல்லிய நல்ல

சொற்களின் பயனும் நன்மையைத் தாராமல் போய் விடும். 128

9. தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு.

நெருப்பிலே சுட்ட புண்ணின் வடுமேலே காணப்பட்டாலும் அப்புண் உள்ளே ஆறிவிடும். ஆனால், ஒருவன் உள்ளம் வருந்தும்படி நாவினால் உரைத்த சொல்லால் ஏற்பட்ட மனப்புண் என்றும் ஆறாது நிலைத்து இருக்கும்.

நாவினால் சுடுதல்-கடுஞ்சொற்களைக் கூறி ஒருவன் மனத்தை வருந்த வைத்தல்; வடு-காயம். 129

10. கதம்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.

மனத்திலே கோபம் உண்டாகாதபடி காத்துக் கொண்டு, கற்கவேண்டிய நூல்களைக் கற்று, அடங்கி இருக்க வல்லவனை அடைதற்கு உரிய காலத்தை அறக் கடவுள் எதிர்பார்த்து இருக்கும்.

கதம்-கோபம்; செவ்வி-நேரம், காலம்; அறம்-தரும் தேவதை, அறக்கடவுள்; ஆறு - வழி; நுழைந்து பார்த்தல்-கூர்ந்து பார்த்துக் கொண்டிருத்தல். 130

## 14. ஒழுக்கமுடைமை

1. ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

ஒழுக்கம் எல்லாருக்கும் மேன்மையைத் தருவதாக இருப்பதால் அஃது உயிரினும் சிறந்ததாகப் பாதுகாக்கப்பட வேண்டும்.

ஒழுக்கம்-அறிவிற்சிறந்தோர்களால் ஒப்புக்கொள்ளப் பட்ட நல்ல நடத்தை; விழுப்பம்-மேன்மை, சிறப்பு; ஓம்பப்படும்-பாதுகாக்கப்படும். 131

2. பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை.

அறங்கள் பலவற்றையும் ஆராய்ந்து அவற்றுள் இம்மை யிலும், மறுமையிலும் துணையாக இருக்கக்கூடியது எது என்று போற்றித் தெரிந்தாலும், ஒழுக்கமே ஒருவர்க்குத் துணை என்பது தெரிய வரும். ஆதலால், அவ்வொழுக்கத் தையே போற்றிப் பாதுகாக்க வேண்டும். 132

3. ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

ஒழுக்கம் உடைமையே ஒருவர் உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர் என்பதை அறிவிக்கும். ஒழுக்கத்திலிருந்து தவறு தல் அவரைத் தாழ்ந்த குடிப்பிறப்பாக ஆக்கிவிடும்.

குடிமை-குடிப்பிறப்பு; இங்கே உயர்ந்த குடிப்பிறப்பைத் தெரிவிக்கும். இழிந்த பிறப்பு-இழிவாகக் கருதத்தக்க குடும்பநிலை. 133

4. மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.

பார்ப்பான், தான் கற்ற மறைப்பொருளை மறந்து போனாலும் அவன் மறுபடியும் அதைக் கற்றுக்கொள்ள முடியும். ஆனால் அந்தப் பார்ப்பான் நல்லொழுக்கத்தி லிருந்து தவறிவிடுவானே ஆனால் மீண்டும் அவன் நல்ல குடிப்பிறப்பு உடையவனாக எவராலும் கருதப்பட மாட்டான்.

ஓத்து-மறை அல்லது வேதம்; பிறப்பொழுக்கம்-நல்ல குடும்பத்தில் பிறந்ததனால் உண்டாகிய நல்ல ஒழுக்கம். 134

5. அழுக்காறு உடையான்கண் ஆக்கம்போன்று இல்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு.

பொறாமை உடையவனிடத்தில் செல்வம் இல்லாமல் ஒழிந்து போவதுபோல் ஒழுக்கம் இல்லாதவனிடத்தில் உயர்வு இல்லாமல் போய்விடும். 135

6. ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.

ஒழுக்கத்திலிருந்து தவறுவதனாலே தமக்குக் குற்றம் உண்டாவதை அறிந்து அறிவுடையோர் ஒழுக்கத்திலிருந்து தவறாமல் தம்மைக் காத்துக் கொள்வர்.

ஒல்குசல்-சுருங்குதல், குறைதல்; உரவோர்-அறிவுடையோர்; இழுக்கம்-தவறுதல்; ஏதம்-குற்றம்; படுபாக்கு-உண்டாதல். 136

7. ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

நல்ல ஒழுக்கத்தினால் எவரும் மேன்மையை அடைவர்; அவ்வொழுக்கத்திலிருந்து தவறுவதால் அடையத்தகாத பெரிய பழியை அடைவர். 137

8. நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்.

நல்ல ஒழுக்கம் இன்பமான இல்லற வாழ்க்கைக்குக் காரணமாக இருக்கும். தீய ஒழுக்கம் பாவத்துக்குக் காரணமாக இருந்து எப்போதும் துன்பத்தைத் தரும். 138

9. ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

தீய சொற்களை மறந்தும் தம் வாயால் சொல்லுதல் நல்லொழுக்கமுடையவர்களுக்கு இயலாது. 139

10. உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.

உலகத்திலுள்ள உயர்ந்த குணமுடைய மக்களோடு சேர்ந்து ஒழுகுதலைக் கல்லாதவர் பல நூல்களைக் கற்றிருந்தும் அறியாதவர்களே ஆவர்.

உலகம்-உயர்ந்த குணமுடைய மக்கள்; ஒட்ட ஒழுகல் கல்லார்-சேர்ந்து பழக அறியாதவர். 140

## 15. பிறனில் விழையாமை

**1.** பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை
அறம்பொருள் கண்டார்கண் இல். [ஞாலத்து

*பிறனுக்கு உரிமையாகிய மனைவியை விரும்பி வாழ்ந்து வருதலும் அறியாமைக் குணம் உலகத்தில் அறமும், பொருளும் ஆய்ந்து அறிந்தவரிடம் இல்லை.*

*பொருளாள்-பொருள்போல உரிமையானவள்; பெட்டு-விரும்பி; ஒழுகல்-நடத்தல், வாழ்ந்து வருதல்; பேதைமை-அறியாமை; ஞாலம்-உலகம்; அறம் பொருள் கண்டார்-அறநூலையும் பொருள் நூலையும் ஆராய்ந்து அறிந்தவர்.* 141

**2.** அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையார் இல்.

*பிறன் மனைவியை விரும்பி அவனுடைய வாயிலிற் சென்று தன் எண்ணம் நிறைவேறுதலுக்குத் தக்கசமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் அறிவில்லாத ஒருவன் தீயசெயல் செய்பவர்களுள் எல்லாம் மிக இழிந்தவனாகக் கருதப்படுவான்.*

*அறன்கடை நின்றார்-அறநெறியில் கீழானவராகக் கருதப்படுவர்; பிறன்கடை-பிறன் ஒருவன் வீட்டின் வாயில் புறம்.* 142

**3.** விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார்.

*சந்தேகம் சிறிதும் இல்லாமல் தம்மை நிச்சயமாக நம்பியவருடைய மனைவியின்மீது இச்சைகொண்டு தீய செயல்களைச் செய்து நடப்பவர் செத்தவரைவிட வேறு பட்டவரல்லர்.*

*விளிந்தார்-செத்தார்; மன்ற-நிச்சயமாக; தெளிந்தார்-நம்பினவர்; இல்-மனைவி.* 143

**4.** எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்
தேரான் பிறனில் புகல். [துணையும்

*ஒருவர் தினை அளவேனும் தம் பிழையை எண்ணிப் பார்க்காமல் பிறனுடைய மனைவியினிடம் செல்லுவாரா*

யின் அவர் எவ்வளவு பெருமையுடையவராயினும் என்ன பயன்? (அவர் இழிவானவராகவே கருதப்படுவர்.) 144

5. எளிதென இல்லிறப்பான் எய்தும்எஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

மிகவும் இலகுவான செயல் என்று எண்ணிப் பிறன் மனைவியிடம் முறைகேடாக தவறி நடக்க முயலுபவன் எக்காலத்திலும் அழியாத பழியை அடைவான்.

இறப்பான்-(நீதி நெறியை) கடப்பவன்; எஞ்ஞான்றும்-எந்தக் காலத்திலும்; விளியாது-அழியாது. 145

6. பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்.

பிறன் மனைவியினிடத்து நீதி முறை தவறி நடந்து கொள்பவனிடம் பகைமை, பாவம், அச்சம், பழி இந்த நான்கு குற்றங்களும் நீங்காமல் இருக்கும். 146

7. அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

பிறனுக்கு உரிமையாக உள்ளவளின் பெண்மைக் குணத்தை விரும்பாதவனே அறத்தின் இயல்போடு இல்வாழ்க்கையை நடத்துகிறவன் என்று சிறப்பித்துச் சொல்லுதற்குரியவன் ஆவான்.

அறன் இயல்-இல்லறத்தின் இயல்பு; பிறன் இயலாள்-பிறனுக்கு உரிமையானவள்; பெண்மை-பெண்தன்மை. 147

8. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு.

பிறனுடைய மனைவியை விரும்பி அவள்மீது தன் கருத்தைச் செலுத்தாத பெரிய ஆண் தன்மை, பல நற்குணங்களும் அமைந்த பெரியோர்களுக்கு அறநெறி மட்டுமன்று; சிறந்த ஒழுக்கமுமாகும். 148

9. நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்
பிறற்குரியாள் தோள்தோயா தார்.

அச்சத்தைத் தரத்தக்க கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தில் எல்லா நலன்களும் அடைவதற்குரியவர் எவர் என்றால் பிறனுக்கு உரிமையானவளின் தோள்களைச் சேராதவரே ஆவர். 149

10. அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

ஒருவன் இல்லற நெறிக்கு அடங்கி நடக்காமல், அறம் அல்லாத பாவச் செயலகள் பலவற்றைச் செய்பவனாக இருந்தாலும், பிறனுக்கு உரியவனின் பெண்மைக் குணத்தை விரும்பாமல இருப்பது நன்று.

அறன் வரையான்-அறநெறியைத் தனக்கு உரிமையாகக் கொள்ளாதவனாய்; பிறன் வரையாள்-பிறனுக்கு உரியவள். 150

## 16. பொறையுடைமை

1. அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

நிலம் தன்னைத் தோண்டுவார் கீழே விழாமல் அவரைத் தாங்கிக் கொள்கிறது. அதுபோலத் தம்மை அவமதிப்போர் துன்புறாத வண்ணம் அவர்கள் செய்த தீமையைப் பொறுத்துக் கொள்வதே (அறநெறியில்) முதன்மையானது ஆகும்.

அகழ்வார்-தோண்டுபவர்; தலை-சிறந்தது; முதன்மையானது. 151

2. பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று.

ஒருவன் அளவு கடந்த தகாத செயல்களைச் செய்யின், அதற்காகத் தாம் அவனைத் தண்டிக்க முடிந்த காலத்தும், அவன்மீது கோபம் கொள்ளாமல் அவன் செய்த குற்றத்

தைப் பொறுத்துக் கொள்ளவேண்டும். அதனோடு நில்லாமல் அக்குற்றத்தை உடனே மறந்துவிடுவது பொறுத்துக் கொள்வதைக் காட்டிலும் சிறந்தது. 152

**3. இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்**
**வன்மை மடவார்ப் பொறை.**

ஒருவனுக்கு மிகவும் துன்பமான நிலை வறுமை நிலையேயாகும். அவ்வறுமை நிலையைக் காட்டிலும் இழிவாகக் கருதப்படுவது அவன் தன்னை நாடிவந்த விருந்தினரைப் பாதுகாவாமல் நீக்குதலே ஆகும். அது போல ஒருவனுக்கு அமைந்துள்ள பல சிறந்த குணங்களுள்ளும் சிறந்ததாகக் கருதப்படுவது அறிவிற் குறைந்தவர்கள் தனக்குப் புரியும் தீங்குகளைப் பொறுத்துக் கொள்ளுதலேயாகும். 153

**4. நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறை**
**போற்றி ஒழுகப் படும்.** [யுடைமை

பல நல்ல குணங்களும் தம்மிடம் என்றும் நிலைத்து இருக்க வேண்டுமென்று ஒருவர் விரும்பினால் அவர் பொறுமையாக இருத்தல் என்னும் குணத்தினை மிகவும் பாதுகாப்போடு கடைப்பிடித்து நடத்தல் வேண்டும்.

நிறையுடைமை-பல சிறந்த குணங்களும் நிரம்பப் பெற்று இருக்கும் தன்மை; நிறை-உள்ள உறுதியுமாம். 154

**5. ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்**
**பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து.**

தமக்குப் பிறர் செய்த தீமையைப் பொறுத்துக்கொள்ளாமல் அவரைத் தண்டிப்பவரை உலகத்தவர் சிறந்தவர்களுள் ஒருவராக மதிக்க மாட்டார்கள்; அவ்விதம் தண்டிக்காமல் அத்தீமையைப் பொறுத்துக்கொள்ளும் குணம் வாய்ந்தோரைப் பொன்னைப் போற்றிக் காப்பது போலத் தம் உள்ளத்தின்கண் வைத்துப் போற்றிப் பாதுகாப்பர்.

ஒறுத்தாரை-தண்டித்தவரை; ஒன்றாக-சிறந்தவர்களுள் ஒருவராக, ஒரு பொருளாக; வையார்-மதிக்க மாட்டார்; பொதிந்து வைப்பர்-தம் உள்ளத்தின்கண் வைத்துப் பாதுகாப்பர். 155

6. ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ்.

தீமை செய்த ஒருவனைத் தண்டித்தவருக்கு அந்த ஒரு நாள் மட்டும் இன்பம் உண்டாகலாம். அவ்விதம் தண்டிக்காமல் அவன் செய்த குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளும் பொறுமையுடையவர்க்கு இவ்வுலகம் அழியும் வரையிலும் புகழ் நிலைத்து நிற்கும். 156

7. திறன்அல்ல தன்பிறர் செய்யினும் நோநொந்து
அறன்அல்ல செய்யாமை நன்று.

தகுதியில்லாத செயல்களைத் தனக்குப் பிறர் செய்த போதிலும் அவருக்கு அதனால் நேரக்கூடிய துன்பத்திற்காக வருந்தி அறம் அல்லாத செயல்களைச் செய்யாதிருத்தல் நல்லது. 157

8. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்.

செருக்கினால் தீய செயல்களைப் புரிந்தவர்க்கும் நன்மையே புரிந்து தம்முடைய பெருந்தன்மை என்னும் குணத்தினால் அவரை வென்று விடுதல் வேண்டும்.

மிகுதி-அளவிற்கு மேற்பட்ட செயல்; இங்கே செருக்கு என்னும் குணத்தினைக் குறிக்கும்; மிக்கவை-அளவுக்கு மீறியவை, தகுதி-சிறந்த குணம். 158

9. துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர்.

ஒழுங்கு முறையைக் கடந்து நடப்பவரின் வாயிலிருந்து வரும் கொடிய சொற்களைப் பொறுத்துக் கொள்ள வல்லவர் இல்லறத்தில் இருப்பவரே யாயினும் துறந்தாரைப்போல் தூய்மையுடையவராகவே கருதப்படுவர். 159

10. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரிற் பின்.

உணவு கொள்ளுதலை வெறுத்து விரதங்கள் பலப்பல ஆற்றி வாழ்பவர் பெரியாரே எனினும் பிறர் சொல்லும் தீய சொற்களைப் பொறுத்துக் கொள்ளுதலை நோன்

பாகக் கொண்டொழுகும் பெரியாருக்கு அடுத்த நிலையில் தான் இருக்க வேண்டியவராவார்.

'உண்ணாது' என்பதற்கு மாமிசம் முதலியவைகளை உட்கொள்ளாது என்றும் பொருள் கூறுவர். 160

## 17. அழுக்காறாமை

1. ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு.

ஒருவன் தன் உள்ளத்தின்கண்ணே பொறாமை இல்லாமல் வாழத்தக்க நல்ல தன்மையைச் சிறந்த ஒழுக்கத்திற்குரிய வழியாகக் கொள்ளுதல் வேண்டும்.

ஒழுக்காறு-நல்லொழுக்கத்திற்கு உரிய சிறந்த வழி; அழுக்காறு-பொறாமை; இயல்பு-தன்மை. 161

2. விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்.

யாராயிருப்பினும் அவரிடத்தில் பொறாமை கொள்ளும் குணம் இல்லாமையை ஒருவன் பெற்று இருப்பானேயானால் அவன் பெறுதற்குரிய சிறந்த செல்வங்களுள் அதற்கு ஒப்பாக இருப்பது வேறொன்றுமில்லை.

விழுப்பேறு-சிறந்த செல்வம்; யார்மாட்டும்-யாவரிடத்தும்; அன்மை-இல்லாதிருத்தல்; பெறின்-பெற்றிருந்தால். 162

3. அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறன்
பேணாது அழுக்கறுப் பான். [ஆக்கம்

மறுமைக்கு வேண்டிய அறச்செயலையும், இம்மைக்கு வேண்டிய செல்வத்தையும் விரும்பாதவன் என்று எண்ணத்தக்கவனே மற்றவருடைய செல்வத்தைக் கண்டு மகிழாமல் பொறாமைப்படுவான்.

அழுக்கறுத்தல் - பொறாமைப்படுதல்; பேணாது-மகிழாமல். 163

4. அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து.

தவறான வழியில் நடப்பதால் துன்பம் உண்டாதலை அறிந்து அறிவுடையோர் (தவறான வழியாகிய) பொறாமையாலே அறச்செயல் அல்லாத தீய செயல்களைச் செய்யார்.

இழுக்காறு–தவறான வழி; ஏதம்-துன்பம்; படுபாக்கு-படுதல், உண்டாதல். 164

5. அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது.

பொறாமை உடைய ஒருவரைத் துன்புறுத்த அவரிடமுள்ள பொறாமைக் குணம் ஒன்றே போதும். பகைவர் கேடு செய்யத் தவறினாலும் பொறாமைக் குணம் தனை உடையவருக்குக் கேட்டினைத் தவறாது புரியும். 165

6. கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.

பிறருக்குக் கொடுக்கப்படும் பொருளைக் கண்டு பொறாமைப்படுகிறவனுடைய குடும்பமும் அக்குடும்பத்தைச் சார்ந்தவர்களும் உடுப்பதற்கு உடையும், உண்பதற்கு உணவும் இல்லாமல் அழிந்து ஒழிவர்.

சுற்றம்-ஒருவன் குடும்பமும், அக்குடும்பத்தைச் சார்ந்தவர்களாகிய ஏவலாளர், நண்பர், உறவினர் முதலிய அனைவரும்; உடுப்பது-உடுத்திக் கொள்ளத்தக்க உடை; உண்பது-உண்ணத்தக்க உணவு. 166

7. அவ்வித்து அழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.

பொறாமையுடைய ஒருவனிடத்துத் திருமகள் இருக்கப் பொறாள். ஆதலால், அவள் தனக்கு மூத்தாளாகிய மூதேவிக்கு அவனைக் காட்டித் தான் நீங்கிவிடுவாள்.

அவ்வித்து-மனம் பொறாமல்; செய்யவள்-திருமகள்; தவ்வை–திருமகளுக்கு மூத்தவள் மூதேவி. 167

8. அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்.

பொறாமை என்று சொல்லப்படும் ஒப்பற்ற பாவி தன்னை உடையானது செல்வத்தையெல்லாம் அழித்து அவனைத் தீய வழியிலும் கொண்டுபோய்ச் சேர்த்து விடும். 168

9. அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.

பொறாமையுள்ளம் உடையவனுக்கு நிரம்பச் செல்வமும், பொறாமை இல்லாத நல்ல உள்ளம் வாய்ந்தவனுக்கு மிகவும் வறுமையும் அமையுமானால் அவை இரண்டும் இவ்விருவர்தம் எண்ணங்களாலேயே இல்லாமல் ஒழிந்துவிடும்.

பொறாமையுடையவன் செல்வமுடையவனாய் இருப்பதற்கும், பொறாமை இல்லாதவன் வறுமையில் வாடுவதற்கும், அவரவர் முன் பிறப்பில் செய்த நல்வினை, தீவினைகளே காரணம் என்றும், 'நினைக்கப்படும்' என்பதற்குச் சான்றோரால் ஆராய்ந்து பார்க்கப்படும் என்றும் பொருள் கொள்வர்.

அவ்விய நெஞ்சம்–பொறாமை உள்ளம்; செவ்வியான் (பொறாமை யில்லாத) சிறந்த குணம் வாய்ந்தவன்; நினைக்க அறிவினால் எண்ணிப் பார்க்க; படும்–இல்லாமல் அழியும்; பொறாமையால் செல்வம் அழியும். பொறாமை இல்லாத மனத்தூய்மையால் வறுமை அழியும். 169

10. அழுக்கற்று அகன்றாரும் இல்லைஅஃ தில்லார்
பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல்.

பிறருடைய உயர்வினைக் கண்டு பொறாமைப்பட்டுப் பெரியோராக விளங்கிப் பெருமையை அடைந்தவர் இவ்வுலகில் ஒருவரும் இலர். அவ்விதமே அப்பொறாமைக் குணம் இல்லாத நல்ல உள்ளம் வாய்ந்தவர் எவரும் மேன்மையடைவதிலிருந்து நீங்கியவரும் இலர்.

அழுக்கற்று – பொறாமைந்பட்டு; அகன்றார்– பெருமையை அடைந்தவர்; பெருக்கத்தில்-மேம்பாடு அடைவதில்; தீர்ந்தார்-நீங்கி இருந்தவர். 170

## 18. வெஃகாமை

1. நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்.

அறநெறி வழுவாது தொகுத்த நல்ல பொருளை நடுநிலைமை இல்லாமல் ஒருவன் அபகரிக்க விரும்பினால் அவனுடைய குடும்பம் அழிவதோடு அவனுக்குத் தீங்கும் வந்து சேரும்.

நடு-நடு நிலைமை; நன்பொருள்-நியாய வழியாகத் தொகுத்த பொருள்; வெஃகின்-அடைய ஆசைப்பட்டால்; குடி-குடும்பம்; பொன்றி-அழிந்து. 171

2. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.

நடுநிலைமை அல்லாத செயலைச் செய்ய நாணும் குணமுடையவர் பிறர் பொருளைக் கவர்வதால் வரும் பயனை விரும்பிப் பழியைத் தரும் செயல்களைச் செய்யமாட்டார்.

படுபயன்-பெறக்கூடிய நன்மை; பழிப்படுவ-பழியைத் தரத்தக்க செயல்கள்; நடுவன்மை - நடுநிலையற்ற தன்மை. 172

3. சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

அறநெறியால் - அடையத்தக்க அழியாத இன்பத்தை விரும்புகின்றவர்கள், அழிந்து போகத்தக்க உலக இன்பத்திற்காக ஆசைப்பட்டு நியாயமில்லாதவற்றைச் செய்யமாட்டார்.

சிற்றின்பம் - (அழிந்து போகத்தக்க) சிறிய இன்பம், உலக இன்பம்; மற்றின்பம் - மற்றதாகிய அழியாத பேரின்பம். 173

4. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

ஐம்புலன்களையும் அடக்கி வெற்றி பெற்ற குற்றமற்ற அறிவினை உடையவர், தம்மிடத்தில் ஒரு பொருள் இல்லை

என்ற காரணத்தால் அதனை நியாயமற்ற முறையில் பெறுவதற்கு விரும்பமாட்டார்.

இல-இல்லாதவராக இருக்கின்றோம்; புலன்-ஐம்புலன்; புன்மை-குற்றம்; காட்சி-அறிவு. 174

5. அஃகி அகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

எத்தகையவரிடத்திலும் பொருளைக் கவர விரும்பிப் பொருந்தாத செயல்களை ஒருவன் செய்வானேயானால், அவனுடைய கூர்மையும் விசாலமும் பொருந்திய அறிவினால் என்ன பயன்?

அஃகி-கூர்மையுடையதாகி; அகன்ற அறிவு-(பல நூல்களையும் கற்றதால் உண்டான) விரிந்த அறிவு. 175

6. அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

கருணையை விரும்பி அதைப் பெறுதற்குரிய நன்னெறியில் ஒழுகுகின்றவன், பிறனுடைய பொருளை விரும்பித் தீய செயல்களைச் செய்ய எண்ண, அதனால் தன் அருட்குணத்தை இழப்பான். 176

7. வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

பிறர் பொருளை விரும்பிக் கவர்ந்து கொள்ளுதலினாலே உண்டாகும் செல்வத்தை விரும்பாது இருக்க வேண்டும். ஏனென்றால் அது பயன்படும்போது அப்பயன் நமக்கு நல்லதாக இருப்பது அரிது.

ஆம்- ஆகின்ற; விளைவயின்-பயன்படும் காலம்; ஆம் பயன்-ஆகும் பயன்; மாண்டதற்கு-மாட்சிமைப்படுதற்கு; அரிது-அருமையுடையது; நல்லதாக இருப்பது அரிது. 177

8. அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

ஒருவன் செல்வம் சுருங்காமலிருப்பதற்கு வழி எது வென்றால் பிறனுடைய கைப்பொருளை விரும்பாதிருத்தலே ஆகும். 178

9. அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந்து ஆங்கே திரு.

அறம் இது என்று தெரிந்து பிறர் பொருளைஇச்சிக்காத அறிவுடையாரிடம் திருமகள் தானே-தகுதி அறிந்து போய்ச் சேருவாள். 179

10. இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்
வேண்டாமை என்னுஞ் செருக்கு.

பின் விளைவதை எண்ணாமல் பிறர் பொருளை விரும்பினால் அவ்விருப்பம் ஒருவனுக்கு அழிவைத் தரும். அப்பொருளை விரும்பாமல் வாழும் பெருந்தன்மை வெற்றியைத் தரும். 180

## 19. புறங்கூறாமை

1. அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது.

ஒருவன் அறநெறியைப் படிக்காதவனாய் அறம் அல்லாத பாவச் செயலையே செய்து வருவானாயினும் அவன் மற்றவனைப் பற்றிப் புறங்கூறாமல் இருக்கின்றான் என்று பிறரால் சொல்லப்படுவது நல்லது.

புறங்கூறல்-பிறரை மறைவில் இகழ்ந்து கூறுதல். 181

2. அறனழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

ஒருவனை அவன் இல்லாத இடத்தில் பழித்துக் கூறி, அவனை நேரில் கண்டபோது பொய்யாக நகை செய்தல், அறன் என்பதே ஒன்று இல்லை என்று கூறி, அறம் அல்லாத பாவத் தொழிலைச் செய்தலினும் தீமையைப் பயப்பதாகும்.

அழீஇ-அழித்து; இங்கு மறுத்துரைத்து என்னும் பொருளில் வந்துள்ளது; புறன்-(புறத்தே), காணாத இடத்தில்; அழீஇ-இகழ்ந்துரைத்து; பொய்த்து நகை-பொய்யாகச் சிரித்தல். 182

3. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும்.

ஒருவனைக் காணாதபோது இழிவாகக் கூறி, அவனைக் கண்டபோது பொய்யாகப் புகழ்ந்துரைத்து உயிர் வாழ்வதைக் காட்டிலும் இறந்துபோதல் அறநூல்களில் புகழ்ந்து கூறப்படும் நல்வினைப் பயனை அளிக்கும். 183

4. கண்ணின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல்.

ஒருவன் முகத்திற்கு எதிரே நின்று சிறிதும் தாட்சண்யமில்லாமல் கடுஞ்சொற்களைச் சொன்னாலும், அவனுக்கு முன்பாகப் பேசாமல் புறத்தே சென்று சொல்லும் பழிச் சொற்களைப் பேசாமல் இருத்தல் வேண்டும்.

கண்நின்று-கண்களுக்கு எதிரே நின்று; கண் அற-கண்ணோட்டம் இல்லாமல்; முன்இன்று-முகத்திற்கு எதிரே நின்று பேசாமல்; பின்நோக்காச் சொல்-பின்னால் நேரும் விளைவினைக் கருதாத சொற்கள்; அஃதாவது பழிச் சொற்கள். 184

5. அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்
புன்மையால் காணப் படும். [சொல்லும்

நீதிநெறியைப் பிறருக்கு விளக்கிக் கூறத்தக்க நற்குணம் ஒருவனிடம் சிறிதும் இல்லாமையை அவன் பிறரைத் குறித்துப் புறம் கூறுகின்ற இழி குணத்தால் தெரிந்து கொள்ளலாம். 185

6. பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்
திறன்தெரிந்து கூறப் படும்.

பிறன் குற்றத்தை அவன் இல்லாதபோது பிறரிடம் கூறுகின்ற பழக்கமுடைய ஒருவன், தன் குற்றத்தையும் அவ்வாறு பிறர் கூறுவார்களே என்பதை அறிந்து கூறுதல் வேண்டும்.

தன்பழி உள்ளும்-தான் புரிந்த தீமைகளையும்; திறன் தெரிந்து-பிறர் தன்னைப்போல் புறம் கூறுவார்களே என்பதைப் பகுத்தறிந்து. 186

7. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்.

பிறர் மகிழும் வண்ணம் இனிய சொற்களைச் சொல்லி நட்புக் கொள்ளுதல் சிறந்தது என்பதை அறியாதவர், [illegible] விட்டு நீங்கும்படியாகப் புறங்கூறி நண்பரையும் பிரித்து விடுவர். 187

8. துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு.

நெருங்கிப் பழகியவரின் குற்றத்தையும் தூற்றும் பழக்கமுடையவர், பழகாத அயலாரிடத்து உள்ள குற்றத்தை எப்படித் தூற்றாமலிருப்பர்? 188

9. அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறம்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை.

பிறர் எதிரில் இல்லாதது கண்டு புறங்கூறுவோனுடைய உடலினது சுமையை, நிலமானது இத்தகைய கொடியோனையும் தாங்கிக் கொண்டிருத்தலே தனக்கு அறம் என எண்ணிப் பொறுத்துக் கொண்டு இருக்கிறது போலும்.

அறம் நோக்கி - அறநூல்களில் கூறியுள்ள பெருமையை எண்ணிப் பார்த்து; ஆற்றுங்கொல் - பொறுத்துகொண்டிருக்கிறது போலும்; பொறை - பாரம், உடற்சுமை. 189

10. ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு?

அயலாருடைய குற்றத்தைக் காண்பதுபோலப் புறம் கூறுவார் ஒருவர், தம் குற்றத்தையும் காண வல்லவரானால் நிலை பெற்ற உயிர் வாழ்க்கைக்கு என்ன துன்பம் நேர்ந்துவிடும்? (சிறிதும் துன்பம் இராது). 190

## 20. பயனில சொல்லாமை

1. பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும்.

அறிவுடையார் பலரும் கேட்டு வெறுக்கும்படி பயனில்லாத சொற்களைச் சொல்லுகின்றவன் எல்லாராலும் வெறுக்கப்படுவான்.

பயனில சொல்லுதல் - கேட்டார்க்கும் தனக்கும் நல்ல பயனைத் தராத சொற்களைச் சொல்லுதல். 191

2. பயனில பல்லார்முன் சொல்லல் நயனில
நட்டார்கண் செய்தலின் தீது.

பயனில்லாத சொற்களை அறிவிற் சிறந்த பெரியோர்கள் முன்பு சொல்லுதல், விரும்பத்தகாத செயல்களைத் தன் நண்பர்களிடத்தில் செய்தலைவிடத் தீமையுடையதாகும். 192

3. நயனிலன் என்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கும் உரை.

பயன் சிறிதும் இல்லாதவைகளைக் குறித்து ஒருவன் விரிவாக உரைத்துக் கொண்டிருப்பானாயின், அவன் விரும்பத் தகாதவன் என்பதை அவ்வுரையே தெரிவித்து விடும். 193

4. நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லா ரகத்து.

பயனற்றதும், நல்ல தன்மையற்றதும் ஆகிய சொற்களை ஒருவன் பலரிடமும் சொல்லுவானானால் அவன் சொற்கள் சிறப்பில்லாதனவாய் அவனை நன்மையிலிருந்து நீக்கிவிடும்.

நயன் - சிறப்பு, அறநெறியுமாம், பண்பில் சொல்-நல்ல தன்மையில்லாத சொற்கள். 194

5. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

பயனற்ற சொற்களை நற்குணமுடையவர் கூறுவாரா னால் அவருடைய பெருமை அவருக்குரிய மதிப்போடு நீங்கி விடும். 195

**6. பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்**
**மக்கட் பதடி எனல்.**

பயனில்லாத சொற்களைப் பல முறையும் சொல்லு கின்ற ஒருவனை மக்களுள் ஒருவன் என்று சொல்லுதல் கூடாது. மக்களுள் பதர் என்று சொல்லுதல் வேண்டும்.

பாராட்டுதல் - பலமுறை சொல்லுதல்; பதடி - பதர் 196

**7. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்**
**பயனில சொல்லாமை நன்று.**

கல்வி அறிவு ஒழுக்கங்களால் நிறைந்தோர் இனிமை யில்லாத சொற்களைச் சொல்ல வேண்டியிருப்பினும் சொல்லக் கடவர். ஆனால், பயனில்லாத சொற்களை அவர் சொல்லாதிருத்தல நன்மையாகும்.

சான்றோர் - நற்குணம் பலவும் அமைந்த பெரியோர்; நயன் இல - இனிமையல்லாத சொற்கள். 197

**8. அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்**
**பெரும்பயன் இல்லாத சொல்.**

அறிதற்கரிய பொருள்களை ஆராயும் அறிவினை யுடையவர் மிகவும் பயன் உடையன அல்லாத சொற்களை ஒருபோதும் சொல்லமாட்டார். 198

**9. பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள்தீர்ந்த**
**மாசறு காட்சி யவர்.**

மயக்கத்திலிருந்து தெளிந்த குற்றமற்ற அறிவினை யுடையவர்கள், பயனற்ற சொற்களை ஒருகால் மறந்தும் சொல்ல மாட்டார்கள்.

பொச்சாந்தும் - மறந்தும்; மருள் - மயக்கம்; மாசறு - குற்றம் நீங்கிய; காட்சி - அறிவு. 199

**10. சொல்லுக சொல்லின் பயனுடைய சொல்லற்க
சொல்லின் பயனிலாச் சொல்.**

சொற்களில் பயனுடைய சொற்களை மட்டும் நாம் சொல்லுதல் வேண்டும். பயனற்ற சொற்களைச் சொல்லுதல் கூடாது. 200

## 20. தீவினையச்சம்

**1. தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னும் செருக்கு.**

தீவினை செய்தலாகிய அகந்தையான செயலைச் செய்வதற்கு, முன்பே தீய செயல்களைச் செய்து பழகிய பாவிகள் அஞ்சமாட்டார்கள்; ஆனால் நற்குண சீலர்கள் அஞ்சுவார்கள்.

விழுமியார் - சிறந்த குணம் வாய்ந்த நல்லோர். 201

**2. தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.**

தீய செயல்கள் (நன்மையைச் சிறிதும் விளைவிக்காமல்) தீமையையே விளைவிப்பனவாய் இருத்ததால், அச் செயல்கள் தீயைப் பார்க்கிலும் கொடியன் எனக் கருதி அஞ்சுதல் வேண்டும். 202

**3. அறிவினுள் எல்லாம் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல்.**

தம்மைத் துன்பப்படுத்துவோருக்கும் தீமையானவற்றைச் செய்யாதிருத்தல் அறிவோடு செய்யும் செயல்கள் எல்லாவற்றிலும் முதன்மையானது ஆகும் என்று அறிஞர் கூறுவர்.

செறுவார்க்கும் - தமக்குத் தீமையைச் செய்பவர்க்கும். 203

**4. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு.**

பிறனுக்குத் தீமையை விளைவிக்கும் செயலை ஒருவன் தன்னை அறியாமலும் செய்ய எண்ணுதல் கூடாது.

அவ்வாறு எண்ணினால் அறக் கடவுள் அவனுக்குக் கெடுதியை உண்டாக்கும் செயலை எண்ணுவர்.

மறந்தும் - தன்னை அறியாமலும்; சூழற்க - எண்ணா திருக்க, அறம் - தரும தேவதை, அறக் கடவுள். 204

**5. இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்**
**இலனாகும் மற்றும் பெயர்த்து.**

தன்னிடம் பொருள் இல்லை என்று எண்ணி ஒருவன் தீய வினைகளைச் செய்தல் கூடாது. அவ்வாறு அவன் செய்வானானால் அதனால் அவன் பொருள் உடையவன் ஆகாமல் மறுபடியும் ஏழையாகவே ஆவான்.

இலன் - பொருள் இல்லாதவன்; பெயர்த்து - மறுபடியும். 205

**6. தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால**
**தன்னை அடல்வேண்டா தான்.**

துன்பத்தைச் செய்யும் தீவினைகள் தன்னைத் துன்புறுத்தலை விரும்பாதவன் தான் பிறர்க்குத் தீமையான செயல்களைச் செய்யாதிருத்தல் வேண்டும்.

தீப்பால - தீமையான பகுதிகள்; தீயவைகள்; நோய்ப்பால - துன்பம் செய்யும் பகுதிகள், பாவங்கள்; அடல் - துன்புறுத்தல். 206

**7. எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை**
**வீயாது பின்சென்று அடும்.**

எத்தகைய பகைமையினையுடையாரும் அப்பகையிலிருந்து தப்பிப் பிழைத்துக் கொள்ளலாம். ஆனால், தீவினையாகிய பகையோ ஒருவனை நீங்காது தொடர்ந்து சென்று வருத்தும். 207

**8. தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை**
**வீயாது அடிஉறைந் தற்று.**

நிழல் ஒருவனை விடாமல் தொடர்ந்து வந்து அவன் அடியில் தங்கியிருத்தல் போன்று தீய செயல்களைச் செய்தவர் கேட்டை அடைதல் நிச்சயம்.

அடி உறைந்தற்று - அடியில் வந்து தங்கியிருத்தல் போன்றது. 208

9. தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்.

ஒருவன் தன்னிடத்தில் அன்புடையவன் ஆயின் தீவினைப் பகுதியான செயல்களுள் ஒரு சிறிதும் பிறாக்குச் செய்யாது ஒழிவானாக. 209

10. அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின்.

ஒருவன் தவறான வழியிற் சென்று, தீய செயலினைச் செய்யாதிருடபானேயானால், அவன் சிறிதும் துன்பம் இல்லாதவன் என்று அறிக. 210

அருங்கேடன் - கேடு அற்றவன்; மருங்கு - பக்கம்.

## 22. ஒப்புரவறிதல்

1. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்ஆற்றுங் கொல்லோ உலகு.

நீரினைப் பொழிந்து உயிர்களைக் காப்பாற்றுகின்ற மேகக் கூட்டங்களுக்கு இவ்வுலகத்தில் உள்ள உயிர்கள் என்ன பிரதி உபகாரம் செய்கின்றன? ஒன்றும் இல்லை. ஆதலால், அம்மேகத்தைப் போன்றவர்கள் புரியும் உதவிகளும் பிரதி உபகாரங்களை எதிர்நோக்குவன அல்ல.

ஒப்புரவு - உலக நடையினை அறிந்து அதற்கேற்ற வண்ணம் செய்தல்; அஃதாவது ஒருவருக்கொருவர் பிரதி உதவியை எதிர்பாராமல் உதவி செய்து வாழ்தல்.

கைம்மாறு - ஒருவர் செய்த உதவிக்குப் பதில் உதவி; கடப்பாடு - ஒபபுரவு; மாரி - மேகம், மழை; ஆற்றும் - செய்யும். 211

2. தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

தாளாண்மை பலவகையிலும் முயற்சி செய்து சேர்க்கும் பொருள்கள் எல்லாம் தகுதியுடையவர்களுக்கு உதவி செய்தற் பொருட்டே ஆகும்.

தாள் ஆற்றி - முயற்சி செய்து; வேளாண்மை - உபகாரம். 212

3. புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற.

பிறருக்கு உதவி செய்து வாழ்தலாகிய ஒப்புரவு என்னும் செயலே எல்லா நல்ல செயல்களிலும் சிறந்தது. இதைப் போன்ற வேறொரு நல்ல செயலை இந்த உலகத்திலும் தேவருலகத்திலும் பெறுதல் அரிது.

புத்தேள் உலகம் - தேவர் உலகம்; ஈண்டு – இவ்வுலகம். 213

4. ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

உலக நடையை அறிந்து உபகாரஞ் செய்பவன் உயிரோடு இருந்து வாழ்பவனாக மதிக்கப்படுவான். அவ்விதம் ஒழுகாதவன் உயிர் உடையவனாக இருந்தும் இறந்தவர்களுள் ஒருவனாகவே கருதப்படுவான்.

ஒத்தது அறிதல் - உலக நடையை அறிந்து உதவி வாழ்தல். 214

5. ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

உலக இயல்பு அறிந்து நடப்பதால் உலகத்தாரால் விரும்பப்படும் பேரறிவாளன் பெற்றுள்ள செல்வம், ஊரார் நீர் உண்ணுதற்கு இடமான குளம் நீரால் நிறைந்துள்ளதற்குச் சமம் ஆகும்.

ஊருணி – ஊரார் நீர் உண்ணுதற்கு இடமான குளம்; அவாம் - அவாவும், விரும்பும்; திரு - செல்வம். 215

6. பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்.

உலகத்தவர்க்குப் பயன்படும் மரம் ஒன்று ஊரின் நடுவே பழங்களையும் உடையதாய் இருந்தால் அதனால் மக்களுக்குப் பெரிதும் நன்மை ஏற்படுவதுபோல், ஒப்புரவறிதலாகிய நற்குணம் வாய்ந்தவனிடம் செல்வம் சேர்ந்தால் அச்செல்வம் ஊரில் உள்ள பலருக்கும் பயன்படும்.

பயன் மரம் - மக்களுக்குப் பயன்படும் மரம், நயன் உடையான்-ஒப்புரவறிதல் என்னும் நற்குணம் உடையவன். 216

**7. மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்**
**பெருந்தகை யான்கண் படின்.**

ஒரு மரத்தின் வேர், அடி மரம், கிளை, இலை, பூ, காய், கனி முதலிய எல்லாப் பாகங்களும் மக்களுக்கு நோயை நிச்சயமாகத் தீர்ப்பதில் மருந்தாக இருந்து, அஃது ஊரின் பொது இடத்திலும் இருந்தால் எவ்விதம் பலர்க்கும் பயன்படுமோ அவ்விதமே ஒப்புரவறிதல் என்னும் குணம் வாய்ந்த பெருந்தகையாளனிடம் செல்வம் சேர்ந்தால் அச்செல்வம் பலருக்கும் பயன்படும். 217

**8. இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்**
**கடனறி காட்சி யவர்.**

தம் கடமையை அறிந்த அறிஞர்கள் பிறருக்கு உதவு வதற்கு வசதி இல்லாத காலத்திலும் பலருக்கு உதவி செய்வ தற்குத் தளரமாட்டார்கள்.

இடனில் பருவம் - பிறருக்கு உதவுவதற்குரிய செல்வம் இல்லாத சமயம்; ஒல்கார் - உள்ளம் தளரார்; கடன் - கடமை. 218

**9. நயனுடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர**
**செய்யாது அமைகலா வாறு.**

பிறருக்கு உதவி செய்யும் நற்குணமுடையான் வறுமை யடைதல் என்பது செய்யவேண்டிய தன்மையில் உள்ள செயல்களைச்செய்யமுடியாமல் வருந்துகின்ற நிலைமையை அடைதலேயாகும்.

நல்கூர்ந்தான் ஆதல் - வறுமை அடைந்தவனாக இருத்தல்; செயும்நீர - செய்யவேண்டிய தன்மையை உடையன; அமைகலா ஆறு - அமையமாட்டாத இயல்பு. 219

10. ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து.

பிறருக்கு உபகாரம் செய்தலினால் தனக்குத் துன்பம் வருமென்று யாரேனும் சொல்வார்களானால் அந்த உபகாரத்தைச் செய்வதற்காகத் தன்னைப் பிறருக்கு அடிமைப்படுத்தியேனும் அந்த உபகாரச் செயலை மேற்கொள்ளுதல் தகுதியுடையதாகும்.

பிறருக்கு உபகாரம் செய்தலில் எத்தைகய துன்பம் நேர்ந்தாலும் அதனைப் பொருட்படுத்தாது செய்தல் வேண்டும். அதுவே இவ்வுலகத்தில் பிறந்ததன் பயனாம். 220

## 23. ஈகை

1. வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

ஒரு பொருளும் இல்லாத ஏழையாகிய ஒருவருக்கு அவர் வேண்டிய பொருளைக் கொடுப்பதே ஈகையாகும். அவ்விதம் இல்லாத பிற கொடைகளெல்லாம் பிறிதொரு பயனை எதிர்பார்த்துக் கொடுப்பவைகளே.

வறியார் - ஒரு பொருளும் இல்லாதவர், ஏழை; ஈகை- உதவி; குறி யெதிர்ப்பு - பிறிதோர் பயனை எதிர்பார்த்துக் கொடுப்பது; நீரது - தன்மையை உடையது.

குறிப்பு : ஒப்புரவு என்பது பிறர் நம்மைக் கேளாமல் இருந்தபோதும் நம்முடைய கடமையைச் செய்யும் உபகார குணம். ஈகை என்பது இல்லை என்று வந்து கேட்டவர்க்கு இரக்கங்கொண்டு உதவும் குணம். 221

2. நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.

பிறரிடமிருந்து ஒரு பொருளைப் பெறுதல் நன்மை விளைவதற்கு வழியாக இருந்தாலும் அது தீயதே ஆகும். பிறருக்கு உதவுவதால் மேலுலகம் இல்லை என்று கூறுவார் உளராயினும் கொடுப்பதே நல்லது. 222

3. இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள.

'நீ கேட்கும் பொருள் என்னிடத்தில் இல்லையே' என்று தன் துன்ப நிலையைத் தெரிவிக்காமல் இருந்தாலும், எங்ஙனமேனும் கொடுத்துதவுங் குணமும் நல்ல குடும்பத்தில் பிறந்தானிடத்தில் உள்ள குணங்கள் ஆகும்.

'இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்' என்பதற்கு, 'யான் வறியவன்' என்னும் துன்பச் சொல்லை ஒருவன் உரைப்பதற்குமுன் அவனுக்குக் கொடுத்துதவும் குணம் என்றும் பொருள் கூறலாம். எவ்வம் - துன்ப நிலை; குலனுடையான் - நல்ல குடும்பத்தில் பிறந்தவன். 223

4. இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகம் காணும் அளவு.

நம்மிடம் வந்து ஒன்றைக் கேட்கும் ஒருவர் அப்பொருளைப் பெற்று இன்புறும் வரையிலும் நாம் அவருடைய நிலையைக் கண்டு இரக்கப்பட வேண்டியிருத்தலால் அது நமக்குத் துன்பத்தையே தருகின்றது. 224

5. ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்.

பசித் துன்பத்தைப் பொறுத்துக்கொள்ளும் வல்லமையே தவம் செய்வோரின் வல்லமையாகும். அவ்விதம் பசியாக இருப்போர்க்கு உணவை யளித்து அவர்தம் பசியை நீக்குகின்றவர் பசியை அடங்கும் வித்தையில் வல்ல தவசியினும் சிறந்தவர் ஆவர்.

பிறர் பசியை ஆற்றுகின்றவர் தம் பசியை ஆற்றிக் கொள்ளும் தவ முனிவரினும் சிறந்தவர் ஆவர் என்பது கருத்து. ஆற்றுவார் - தவம்செய்பவர்; ஆற்றல் - வல்லமை. 225

6. அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

வறியவர்களின் கொடிய பசியைப் பொருள் பெற்றவன் தீர்த்தல் வேண்டும். அவ்விதம் பசி தீர்த்தல், பொருளைப்

பெற்றவன் அப்பொருளைப் பிற்காலத்தில் தனக்கு உதவும் படி சேமித்து வைக்கும் சேம நிதிக்குச் சமம். 226

7. பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்
தீப்பிணி தீண்டல் அரிது.

தான் பெற்ற உணவைப் பலருக்கும் சமமாகப் பங்கிட்டுத் தந்துஉணவு கொள்ளும் பழக்கமுடையவனைப் பசி என்று கூறப்படும் கொடிய நோய் அணுகுதல் அரிது. 227

8. ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

நாம் சேர்த்து வைத்துள்ள பொருளைப் பிறருக்குக் கொடுக்காமல் மறைத்து வைத்திருந்து முடிவில் இழந்து விடும் கன்னெஞ்சம் படைத்தவர்கள் பிறருக்குக் கொடுத்து அதனால் அடையும் மகிழ்ச்சியினை அறியமாட்டார்கள் போலும். 228

9. இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்.

நமக்குள்ள பொருளை மேலும் அதிகரிக்கச் செய்வதற்காகத் தாமே தனித்தவராக இருந்து பிறருக்குக் கொடுக்காமல் உணவு கொள்ளுதல் பிச்சை எடுப்பதைப் பார்க்கிலும் துன்பம் தருவதாகும். 229

10. சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை.

இறப்பதைக் காட்டிலும் துன்பமானது வேறொன்றுமில்லை. எனினும் தம்மிடம் வந்து ஓர் எளியவன் ஒரு பொருளைக் கேட்க அப்பொருளைத் தம்மால் கொடுக்க முடியாதபோது இறத்தலும் இன்பமானதே ஆகும். 230

## 24. புகழ்

1. ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்வது
ஊதியம் இல்லை உயிர்க்கு.

வறியவர்களுக்கு அவர்கள் வேண்டுவனவற்றைக் கொடுத்தல் வேண்டும்; அதனால் புகழ் உண்டாகும்படி வாழவேண்டும். அவ்விதம் புகழ்பட வாழ்வதல்லது மக்கள் உயிர்க்குப் பயன் வேறொன்றும் இல்லை. 231

2. உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்
ஈவார்மேல் நிற்கும் புகழ். [கொன்று

வறுமையால் இரப்பவர்க்கு அவர் வேண்டிய பொருளைக் கொடுத்து உதவுகின்றவர்மேல் நிற்கும் புகழையே பேச்சில் வல்லவர்கள் எல்லாம் புகழ்ந்து பேசுகின்றார்கள்.

உரைப்பர் - பேச்சில் வல்லவர், புலவர், பலவழிகளிலும் புகழ் பெறலாம் எனினும் கொடுப்பதால் உண்டாகும் புகழே சிறந்தது என்பது கருத்து. 232

3. ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில்.

நிலையற்ற இந்த உலகத்திலே என்றும் அழியாமல் நிற்பது உயர்வு தங்கிய புகழே ஆகும். மற்றவை நிலைத்து நிற்கமாட்டா. 233

4. நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு.

நிலவுலகத்தில் ஒருவன் என்றும் அழியாத பெரும் புகழைப் பெற்று விடுவானானால் தேவலோகத்தில் உள்ளவர்கள் அங்கே உள்ள தேவர்களைப் போற்றாமல் நிலவுலகத்தில் புகழ் பெற்றுள்ள ஒருவனையே போற்றிப் புகழ்வார்கள்.

நிலவரை – நிலவுலகம்; நீள் புகழ் – அழியாத பெரும் புகழ்; புலவர் - தேவர்; புத்தேள் உலகு - தேவலோகம். 234

5. நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது.

அறிவுடையோர் துன்பம் அடைந்த காலத்திலும் செல்வம் பெற்றவர்போல் வளர்ச்சி பெற்றே விளங்குவர். அவர் இறந்துபோனாலு புகழுடம்பு தாங்கி என்றும் இறவாமல் இருப்பர். இத்தகைய தன்மையை மற்றவர்கள் அடைய முடியாது.

நத்தம் - வளர்ச்சி, ஆக்கம்; சாக்காடு — இறப்பு; உளதாகும் சாக்காடு - இறந்தும் இறவாமல் இருப்பது. 235

6. தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.

உலகத்தில் பிறந்தால் பிறர் புகழ்ந்து பேசுதற்குரிய சிறப்போடு பிறத்தல் வேண்டும். அவ்விதம் பிறந்து சிறந்து விளங்க இயலாதவர்கள் இவ்வுலகில் பிறக்காமலே இருந்திருந்தால் நலமாக இருக்கும்.

ஓர் இடத்துக்குச் சென்றால் பலரும் புகழும்படியான தன்மையில் செல்லுதல் வேண்டும். தம்மைப் பலரும் இகழும் வகையில் செல்லுதலைவிட அவ்விடத்திற்குச் சொல்லாமல் இருத்தலே நலம் என்றும் பொருள் கொள்ளுவர். 236

7. புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன்?

தமக்குப் புகழ் உண்டாகும்படி வாழமுடியாதவர் தம்மைத் தாம் நொந்து கொள்ளாமல் தம்மை இகழ்கின்றவரை நொந்து கொள்வதால் என்ன பயன்? 237

8. வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசை
எச்சம் பெறாஅ விடின். [என்னும்

தாம் இறந்த பின்னரும் எஞ்சி நிற்பதாகிய புகழைப் பெறாவிட்டால் உலகத்தில் பிறந்த எத்தகையோர்க்கும் அஃது ஒரு பெரிய இகழ்ச்சியாகும் என்று அறிஞர் கூறுவர். 238

9. வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

புகழில்லாத உடம்பைச் சுமந்த நிலமானது குற்றமற்ற வளப்பத்தையுடைய விளைச்சல் இல்லாமல் குன்றி விடும். 239

10. வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

தம்மைப் பிறர் இகழாமல் வாழக்கூடியவரே இவ்வுலகில் உயிரோடு வாழ்பவர் ஆவர். புகழைப் பெறாமல் உயிர் வாழ்கின்றவர்களை வாழாதவர் என்றே சொல்லுதல் வேண்டும். 240

# துறவறவியல்

## 25. அருளுடைமை

1. அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்
பூரியார் கண்ணும் உள. [செல்வம்

பலவகைப்பட்ட செல்வங்களுள்ளும் அருளுடைமை என்னும் இரக்க குணமே சிறந்த செல்வம் ஆகும். அதுவே உயர்ந்தோர்களிடத்துக் காணப்படும் செல்வம். பொருளால் வரும் செல்வங்கள் சாதாரண மக்களிடத்தும் காணப்படும்.

பூரியார்-பொதுமக்கள், கீழ்மக்கள் என்றும் பொருள் கொள்ளலாம். 241

2. நல்லாற்றால் நாடி அருளாள்க பல்லாற்றால்
தேரினும் அஃதே துணை.

உயிர்களுக்குக் கருணை காட்டும் குணத்தினை நல்ல வழியிலே தேடி அடைந்து கடைப்பிடித்தல் வேண்டும். பலப்பல வகையாலும் ஆராய்ந்து பார்த்தாலும் அவ்வருட் குணமே உயிருக்குத் துணை என்பது தெரிய வருகின்றது.

நல்லாறு-நல்ல வழி; பல்லாற்றல்-பல வழிகளாலும்.242

3. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்.

கருணை நிறைந்த உள்ளம் உடையவர்களுக்கு மயக்கத்தைத் தரக்கூடிய துன்பம் நிறைந்த உலக வாழ்க்கையில் புகுந்து உழலும் நிலை இல்லை.

இருள்-மயக்கம், அறியாமையுமாம்; இன்னா உலகம்-துன்பவாழ்க்கையோடு கூடிய உலகம். நரகம் என்றும் கூறுவர். 243

4. மன்னுயிர் ஓம்பி அருளாள்வார்க்கு இல்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை.

பிற உயிர்களைக் காப்பாற்றி அருட் குணத்தினை வளர்த்து வருகின்ற ஒருவர்க்குத் தம் உயிர் அஞ்சக்கூடிய செயல் எதுவும் இல்லை.

மன்னுயிர் - உலகத்திலே நிலையாக இருந்துவரும் சீவராசிகள்; ஓம்பி-பாதுகாத்து. 244

5. அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி.

அருட்குணம் கைவரப் பெற்றவர்கட்குத் துன்பம் எந்தக்காலத்திலும் இல்லை. காற்று இயங்குகின்ற வளப்பம் பொருந்திய இந்தப் பெரிய உலகத்திலே வாழும் மக்களே அதற்குச் சான்று.

வளி-காற்று, வழங்குதல் - உலாவுதல்; மல்லல்-வளப்பம்; மா-பெரிய; ஞாலம்-உலகம், மக்கள்; கரி-சான்று, சாட்சி. 245

6. பொருள்நீங்கிப் பொச்சார்ந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார்.

கருணை சிறிதும் இன்றிக் கொடுமையான செயல்களைச் செய்து உயிர் வாழ்கின்றவர்கள், தாம் அடைய எண்ணிய பொருள்களை இழந்தவர்களாவார்கள். மேலும், அவர்கள் தாம் அடைய எண்ணிய நன்மைகளையும், மறந்தவரே ஆவர்.

பொருள்-செல்வம்; அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களுமாம்; பொச்சாத்தல்-மறந்திருத்தல்; அல்லவை-கொடிய செயல்கள். 246

7. அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளி
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. [லார்க்கு

பொருள் இல்லாதவர்களுக்கு இவ்வுலக வாழ்க்கையில் இன்பம் இல்லாததுபோல், இரக்ககுணம் சிறிதும் இல்லாதவர்களுக்கு மேலுலகத்து இன்பம் இல்லை.

அவ்வுலகம்-மேலுலகம்; வீட்டுலகம். 247

8. பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார்மற் றாதல் அரிது.

கையில் பொருள் இல்லாதவர்கள் என்றைக்கேனும் ஒரு நாளில் பொருளைப் பெற்றுச் சிறப்புறுதல் கூடும். அருளில்லாதவர்களோ அழிந்தவரே ஆவர். அவர்கள் மறுபடியும் அந்த அழிவு நிலையிலிருந்து உயர்வு பெறுதல் அரிது. 248

9 தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்.

கருணை சிறிதும் இல்லாதவன் செய்யும் அறச் செயல்களை ஆராய்ந்து பார்த்தால் அவை உள்ளத் தெளிவில்லாதவன் உண்மைப் பொருளாகிய இறைவனைக் காண முயலுவதற்குச் சமமே ஆகும்.

தெருளாதான் - மனத்தெளிவில்லாதவன்; மெய்ப்பொருள்-உண்மைப் பொருள், பரம்பொருள். 249

10. வலியார்முன் தன்னை நினைக்கத்தான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து.

அருளில்லாதவன் தன்னினும் எளியவர்களைத் துன்புறுத்தப்புகும்போது, தன்னினும் வலியவர்கள் தன்னை வருத்தும் காலத்துத் தான் அஞ்சி இருக்கும் நிலையை நினைத்தல் வேண்டும். 250

## 26. புலால் மறுத்தல்

1. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்?

தன் உடம்பை வளர்ப்பதற்காக மற்றோர் உயிரின் உடம்பைத் தின்பவன் பிற உயிர்களிடத்து எவ்விதம் அருள் உடையவனாய் இருக்கமுடியும்?

ஊன்-மாமிசம், இங்கே உடலைக் குறிக்கும். 251

**2. பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு.**

பொருளைக் கருத்துடன் சேமித்து வையாதவர் பொருளால் அடையக்கூடிய பயனை இழந்துவிடுவர். அதுபோல ஓர் உடலைத் தின்பவர் அருளால் அடையக்கூடிய பயனை இழந்துவிடுவர். 252

**3. படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது
உடல்சுவை உண்டார் மனம். [ஒன்றன்**

கொலைக் கருவியைக் கையில் கொண்டிருப்பவர் மனம் கொலை செய்தலிலேயே செல்லும். நன்மையான செயலைச் செய்வதற்கு அவர் மனம் இடங்கொடாது. அது போல, பிற உயிர்களின் ஊனை உண்டு சுவை கண்டவர்கள் அந்த உயிரின் உடலை உண்டு சுவைக்க விரும்புவார்களே அல்லாமல் அவ்வுயிரின் மீது கருணை காட்ட எண்ண மாட்டார்கள்.

படை-கொலைத் தொழில் புரியும் ஆயுதம்; நன்று ஊக்காது-நன்மையான செயலைச் செய்ய இடந்தராது. 253

**4. அருளல்லது யாதெனில் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல்.**

அருள் என்பது எது என்றால் ஓர் உயிரையும் கொல்லாமல் இருத்தல். அருள் அல்லாதது எது என்றால் பிற உயிர்களைக் கொல்லுதல். ஆதலால், கொல்லுதலோடு நிற்காமல் கொல்லப்பட்ட உயிரின் ஊனினையும் தின்னுதல் அறம் ஆகாது.

கோறல்-கொல்லுதல்; பொருள், அறமாகிய பொருள். 'அருள் யாதெனில் கொல்லாமை, அல்லது யாதெனில் கோறல்' எனப் பிரித்துக் கொள்க. இத்தொடருக்கு 'இரக்க குணம் இல்லாமை எது என்றால் கொல்லாமை என்னும் குணத்தை அழித்தலே ஆகும்' என்றும் பொருள் கொள்ளலாம். 254

**5. உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு.**

உயிர்கள் உடம்போடு வாழ்கின்ற தன்மை ஊன் உண்ணாமையாகிய செயலினாலேயே நிலைத்து இருக்கின்றது. ஆதலால், புலால் மறுத்தலை விரதமாகக் கொண்டவனுடைய உயிரை உண்பதற்கு நரகமானது வாய் திறந்து நிற்காது.

அண்ணாத்தல் - வாய்திறந்திருத்தல்; அளறு - நரகலோகம். 'ஊன் உண்ண அண்ணாத்தல் செய்யாது அளறு' என்னும் தொடர்க்கு, 'ஒருவன் ஊன் உண்டால் அவனை விழுங்கிய நரகம் பின் அவனை வெளியே உமிழ்தற்குத் தன் வாயினைத் திறவாது' என்றும் பொருள் கொள்ளலாம். 255

6. தினற்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்.

ஊன் தின்பதற்காக உயிர்கள் கொல்லப்படுகின்றன. உண்பவர் விலை கொடுப்பதால் ஊன் விற்கப்படுகிறது. புலால் தின்பதற்காக உலகத்தவர்கள் உயிர்களைக் கொல்லாதிருப்பார்களானால் ஊனை விலைக்கு விற்பவர்களும் இல்லாமற் போய்விடுவர்.

தினல் - தின்னுதல்; உலகு-உலகத்திலுள்ள மக்கள்; விலைப்பொருட்டால் ஊன் தருவார்-இறைச்சி விற்பவர். 256

7. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ணது உணர்வார்ப் பெறின்.

புலால் என்பது பிற உயிர்களின் உடம்பில் உள்ள புண்ணேயாகும். புண் என்ற உண்மையை அறியும் அறிவுடையவர்கள் அதனை உண்ணாமல் விலக்குதல் வேண்டும்.

உண்மை யுணரும் அறிவில்லாதவரே புலால் உண்பர் என்பதாம். 257

8. செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன்.

குற்றமற்ற அறிவினை உடையவர்கள் தம்மாலோ பிறராலோ கொல்லப்படாமல் இயற்கையிலேயே உயிர் பிரிந்த உடலாக இருந்தாலும் அந்த ஊனையும் உண்ண மாட்டார்கள்.

செயிர்-குற்றம்; தலைப்பிரிந்த-நீங்கிய; காட்சி-அறிவு. 258

9. அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று.

நெய் முதலிய பொருள்களைத் தீயிர் பெய்து ஆயிரம் வேள்விகள் செய்வதைக் காட்டிலும் ஓர் உயிரினைக் கொன்று அதன் மாமிசத்தைத் தின்னாமல் இருத்தல் நல்லது.

அவி-வேள்வி செய்யும்போது யாகத் தீயில் இடும் இறைச்சி முதலிய பொருள்கள்; வேட்டல்-வேள்வி செய்தல், யாகம் செய்தல்; செகுத்து-கொன்று. 259

10. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்.

ஓர் உயிரையும் கொல்லாமலும், பிறரால் கொல்லப் படாமல் தானே இறந்த உயிரின் உடலாய் இருப்பினும் அதனையும் தின்னாமலும் இருக்கின்ற ஒருவனை எல்லா உயிர்களும் கை குவித்து வணங்கும். 260

## 27. தவம்

1. உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு.

தனக்கு நேர்ந்த துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளுதலும் பிற உயிர்கட்குத் துன்பம் செய்யாதிருத்தலும் ஆகிய அவ்வளவே தவத்தின் வடிவம்.

உற்ற-நேர்ந்த; நோன்றல்-பொறுத்துக் கொள்ளுதல்; உறுகண்-துன்பம்; உரு-வடிவம். 261

2. தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம்அதனை
அஃதிலார் மேற்கொள் வது.

தவம் செய்தல் என்பது எல்லாராலும் இயல்வது அன்று: முன்பு நல்வினைகள் செய்துள்ளவர்களுக்கே அஃது இயலும். மற்றவர்கள் அதனை மேற்கொள்வது வீணேயாகும்.

தவமுடையார்-நல்வினைகள் செய்து பண்பட்டவர்; அவம்-வீண்செயல். 262

**3. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்.**

துறந்தவர்களுக்கு உண்டி, உடை முதலியன தந்து காப்பாற்றுவதற்காகத் துறந்தவர் அல்லாத இல்லறத்தார் தவம் செய்வதை மறந்தார்கள் போலும்.

துறந்தார் - வீடு, நிலம், மனைவி, மக்கள் முதலியவைகளை விட்டு நீங்கியவர். துப்புரவு - பாதுகாப்பு. 263

**4. ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்.**

தாம் நினைத்தால் தமக்குத் தீமை செய்யும் பகைவரை அழித்தலும், நமக்கு நன்மை செய்வோரை உயர்த்தலும் ஆகிய ஆற்றல் தவம் செய்வோர்க்கு அத்தவத்தால் வரும்.

ஒன்னார் - பகைவர்; தெறல் - கெடுத்தல், அழித்தல்; உவந்தார் - தம்மால் விரும்பப்பட்டவர்; ஆக்கல் - உயர்த்துதல். 264

**5. வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.**

ஒருவர் தவத்தின் வல்லாமையால் தாம் விரும்பியவைகளையெல்லாம் விரும்பியவாறே அடைதலால், செய்யக்கூடிய தவத்தை இந்தப் பிறவியிலேயே செய்தல் வேண்டும். 265

**6. தவம்செய்வார் தம் கருமம் செய்வார் மற்றல்லார்
அவம்செய்வார் ஆசையுள் பட்டு.**

தவம் செய்பவர்களே தம்முடைய கடமைகளைச் செய்பவர் ஆவர். அவ்விதம் தவம் செய்யாதவர் அவ்வாசை வலையுட் பட்டுத் தமக்குப் பயன்படாத வீண் செயலைச் செய்கின்றவரே ஆவர். 266

**7. சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.**

புடத்தில் இட்டுச் சுடச்சுடப் பொன்னானது ஒளி மிகுந்து விளங்கும். அதுபோலத் துன்பம் மேன்மேலும் வருத்துவதைப் பொருட்படுத்தாது தவம் செய்வோர்கட்கு மெய்யுணர்வு ஒளியுடன் விளங்கும். 267

**8. தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய**
**மன்னுயிர் எல்லாம் தொழும்.**

தன் உயிரையே தான் என்று எண்ணும் சுயநல எண்ணம் முற்றிலும் நீங்கப்பெற்றவனை, இந்த உலகத்தி லுள்ள உயிர்களெல்லாம் அவன் பெருமை அறிந்து வணங்கும்.

'நான்' என்ற ஆணவம் அழிந்தவனை உலகத்தார் போற்றுவர் என்பதாம். 268

**9. கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்**
**ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.**

தவம் செய்வதால் வரும் வல்லமையால் சிறந்தவர் கட்கு எமனை வெல்லுவதும் இயலும்.

கூற்றம் - எமன்; குதித்தல் - கடத்தல் அல்லது வெல்லு தல்; நோற்றலின் ஆற்றல் - தவத்தால் வரும் வல்லாமை. 269

**10. இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்**
**சிலர்பலர் நோலா தவர்.**

உலகத்தில் வாழ்க்கை நலன்களைப் (பெற்றிருப்பவர் சிலராக) பெறாதவர் பலராக இருப்பதற்குக் காரணம் என்னவென்றால், தவம் செய்கின்றவர் சிலராகவும் தவம் செய்யாதவர் பலராகவும் இருத்தலே ஆகும்.

இலர் - வாழ்க்கை நலன்களைப் பெறாதவர்; நோலாதவர் - தவம் செய்யாதவர். 270

## 28. கூடா ஒழுக்கம்

**1. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்.**

வஞ்சகம் பொருந்திய மனம் உடையவனது பொய் ஒழுக்கத்தைக் கண்டு, அவனுடைய உடம்பில் கலந்து நிற்கின்ற ஐந்து பூதங்களும் தமக்குள்ளே சிரித்துக் கொள்ளும்.

வஞ்சம் - கபடம், பொய்; படிற்றொழுக்கம் - பொய்யான ஒழுக்கம்; பூதங்கள் ஐந்தாவன: நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்பன; நகும் - சிரித்துக் கொள்ளும். 271

**2. வானுயர் தோற்றம் எவன் செய்யும் தன்னெஞ்சம்
தான் அறி குற்றப் படின்.**

குற்றமெனத் தன் நெஞ்சு அறிந்த ஒரு செயலை ஒருவன் செய்வானேயானால் அவனுக்கு ஆகாயத்தை அளாவிய தோற்றம் அமைந்திருந்தாலும் அதனால் என்ன பயன்? சிறிதும் இல்லை. 272

**3. வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.**

ஐம்புலன்களையும் அடக்கி ஆளும் மனவலிமை இல்லாத ஒருவன் தவ வேடமாகிய வலிமை பொருந்திய உருவத்தைத் தாங்கி நிற்பது, வலிமையில்லாத பசுவானது வலிமையுடைய புலித்தோலைப் போர்த்துகொண்டு பயிரை மேய்தலுக்குச் சமமாகும்.

வலியில் நிலைமை-மனவலியற்ற நிலை; வல்லுருவம்-காண்போர் அஞ்சத்தக்க உருவம், இங்கே தவ வேடம்; பெற்றம் - பசு. 273

**4. தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.**

தீய எண்ணங்களையுடைய ஒருவன் தவக்கோலத்தில் மறைந்து நின்று தவ ஒழுக்கத்திற்கு மாறான செயல்களைச் செய்வது, வேடன் ஒருவன் ஒரு புதரிலே மறைந்து நின்று பறவைகளைப் பிடித்தலுக்குச் சமம் ஆகும். 274

5\. பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்
ஏதம் பலவும் தரும். றெறு(ன்)

ஆசைகளையெல்லாம் அறவே ஒழித்துவிட்டோம் என்று சொல்லிக்கொண்டு தகாத காரியங்களில் ஈடுபடுபவர்களுடைய பொய்யொழுக்கம். பின்னர் அவர்களே, "நாம் என்ன தவறு செய்துவிட்டோம்" என்று எண்ணி எண்ணி வருந்தும்படியான துன்பங்களைத் தரும்.

பற்று - உலக ஆசை; எற்று எற்று என்று - என்ன தவறு செய்தோம், என்ன தவறு செய்தோம் என்று. 275

6\. நெஞ்சில் துறவார் துறந்தாற்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல்.

உலக ஆசையினை உள்ளத்திலிருந்து ஒழிக்காதவராய் முற்றும் துறந்தவர்போல் நடித்து மக்களை ஏமாற்றி வாழ்கின்றவரைப் போன்ற கொடியவர் இவ்வுலகில் இலர். 276

7\. புறம்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியார் உடைத்து.

வெளிவேடத்தில் செம்மை நிறம் வாய்ந்த குன்றிமணியைப்போல் செம்மையுடையோராகத் தோன்றினாராயினும் உள்ளத்தில் அந்தக் குன்றிமணியின் மூக்கில் உள்ள கருமைமைப் போன்ற கெட்ட எண்ணங்கொண்வர்களையும் உடையது இவ்வுலகம். 277

8\. மனத்தது மாசாக மாண்டார்நீர் ஆடி
மறைந்தொழுகும் மாந்தர் பலர்.

மனத்தில் நிறைந்திருப்பது குற்றமாக இருக்க, மேலுக்குத் தவ ஒழுக்கத்திற் சிறந்தவர் போல் நடித்துப் புண்ணியதீர்த்தங்களில் முழுகித் தம் வெளித்தோற்றத்தில் மறைந்து நின்று உயிர் வாழும் மக்கள் இவ்வுலகில் பலராவர். 278

9\. கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலால் கொளல்.

அம்பானது பார்ப்பதற்கு அழகாகத் தோன்றினாலும் கொடுமையான செயலைப் புரிகின்றது. யாழினது கொம்பு வளைந்து தோன்றினாலும் மக்களுக்கு இன்பத்தைத் தருவதில் சிறந்ததாக இருக்கின்றது. அவ்விதமே மக்களுள்ளும் வேடங்களைப் பொருட்படுத்தாமல் அவர்களின் செயல்களைக் கண்டு அவர்கள் ஒழுக்கத்திற் சிறந்தவர்கள் அல்லது சிறவாதவர்கள் என்று தீர்மானித்தல் வேண்டும்.

யாழ்-வீணை போன்ற ஒரு வகை இசைக் கருவி; கோடு-கொம்பு, செவ்விது-சிறந்தது; வினைபடுபாலால்-செயல் வகையால். 279

**10. மழித்தலும் நீட்டலும் வேண்டா. உலகம்**
**பழித்தது ஒழித்து விடின்.**

பெரியோர்களால் வெறுக்கப்பட்ட தீய ஒழுக்கங்களை ஒருவன் முற்றிலும் நீக்கிவிட்டால் தலைமயிரை அறவே நீக்கி மொட்டை அடித்துக்கொள்ளுதலும், சடையை நீட்டி வளர்த்துக் கொள்ளுதலும் ஆகிய வெளிவேடங்கள் அவனுக்குச் சிறிதும் வேண்டியதில்லை. 280

## 29. கள்ளாமை

**1. எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்**
**கள்ளாமை காக்கதன் நெஞ்சு**

பிறர் தன்னை இகழாதிருக்க விரும்புகின்றவன் பிறரை வஞ்சித்து எத்தகைய பொருளையும் கவர்ந்து கொள்ளாமல் இருக்கத் தன் மனத்தைக் காத்துக்கொள்ள வேண்டும்.

கள்ளாமை-பிறருடைய பொருளை அவர் அறியாத வண்ணம் அபகரித்துக் கொள்ளாமை. 281

**2. உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்**
**கள்ளத்தால் கள்வேம் எனல்.**

தகாத செயல்களை மனத்தினாலே நினைப்பதும் குற்றமே ஆகும். ஆதலால் பிறருடைய பொருளைக் களவின் மூலம் அபகரித்துக்கொள்வோம் என்று நாம் மனத்தாலும் நினையாதிருத்தல் வேண்டும். 282

3. களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும்.

களவின்மூலம் வரும் செல்வம் முதலில் அளவுகடந்து பெருகுவதுபோல் தோன்றி, முடிவில் முதலிலிருந்த பொருளையும் அழித்துத் தானும் அழியும். 283

4. களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும்.

பிறர் பொருளை அபகரிக்க எண்ணும் எண்ணத்தினால் எழுந்த பேராசை அவ்வெண்ணத்தை நிறைவேற்றச் செயலில் ஈடுபடும்போது நீங்காத துன்பத்தைத் தரும்.

கன்றிய-மிகுந்த; விளைவின்கண்-செயலில் தோன்றும் போது; வீயா-அழியாத; விழுமம்-துன்பம். 284

5. அருள்கருதி அன்புடையார் ஆதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்.

கருணையின் காரணமாக எல்லா உயிர்களிடத்தும் அன்புடையோராயிருக்கும் குணம், பிறர்பொருளைக் கவர எண்ணிப் பொருளுடையவர் ஏமாறி இருக்கும் நேரத்தை எதிர்பார்த்து இருப்போரிடம் தோன்றாது.

பொச்சாப்பு-மறதி, ஏமாறி இருக்கும் தன்மை. 285

6. அளவின்கண் நின்றொழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காத லவர்.

பிறர் பொருளைக் களவு செய்தலில் மிகுந்த ஆசையுடையவர்கள் நீதி நெறியின்படி அடங்கி நின்று வாழ மாட்டார்கள்.

அளவு-நீதிநெறி; ஒழுகலாற்றார்-வாழமாட்டார். 286

7. களவென்னும் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல்.

நீதிநெறியில் நின்று வாழக்கூடிய வல்லமை உடையவர்களிடம் திருட்டுத்தனம் என்னும் அறியாமையோடு கூடிய வல்லமை இல்லை.

கார் அறிவு-இருண்ட அறிவு, அறியாமை; ஆண்மை-ஆளும் தன்மை, வல்லமை. 287

8. அளவறிந்தார் நெஞ்சத்து அறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சில் கரவு.

நீதி நெறிகளை அறிந்து வாழ்கின்றவர் மனத்தில் அறச் செயல்கள் நீங்காமல் நிலைபெறும். அதுபோலக் களவுச் செயலை அறிந்தவர் மனத்தில் வஞ்சனை நீங்காமல் நிலை பெறும். 288

9. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.

களவுச் செயலைத் தவிரப் பிற நற்செயல்களைச் சிறிதும் அறிந்து தெளியாதவர், நியாயம் அல்லாதவற்றைச் செய்து அப்பொழுதே அழிந்து போவார். 289

10. கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தேள் உலகு.

திருட்டுத் தொழிலை மேற்கொண்டவர்களை உயிர் வாழ்வதற்கு இடமாகிய இவ்வுலகம் நீக்கி வைக்கும். திருட்டுத் தொழிலினை மேற்கொள்ளாதவர்களை வானுலகமும் விரும்பி வரவேற்கும்.

உயிர் நிலை-உயிர் வாழ்வதற்கு இடமாகிய இவ்வுலகம்; புத்தேளுலகு-தேவர்கள் வாழும் வானுலகம். 290

## 30. வாய்மை

1. வாய்மை எனப்படுவது யாதெனில் யாதொன்றும்
தீமை இலாத சொலல்.

மெய் என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிறது எது வென்றால் மற்றவர்களுக்குத் தீங்கு ஒரு சிறிதும் தாராத சொற்களைச் சொல்லுவதே ஆகும்.

வாய்மை-மெய்ம்மை, உண்மை; தீமையில்லாத-தீங்கு விளைக்காத சொற்கள். 291

**2. பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.**

குற்றம் சிறிதும் இல்லாத நன்மையினைப் பிறருக்குத் தருமானால் பொய்யான சொற்களும், மெய்ம்மைச் சொற்களைப் போன்றவையே ஆகும்.

வாய்மை யிடத்த-உண்மைக்குச் சமமானவை; புரை தீர்ந்த-குற்றம் நீங்கிய. 292

**3. தன்நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும்.**

ஒருவன் தன் மனம் நன்றாக அறிந்த ஒன்றை மறைத்து மாற்றிச் சொல்லுதல் கூடாது. அவ்விதம் மறைத்துச் சொன்னால் பிறகு அவன் மனமே அவனை வருத்திக் கொண்டிருக்கும். 293

**4. உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்.**

ஒருவன் தன் மனச்சாட்சிக்கு ஏற்பப் பொய் சொல்லாது நடப்பானேயானால் அவன் உலகத்தாரின் உள்ளங்களிலெல்லாம் இருப்பவனாவான். 294

**5. மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானம் செய்வாரின் தலை.**

தன் மனத்திற்கு மாறுபடாமல் ஒருவன் உண்மை பேசுவானேயானால் தவமும், தானமும் ஒருங்கே செய்வோரினும் அவன் சிறப்புடையவனாவான். 295

**6. பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும்.**

பொய் பேசாமல் இருத்தலைப் போல ஒருவனுக்குப் புகழைத் தருவது வேறொன்றுமில்லை. அஃது அவனை வருந்தச் செய்யாமல் எல்லா அறங்களையும் அவனுக்கு அளிக்கும். 296

7. பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

ஒருவன் பொய் பேசாதிருத்தலைத் தவறாமல் செய்து வருவானேயானால் அவன் பிற அறங்களைச் செய்ய வேண்டுவதே இல்லை.

பொய்யாமை (1) பொய் பேசாமல் இருத்தல், (2) பொய்யாமை - தவறாமை; "செய்யாமை, செய்யாமை" என்பது வற்புறுத்துதற்கு அடுக்கி வந்தது. 297

8. புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்.

உடம்பின் வெளிப்புறத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ளுதல் நீரினால் உண்டாகும். அதுபோல உடம்பின் உட்புறமாகிய மனத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ளும் தன்மை உண்மை பேசுவதால் உண்டாகும். 298

9. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

ஒருவருடைய பெருமையைப் பலரும் அறிய விளக்கிக் காட்டும் ஒழுக்கம், அறிவு, கல்வி, செல்வம் முதலியன அவருடைய உண்மைச் சிறப்பினை விளக்கிக் காட்டுவன அல்ல; ஒழுக்கத்தால் சிறந்து விளங்கும் பெரியோர்களின் பெருமையைப் பலரும் அறிய விளக்கிக் காட்டும் பொய் பேசாமையாகிய நல்ல பண்பே அவர்களின் உண்மைச் சிறப்பினை விளக்கிக் காட்டுவதாகும்.

எல்லா விளக்கு - ஒருவனுடைய பெருமையினை விளக்கிக் காட்டும் எல்லா நற்பண்புகளும்; பொய்யா விளக்கு - பொய்யாமையாகிய (உண்மைச் சிறப்பினை) விளக்கிக் காட்டும் நல்ல பண்பு. 299

10. யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்
வாய்மையின் நல்ல பிற. [தொன்றும்

யாம் உண்மையாகக் கண்ட பொருள்களில் வாய்மையைக் காட்டிலும் எவ்வகையிலும் சிறந்ததாகக் கூறக்கூடிய பொருள் வேறு ஒன்றும் இல்லையாம். 300

## 31. வெகுளாமை

1. செல்லிடத்துக் காப்பான் சினம்காப்பான்
காக்கின்என்? காவாக்கால் என்? [அல்லிடத்துக்

தன் சினம் பலிக்கும் இடத்து அந்தச் சினத்தை எழவொட்டாமல் தடுப்பவனே சினத்தைத்தடுத்தவனாவான். தன் கோபம் பலிக்காத இடத்தில் அவன் அக்கோபத்தை எழவொட்டாமல் தடுத்தால் என்ன? தடுக்காவிட்டால் என்ன?

செல்லிடம்-வயது, வலிவு, செல்வாக்கு முதலியவைகளால் தன்னினும் தாழ்ந்தோரிடம்; அல்லிடம்—அல்லாத இடம், தன்னிலும் பலமுடையவரிடம். 301

2. செல்லா இடத்துச் சினம்தீது செல்லிடத்தும்
இல்அதனின் தீய பிற.

தன் கோபம் செல்லாத இடத்தில் கோபம் கொள்வது தனக்குத் தீங்கினை விளைவிக்கும். தன் கோபம் செல்லுகின்ற இடத்திலும் கோபம் கொள்வதைக் காட்டிலும் பெரிய தீங்கு வேறொன்றுமில்லை. 302

3. மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனால் வரும்.

தீமையான நிகழ்ச்சிகளெல்லாம் ஒருவனுக்குக் கோபத்தினாலேயே உண்டாகின்றன. ஆதலால் எத்தகையவரிடத்திலும் நாம் சினம் கொள்வதை மறந்துவிடுதல் வேண்டும். 303

4. நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற.

முகத்தில் தோன்றும் மலர்ச்சியையும், அகத்தில் தோன்றும் மகிழ்ச்சியையும் அழிக்கின்ற கோபத்தைக் காட்டிலும் வேறு பெரிய விரோதி ஒருவனுக்கு உண்டோ? இல்லை.

நகை-முகத்தின்கண் தோன்றும் மலர்ச்சி; உவகை-உள்ளத்தின்கண் தோன்றும் மகிழ்ச்சி; கொல்லுதல்-அழித்தல். 304

5. **தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்**
**தன்னையே கொல்லும் சினம்.**

ஒருவன் தனக்குத் துன்பம் நேராமல் தன்னைத் தான் காத்துக்கொள்ள விரும்பினால் அவன் கோபத்தை அடக்கிக் கொள்ள வேண்டும். அவ்விதம் அவன் தன் கோபத்தை அடக்கிக் கொள்ளாவிட்டால் அந்தக் கோபமானது மற்றவர்களுக்குத் தீங்கு செய்வதைவிடத் தனக்கே அழிவை உண்டாக்கும். 305

6. **சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்**
**ஏமப் புணையைச் சுடும்.**

தன்னைச் சேர்ந்தவரை அழிக்கும் குணமுடைய சினமாகிய நெருப்பு அவரை அழிப்பதோடு நில்லாமல் அவருக்குப் பாதுகாவலாக உள்ள நல்லினத்தவராகிய தெப்பத்தையும் அழித்துவிடும்.

சேர்ந்தாரைக் கொல்லி-நெருப்பு, ஏமம்-பாதுகாவல்; புணை-தெப்பம் 306

7. **சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு**
**நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.**

தன் வலிமையைக் காட்டுவதற்குக் கோபத்தைக் கருவியாகக் கொண்டவன் கெடுவது நிலத்தைத் தன் கையினால் ஓங்கி அறைந்தவனுடைய கை துன்புறுவது எவ்வளவு நிச்சயமோ, அவ்வளவு நிச்சயமாகும்.

பொருள்-இங்கே 'கருவி' என்னும் பொருளில் வந்தது. பிழையாதற்று-(துன்புறுதல்) தவறாதது போன்றது. 307

8. **இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்**
**புணரின் வெகுளாமை நன்று.**

பல சுடர்களோடு கூடிய பெரிய நெருப்புத் தொகுதி தன்னைச் சூழ்ந்து வருத்தும் துன்பத்தைப் போன்ற கொடிய துன்பங்களை ஒருவன் தனக்குச் செய்யினும் தன்னால் முடியுமானால் அவன்மீதும் கோபம் கொள்ளா திருத்தலே நன்று. 308

9. உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின்.

ஒருவன் எந்தக் காலத்திலும் கோபத்தைத் தன்னுடைய மனத்தில் நினையாதவனாயிருந்தால் அவன் மனத்தில் எண்ணிய எல்லா நன்மைகளும் உடனே அவனை வந்து அடையும்.

உள்ளியது-எண்ணியது, அஃதாவது எண்ணிய நன்மைகள்; எய்தும்-அடையும்; உள்ளான்-நினைக்கமாட்டான். 309

10. இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

அளவு கடந்த கோபத்தை உடையவர் உயிரோடு இருப்பவராயினும் இறந்தவரைப் போன்றவரே ஆவர். கோபத்தை அடியோடு ஒழித்துவிட்டவர் எல்லாவற்றையும் அறவே துறந்த துறவிகளுக்குச் சமமாக இருப்பர்.

இறந்தார் (1)-அளவில் கடந்தவர். இறந்தார் (2)-செத்தவர்; துறந்தார் (1)-ஒழித்தவர்; துறந்தார்(2)-துறவி. 310

## 32. இன்னா செய்யாமை

1. சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

பிறருக்குத் துன்பத்தைத் தருவதால் சிறப்பைத் தரத்தக்க செல்வங்களைப் பெறுவதாக இருந்தாலும் அத்தகைய துன்பத்தைச் செய்யாமலிருப்பதே குற்றமற்ற பெரியோர்களது கொள்கை.

சிறப்பு ஈனும் செல்வம்-பெருமையைத் தரும் செல்வம்; மாசற்றார் - குற்றமற்றவர்கள்; கோள் - கொள்கை, துணிவு. 311

2. கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

தம்மீது பகைமை கொண்டு ஒருவன் தமக்குத் துன்பம் பலவும் செய்த அந்த நேரத்திலும் அந்தத் துன்பங்கட்கு எதிராக அவனுக்குத் தீங்கு செய்யாமலிருத்தலே குற்றமற்ற பெரியோர்களது கொள்கையாகும்.

கறுத்து-கோபம் கொண்டு; செய்த அக்கண்ணும்-செய்த அந்த நேரத்திலும்; மறுத்து-பதிலாக. 312

**3. செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்**
**உய்யா விழுமம் தரும்.**

ஒருவன் ஒரு தீங்கும் செய்யாமலிருக்க அவனைப் பகைத்து அவனுக்குப் பெருந் தீங்கினைச் செய்தவர்க்கும் அவன் கெடுதி செய்தால், அச்செயல் அவன் தப்பமுடியாத துன்பத்தை அவனுக்குத் தரும். 313

**4. இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண**
**நன்னயம் செய்து விடல்.**

தனக்குத் தீங்கு செய்தவர்களைத் தண்டித்தலாவது தீங்கு செய்தவர்களே வெட்கித் தலை குனியும்படி அவர்களுக்கு நன்மை தரும் செயல்களைச் செய்து, அவர்கள் செய்த தீங்கினையும் தான்செய்த நன்மையினையும் மறந்து விடுவதே யாகும். 314

**5. அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்**
**தன்நோய்போல் போற்றாக் கடை.**

மற்ற உயிருக்கு நேர்ந்த துன்பத்தைத் தமக்கு நேர்ந்த துன்பம்போல் எண்ணி அந்த உயிரைக் காப்பாற்றாவிட்டால் ஒருவர் பெற்றுள்ள அறிவினால் உண்டாகக்கூடிய பயன் என்ன இருக்கிறது? 315

**6. இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை**
**வேண்டும் பிறன்கண் செயல்.**

இவை மக்களுக்குத் துன்பத்தைத் தருவன என்று அறிந்து கொண்ட எந்தச் செயல்களையும் ஒருவன் மற்றவனுக்குச் செய்யும் முயற்சியில் ஈடுபடாமல் இருத்தல் வேண்டும். 316

7. எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தா
மாணா செய்யாமை தலை. [னாம்

துன்பம் வரும் செயல்கள் எவ்வளவு சிறியனவாக இருப்பினும் அவற்றை எக்காலத்தும் எவருக்கும் மனத்தினாலும் செய்ய எண்ணாதிருத்தலே சிறந்ததாகும். 317

8. தன்னுயிர்க்கு இன்னாமை தான் அறிவான்
மன்னுயிர்க்கு இன்னா செயல். [என்கொலோ

பிறர் செய்யும் துன்பச் செயல்களால் தன்னுயிர்க்குத் தீங்கு விளைவதை உணர்கின்ற ஒருவன் மற்ற உயிர்க்குத் துன்பங்களைச் செய்தல் என்ன காரணமோ அறிகிலோம். 318

9. பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா
பிற்பகல் தாமே வரும்.

பிறருக்குத் துன்பம் தருவனவற்றை ஒருவர் ஒரு நாளின் முற்பகலில் செய்வாரேயானால் அவருக்குத்துன்பம் தருவன அன்று பிற்பகலில் பிறர் செய்யாமல் தாமே அவரை வந்து அடையும். 319

10. நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்
நோயின்மை வேண்டு பவர். [செய்யார்

துன்பங்களெல்லாம் துன்பம் செய்தாரையே வந்து அடையும். ஆதலால், துன்பம் இல்லாமல் வாழ்தலை விரும்புகின்றவர்கள் பிறருக்குத் துன்பம் செய்யமாட்டார்கள். 320

## 33. கொல்லாமை

1. அறவினை யாதெனில் கொல்லாமை; கோறல்
பிறவினை எல்லாம் தரும்.

அறச்செயல் என்று சொல்லப்படுவது எதுவென்றால், அஃது ஓர் உயிரையும் கொல்லாமல் இருத்தலே ஆகும். கொல்லும் குணமோ அறம் அல்லாத பிற எல்லாத் தீய செயல்களையும் விளைவிக்கும். 321

2. பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.

தான் ஈட்டிய உணவைப் பல உயிர்க்கும் பகுத்துக் கொடுத்து மிகுந்ததைத் தானும் உண்டு அவ்வுயிர்களைக் காப்பாற்றுதல், நூலாசிரியர்கள் தொகுத்துக் கூறியுள்ள அறச் செயல்கள் எல்லாவற்றிலும் முதன்மையான அறச் செயல் ஆகும். 322

3. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

கொல்லாமை என்னும் ஓர் அறமே பிற அறங்கள் எல்லாவற்றிலும் சிறந்த ஒன்றாக இருக்கத்தக்க சிறப்பினை யுடையது. பொய் சொல்லாமை அந்தக் கொல்லாமைக்கு அடுத்தபடி சிறந்த அறமாக நிற்கத் தக்க சிறப்பினை யுடையது.

ஒன்றாக நல்லது-தனிச் சிறப்புடையது; பின்சார-அதற்குப்பின் சிறந்து நிற்க. 323

4. நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி.

எல்லா அற நூல்களாலும் மிகவும் நல்ல வழி என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது எதுவென்றால் அஃது எத்தகைய உயிரையும்கொல்லாமலிருக்கக் கடைப்பிடிக்கும் நெறியே ஆகும். 324

5. நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சி
கொல்லாமை சூழ்வான் தலை.

இல்லற வாழ்வில் நேரும் துன்ப நிலைக்கு அஞ்சி அதை விட்டுத் துறவறதினை மேற்கொண்டவர்களைக் காட்டிலும் பிற உயிரைக் கொலை செய்வதற்கு அஞ்சி எந்த உயிரையும் கொல்லாதிருக்கும் விரதத்தைக் கைக் கொண்டவனே சிறந்தவனாவான். 325

6. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது உயிருண்ணும் கூற்று.

கொல்லாமையை விரதமாக மேற்கொண்டு நடக்கின்றவனுடைய வாழ்நாள்மேல், உயிரைக் கொண்டு செல்லும் எமன் தன் கருத்தைச் செலுத்தமாட்டான். 326

7. தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை.

தன்னுயிர் போவதாயினும் ஒருவன் வேறொன்றன் இனிய உயிரைப் போக்கும் செயலைச் செய்தல் கூடாது. 327

8. நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை.

கொலைத் தொழிலைச் செய்வதால் உண்டாகும் செல்வம் மிகவும் பெரியதாக இருந்தாலும், அதனால் நன்மை விளைவதாய் இருந்தாலும், அக்கொலைத் தொழிலால் பெறப்படும் செல்வம், நற்குணங்கள் பலவும் அமைந்த சான்றோர்க்கு இழிவுடையதே ஆகும். 328

9. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

கொலைத் தொழிலை உடையவராகிய மனிதர்கள், அத்தொழிலின் இழிவை உணர்ந்த நல்லோர் உள்ளத்தில் புலைத் தொழிலினராகத் தோன்றுவர்.

மாக்கள்-மனிதர்கள்; புலைவினையர்-புலைத் தொழிலினர்; புன்மை-இழிவான தன்மை. 329

10. உயிருடம்பின் நீக்கியார் என்ப செயிருடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

நோயோடு கூடிய உடம்புடன், நீங்காத தீய வாழ்க்கையை உடையவர்கள், முற்பிறப்பில் கொலை பல செய்து உயிர்களை உடம்பிலிருந்து நீக்கினவர் என்று அறிஞர் கூறுவர்.

செயிர்-குற்றம், இங்கே நோயினைக்குறிக்கும்; செல்லா-நீங்காத; தீ வாழ்க்கை-கொடிய வாழ்க்கை. 330

## 34. நிலையாமை

1. நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

நிலையற்றவைகளை நிலையானவை என்று எண்ணும் சிற்றறிவினை உடையராயிருத்தல் வாழ்வில் இழிவான நிலைமையாகும்.

நில்லாதவை-அழியக்கூடியவை; நிலையின்-அழியாமல் நிலைத்துநிற்பவை; புல்லறிவு-சிற்றறிவு; கடை-கீழ்ப்பட்ட நிலை. 331

2. கூத்தாட்டு அவைக்குழாத்தற்றே பெருஞ் செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று.

ஒருவனுக்குப் பெரும்செல்வம் வந்துசேர்தல் கூத்தாடும் இடத்தில் திடும் என மக்கள் ஒன்றாகத் திரண்டு வருதலுக்குச் சமம் ஆகும். வந்த செல்வம் நீங்கிப் போவது கூத்து முடிந்ததும் அக் கூட்டம் உடனே கலைந்து போவதற்குச் சமம் ஆகும்.

கூத்தாட்டு அவை-கூத்துக்கள் ஆடும் நாடக சபை; குழாம்-கூட்டம்; போக்கு-நீங்கிப் போதல்; விளிதல்-கெடுதல், இங்கே கூட்டம் கலைந்து போதலைக் குறிக்கும். 332

3. அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்.

செல்வமானது நிலைத்து நில்லாத இயல்பினை உடையது. ஆதலால் நாம் அதைப் பெற்றால் பெற்ற அப்போதே நிலையான அறச் செயல்களைச் செய்தல் வேண்டும்.

அற்கா-நிலையாத; அற்குப-நிலையான அறங்கள்; இயல்பிற்று-இயல்பை உடையது. 333

4. நாளென ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின்.

நாள் என்பது தன்னை ஒரு கால் அளவுபோல் நமக்குக் காட்டி, நம் உடலிலிருந்து உயிரினைப் பிரித்து அறுக்கும் வாளாகவே உள்ளது. ஆராய்ந்து அறியும் அறிவைப் பெற்றிருப்பவர்கட்கு இந்த உண்மை விளங்கும். 334

5. நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செயயப் படும்.

பேச முடியாதபடி நாவை அடக்கி, விக்குள் எழுவதற்கு முன்னமே அறச்செயல்களை நாம் விரைந்து செய்தல் வேண்டும். 335

6. நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு.

நேற்று உயிரோடிருந்த ஒருவன் இன்று உயிரோடு இல்லை (இறந்துபோனான்) என்று சொல்லப்படும் நிலைமையாகிய பெருமையையே இந்த உலகம் உடையதாக இருக்கிறது.

நெருநல்; நேற்று; பெருமை-இச்சொல் இங்கே இழிவைக் குறிக்கிறது. 336

7. ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல.

ஒரு கணப்பொழுது அளவேனும் உயிரும் உடலும் ஒன்று சேர்ந்து வாழும் வகையினை அறியாத மக்கள் கோடிக்கு மேற்பட்ட எண்ணங்களை எண்ணிப் பொழுதினை வீணாகக் கழிப்பர்.

கருதுப-எண்ணுவர்; கோடியும் அல்ல பல-கோடிக்கும் மேற்பட்ட எண்ணங்கள். 337

8. குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு.

உயிருக்கு உடம்போடு உள்ள உறவு, ஒரு பறவை தான் இருந்தற்கு இடமாயிருந்தகூடு தனியேகிடக்க அக்கூட்டினை விட்டு வேறிடத்துக்குப் பறந்து செல்வது போன்றது.

குடம்பை-கூடு; முட்டை என்றும் பொருள் கொள்வர். புள்-பறவை. 338

9. உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

இறப்பு எனப்படுவது ஒருவன் உறங்குவதற்குச் சமமாகும். பிறப்பு எனப்படுவது அவன் அவ்வுறக்கத்திலிருந்து விழித்துக் கொள்வதற்குச் சமமாகும். 339

10. புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு.

நிலையில்லாத உடம்பில் ஒரு மூலையில் ஒதுங்கிக் கிடக்கும் உயிருக்குப் புகுந்து குடி இருக்கத்தக்க அழியாத வீடு ஒன்று இதுவரையில் அமையவில்லையா?

புக்கில்-புகுந்து குடியிருக்கத்தக்க வீடு; துச்சில்-ஒதுங்கி இருக்கத்தக்க வீடு. 340

## 35. துறவு

1. யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.

ஒருவன் எந்த எந்தப் பொருளின்மீது தான் வைத்துள்ள ஆசையை நீக்கிக்கொள்கிறானோ அவன் அந்த அந்தப் பொருளின் காரணமாக வரும் துன்பத்தால் வருந்த மாட்டான்.

யாதனின் யாதனின் - எந்த எந்தப் பொருள்களில், நோதல் - வருந்துதல். 341

2. வேண்டின் உண்டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல.

துன்பம் இல்லாத நிலையை ஒருவன் விரும்பினால் அவன் இளமைப் பருவத்திலேயே துறத்தல் வேண்டும்; அவ்வாறு அவன் துறப்பானேயானால் அவன் இந்த உலகத்திலேயே பெறக்கூடிய இன்பம் பல உண்டு.

உண்டாகத் துறக்க - நிரம்பப் பொருள்கள் உள்ள காலத்திலேயே, அஃதாவது இளம் பருவத்திலேயே துறக்க; இயற்பால - உண்டாகத்தக்கவை; அடையத்தக்கவை. 342

3. அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு.

நிலைத்த இன்பத்தைப் பெற விரும்புவோர் ஐம்பொறிகளின் வழியாக வரும் ஐந்து புலன்களின் ஆசையினையும் அடக்குதல் வேண்டும். ஐந்து புலன்களாலும் அனுபவிக்கக் கூடிய பொருள்களையெல்லாம் அவர்கள் முற்றிலும் நீக்கி விடுதல் வேண்டும். 343

4. இயல்பாகும் நோன்பிற்கொன்று இன்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து.

தவம் செய்வோர்கட்குப் பற்று உண்டாக்கத்தக்க ஒரு பொருளும் இல்லாது இருத்தல் இயல்பாக வேண்டப்படுவது அப்பொருள்கள் இருத்தல் மீண்டும் ஆசையை உண்டாக்குவதற்குக் காரணமாயிருக்கும். 344

5. மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை.

மீண்டும் பிறவாதிருத்தலை விரும்பும் ஒரு துறவிக்கு இந்த உடம்பே வேண்டாத பொருளாகும். அவ்வாறு இருக்க மற்றைப் பொருள்களில் ஆசை வைத்து அவற்றோடு சம்பந்தம் கொள்வது எதற்காக? 345

6. யான்எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.

தான் அல்லாத உடம்பைத் தான் என்றும், தனக்கு உரிமையில்லாத பொருளைத் தனது என்றும் எண்ணுகின்ற மயக்கத்தினை ஒழிப்பவன் தேவர்களாலும் அடைய முடியாத மோட்ச வீட்டினை அடைவான். 346

7. பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

யான், எனது என்னும் இருவகைப் பற்றுக்களையும் உறுதியாக மனத்தில் பற்றிக்கொண்டு விடாமல் இருப்பவர்களை அவை காரணமாக வரும் துன்பங்கள் விடாமல் பற்றிக் கொண்டிருக்கும். 347

8. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

பற்றுக்களை முற்றிலும் துறந்தவர்கள் மோட்ச லோகத்தை அடைவதற்கு முற்பட்டவராவர். மற்றவர்கள் ஆசை காரணமாக மயங்கித் துன்ப வலையிலே அகப்பட்டவராவர்.

தலைப்படுதல்-முற்படுதல்; தீரத் துறத்தல்-முற்றிலும் பற்றற்று இருத்தல். 348

9. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்.

யான், எனது என்னும் ஆசை நீங்கியவுடனே அந்தப் பற்றற்ற நிலை பிறவித் துன்பத்தை ஒழிக்கும். அந்தப் பற்றினை நீக்கிக்கொள்ளாதவர்களிடம் பிறப்பும் இறப்பும் ஆகிய நிலையாமையே காணப்படும். 349

10. பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

கடவுள் எந்தப் பொருள்களின்மீதும் ஆசை இல்லாதவர். உயிர்கள் பொருள்களின்மீது ஆசை உடையவை. அந்த ஆசை நீங்கவேண்டுமானால் எந்தப் பொருளின் மீதும் ஆசையில்லாத கடவுளின்மீது ஆசை வைத்தல் வேண்டும். 350

## 36. மெய்யுணர்தல்

1. பொருளல்ல வற்றைப் பொருளென்று உணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு.

உண்மைப் பொருள் அல்லாதவைகளை, உண்மைப் பொருள் என்று நாம்கருதுகின்றோம். அவ்வாறு தவறாகக் கருதுகிற மயக்க உணர்ச்சியால் சிறப்பில்லாத துன்பப் பிறப்பு உண்டாகின்றது. 351

2. இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

மயக்கத்திலிருந்து நீங்கிக் குற்றமற்ற மெய்யறிவினை உடையவர்க்கு அந்த மெய்யறிவு அறியாமையாகிய இருளினை நீக்கி அவர்கட்கு இன்பத்தினை அளிக்கும். 352

3. ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து.

மயக்கத்திலிருந்து நீங்கி மெய்யுணர்வு பெற்றவர்க்கு இந்த நில உலகத்தைக் காட்டிலும் மோட்சலோகம் மிகவும் அருகிலே இருப்பதாகும். 353

4. ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு.

உண்மையை அறியும் அறிவு இல்லாதவர்களுக்கு மெய், வாய், கண், மூக்கு, செவிகளின் வழியாக அறியக்கூடிய ஐந்து வகையான அறிவுகளும் இருந்தாலும் பயன் இல்லை.

ஐயுணர்வு - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐவகை அறிவு; எய்தியக் கண்ணும் - அடைந்த போதும்; பயன் இன்று – பயன் இல்லை. 354

5. எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

எந்தப் பொருள் எந்தக் குணமுடையதாகத் தோன்றினாலும் அந்தப் பொருளின் உண்மையான தன்மையினை அறிந்து கொள்வதே அறிவுடைமை ஆகும்.

ஒரு பொருளின் உயர்வு தாழ்வு கருதி அதனை மதிக்காமல் அதில் உள்ள உண்மையை அறிந்துகொள்வதே சிறந்த அறிவாகும். 355

6. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

இவ்வுலகிலே படிப்பதற்குரிய நல்ல நூல்களைப் படித்து மெய்ப்பொருளை உணர்ந்தவர், மறுபடியும் இவ்வுலகத்தில் பிறந்து துன்புறாத சிறந்த வழியை அடையமுற்படுவர்.

ஈண்டு - இவ்வுலகத்தில்; தலைப்படுவர் - அடையமுற்படுவர்; வாரா - பிறவாத; நெறி - நல்வழி. 356

7. ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

ஒருவனது உள்ளம் மெய்ப்பொருளை ஆய்ந்து உணருமானால் மறுபடியும் அவனுக்குப் பிறப்பு உண்டு என்று நிச்சயமாக எண்ண வேண்டியதில்லை.

ஓர்த்து - ஆராய்ந்து; உள்ளது - இருப்பதாகிய மெய்ப்பொருள்; ஒருதலையா - நிச்சயமாக; பேர்த்து - மறுபடியும்; உள்ள வேண்டா - நினைக்கவேண்டா. 357

8. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு.

பிறத்தலுக்குக் காரணமாகிய அறியாமை நீங்கும் பொருட்டு மோட்சவீட்டிற்குக் காரணமாகிய பரம்பொருளை ஆராய்ச்சியால் கண்டு அறிவதே உண்மையான அறிவு.

சிறப்பு - மோட்ச வீடு; செம்பொருள் - பரம்பொருள். 358

9. சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாக உள்ள கடவுளாகிய மெய்ப்பொருளை உணர்ந்து உலக ஆசை முற்றிலும் நீங்கும்படி ஒருவன் நடந்து கொள்ளவேண்டும். அவ்வாறு நடந்துகொண்டால் அவனை அடைய இருந்த துன்பங்கள் அவனுடைய உணர்வு ஒழுக்கங்களை அழித்துப் பின் அவனை அடையமாட்டா.

சார்பு (1) - ஆதாரம், கடவுள்; சார்பு (2) - பற்று; சார்தரா - அடையமாட்டா; நோய் - வினைப்பயனால் வரும் துன்பம். 359

**10. காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்**
**நாமம் கெடக்கெடும் நோய்.**

விருப்பு, வெறுப்பு, அறியாமை ஆகிய இம்மூன்று குற்றங்களின் பெயரும் அறியும்படி ஒழுக வல்லவர்களுக்குத் துன்பங்கள் அனைத்தும் வாராமல் ஒழிந்து போகும்.

காமம் - விருப்பு; வெகுளி - வெறுப்பு; மயக்கம் - அறியாமை; நாமம் - பெயர். 360

## 37. அவா அறுத்தல்

**1. அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்**
**தவாஅப் பிறப்பீனும் வித்து.**

எல்லா உயிர்கட்கும் எப்போதும் ஒழியாத பிறவியை உண்டாக்குவதற்குக் காரணமாக இருப்பது அவ்வுயிர்கள் உலகப் பொருள்களின் மீது வைத்துள்ள ஆசையே என்று கூறுவர்.

அவா - ஆசை அல்லது பற்று; எஞ்ஞான்றும் - எக்காலத்தும்; தவா - கெடாத, விட்டு நீங்காத, ஒழியாத; வித்து - விதை. காரணமாக இருப்பது. 361

**2. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை; மற்றது**
**வேண்டாமை வேண்ட வரும்.**

ஒருவன் ஒன்றை விரும்பவேண்டுமானால் பிறவாதிருத்தலையே விரும்புதல் வேண்டும். அப்பிறவாமை ஆசையற்ற நிலையினை விரும்பினால் உண்டாகும். 362

**3. வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை**
**யாண்டும் அஃதொப்பது இல்.**

ஆசையில்லாமையைப் போன்ற மேலாகிய செல்வம் இந்த உலகத்தில் இல்லை. வேறு எந்த உலகத்திலும் அதற்குச் சமமான ஒரு செல்வம் இல்லை. 363

**4. தூஉய்மை என்பது அவாஇன்மை; மற்றது**
**வாஅய்மை வேண்ட வரும்.**

பரிசுத்தமான நிலை என்று சொல்லப்படுவது ஆசை யற்ற தன்மையே ஆகும். அத்தகைய தன்மை மெய்ம்மைப் பொருளாகிய கடவுளை விரும்ப வரும். 364

5. அற்றவர் என்பார் அவாஅற்றார் மற்றையார்
அற்றாக அற்றது இலர்.

பற்றற்றவர் (துறவிகள்) என்று சொல்லப்படுபவர் ஆசையை ஒழித்தவரே ஆவர். ஆசையினை ஒழிக்காத மற்றவர் அவ்விதமாகப் பற்றற்று வாழ்பவர் அல்லர். 365

6. அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா.

ஒருவனை வஞ்சித்து அவனைப் பிறப்பு, இறப்புக்களில் சுடுபடச் செய்வது அவா என்னும் உலக ஆசையே ஆகும். ஆதலால், அந்த அவா நெருங்காதபடி அதற்கு அஞ்சி வாழ்வதே அறம் ஆகும். 366

7. அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டும் ஆற்றான் வரும்.

ஒருவன் உலக ஆசையை முற்றிலும் ஒழித்தால் அவன் கெட்டுப் போகாமல் இருப்பதற்குக் காரணமாகிய நல்ல செயல் அவன் விரும்புகின்றபடியே உண்டாகும். 367

8. அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம் அஃதுண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்.

ஆசையில்லாதவர்களுக்குத் துன்பம் சிறிதும் இராது. அந்த ஆசையானது இருக்குமானால் எல்லாத் துன்பங்களும் மேன்மேலும் ஒழியாமல் வந்துகொண்டிருக்கும். 368

9. இன்பம் இடையறா தீண்டும் அவாஎன்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.

துன்பங்களுள் பெரியதாகிய ஆசை என்னும் துன்பம் ஒருவனுக்கு இல்லாமல் ஒழித்துவிடுமேயானால், அவனுக்கு இன்பம் இடைவிடாது மேன்மேலும் வந்து சேரும். 369

10. ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.

ஒருபோதும் நிரம்பாத தன்மையுடைய ஆசையை ஒழித்துவிட்டால் அதுவே எந்தக் காலத்திலும் மாறாத தன்மையினையுடைய இன்பத்தைத் தரும். 370

# ஊழ் இயல்

## 38. ஊழ்

1. ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி.

கைப்பொருள் உண்டாவதற்குக் காரணமான ஊழ் வினையால் சோம்பலின்மை உண்டாகும். கைப்பொருள் அழிவதற்குக் காரணமாகிய ஊழ்வினையால் சோம்பல் ஏற்படும்.

ஆகூழ் - பொருள் ஆதற்குரிய ஊழ்; ஊழ் - முறை, நியதி, ஒழுங்கு விதி, தெய்வம்; அசைவு - சோம்பல்; அசைவின்மை - சோம்பலின்மை; மடி - சோம்பல். 371

2. பேதைப் படுக்கும் இழவூழ்; அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை.

பொருள் இழப்பதற்குக் காரணமான ஊழானது வரின் அவ்வூழ் ஒருவனுக்கு நல்ல அறிவு இருந்தாலும் அந்த அறிவை மறைத்து அறியாமையையே கொடுக்கும். பொருள் ஆதற்குக் காரணமான ஊழானது வரின் அஃது அவன் அறிவு சுருங்கி இருந்தாலும் அவ்வறிவினை அதிகரிக்கச் செய்யும்.

பேதைப் படுக்கும் - அறியாமையில் செலுத்தும்; அறிவு அகற்றும் - அறிவை விரிவாக்கும். 372

3. நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்.

நுட்பமான நூல்கள் பலவற்றையும் ஒருவன் கற்றானாயினும் அவனுக்கு நுட்பமான அறிவு உடனே உண்டாகிவிடாது. அவனுக்கு ஊழினால் இயல்பாக இருக்கின்ற அறிவிற்குத் தக்கபடியே அந்த நுண்ணிய நூல்களால் ஆகிய அறிவும் வெளிப்பட்டுத் தோன்றும். 373

4. இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளியர் ஆதலும் வேறு.

இவ்வுலகத்தின் தன்மை இரண்டு வகைப்படும். செல்வமுடையவராக இருப்பவர் ஒரு பகுதியினர். அறிவுடையோராக இருப்பவர் மற்றொரு பகுதியினர். அதற்குக் காரணம் அவரவர் செய்த ஊழே ஆகும். 374

**5. நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும்**
**நல்லவாம் செல்வம் செயற்கு.**

செல்வத்தைத் திரட்ட ஒருவன் முயலும்போது போகூழ் இருப்பின் நல்லவையெல்லாம் கெட்டவைகளாம். ஆகூழ் இருப்பின் கெட்டவையெல்லாம் நல்லவைகளாம்.

நல்லவை - காலம், இடம், கருவி, தொழில் முதலியண் நல்லவையாக இருத்தல். 375

**6. பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்**
**சொரியினும் போகா தம.**

விதியின் காரணமாகத் தமக்கு உரியன அல்லாதவற்றை வருந்திக் காப்பாற்றினாலும் அவை நில்லாமல் போய்விடும். விதியின் காரணமாகத் தமக்குரியவைகளைப் புறத்தே கொண்டு போய் எறிந்தாலும் அவை அகலமாட்டா.

பரியினும் - வருந்திக் காப்பினும்; பாலல்ல - விதியின் காரணமாகத் தமக்கு உரியன அல்லாதவை; உய்த்து - கொண்டுபோய்; தம - தம்முடையவை. 376

**7. வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி**
**தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.**

தெய்வத்தால் வகுக்கப்பட்டுள்ள வகைப்படியே எதையும் அனுபவிக்க முடியுமே யொழியக் கோடிக்கணக்கான பொருள்களை வருந்திச் சேர்த்தவருக்கும் அதற்கு மேலாக அனுபவிக்க முடியாது. 377

**8. துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால**
**ஊட்டா கழியும் எனின்.**

வறுமையினால் அனுபவிக்கத் தக்க பொருளில்லாதவர்களும் ஊழினால் அவர்கள் அடையவேண்டிய இன்பங்களை அனுபவித்தே தீரவேண்டும். அங்ஙனம் அனுபவிப்பதால் அவர்கள் துறவறத்தை மேற்கொள்ள விரும்பினாலும்

மேற்கொள்ள இயலாதவர்களாயுள்ளனர். விதி அங்ஙனம் அவர்களை இன்பத்தை அனுபவிக்கச் செய்யாது ஒழிந்தால் அவர்களால் துறவறத்தை மேற்கொள்ள முடியும்.

மேற் குறளில் எல்லாமுடைய பெருஞ் செல்வனும் விதியிருந்தாலொழிய அவற்றை அனுபவித்தல் இயலாது என்றார்; அதனால் ஒன்றுமற்ற ஏழையும் விதியினால் பலவகை இன்பங்களை அடைய முடியும் என்று கூறுகின்றார்.

துப்புரவு - அனுபவித்தற்குரிய பொருள்; உறற்பால- அடையவேண்டுவன; ஊட்டா - அடையச் செய்யாது. 378

**9. நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்**
**அல்லல் படுவ தெவன்?**

நன்மை விளையும்போது நல்லவை எனக் கருதி மகிழ்கின்றவர். தீமை விளையும்போது துன்பப்பட்டுக் கலங்குவது ஏன்? 379

**10. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினும் தான்முந் துறும்.**

விதியைக் காட்டிலும் வலிமை உடையவை வேறு எவை இவ்வுலகின்கண் உள்ளன. அந்த விதியை விலக்குவதற்காக வேறு ஒரு வழியினை நாம் ஆராய்ந்தாலும், அங்கே அந்த விதியே முன் வந்து நிற்கும். (ஊழ் அம்முயற்சி பலன்படாமல் தடுக்கும் என்பதாம்.) 380

அறத்துப்பால் முற்றிற்று.

# பொருட்பால்

## அரசியல்

### 39. இறை மாட்சி

1. படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
   உடையான் அரசருள் ஏறு.

சேனை, குடிமக்கள், பொருள், அமைச்சர், நண்பர், கோட்டை கொத்தளங்கள் என்று சொல்லப்படும் ஆறு பகுதிகளையும் ஒழுங்குபெற அமைத்து வைத்துக் கொண்டுள்ளவனே அரசர்களுள் சிறந்தவன் ஆவான்.

கூழ் - உணவு, இங்கே பொருளைக் குறிக்கும்; அரண் - பாதுகாவல்; அரசருள் ஏறு - அரசர்களுள் ஆண் சிங்கம் போன்று சிறந்தவன்.

இறைமாட்சி அரசனுக்குரிய பெருமை. இங்கே சிறப்புப் பற்றி அரசனுக்குக் கூறுகின்றார். எனினும், ஒரு குடும்பத்தின் தலைவர், ஓர் இயக்கத்தின் தலைவர் முதலிய எல்லாத் தலைவர்களுக்கும் இவை பொருந்தும். இவ்விதமே 381
கல்வி கேள்வி முதலியவைகளையும் கொள்க.

2. அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
   எஞ்சாமை வேந்தற் கியல்பு.

அச்சமில்லாமை, கொடுக்கும் தன்மை, அறிவுடைமை, ஊக்கம் உடைமை ஆகிய இந்த நான்கு குணங்களும் குறைவுபடாமல் இருத்தலே அரசனுக்கு இயல்பு ஆகும். 382

3. தூங்காமை, கல்வி, துணிவுடைமை இம்மூன்றும்
   நீங்கா நிலனாள் பவற்கு.

நாட்டினை ஆளும் அரசனுக்கு எதையும் காலம் தாழ்த்தாமல் புரியும் தன்மை, கல்வியுடைமை, துணிவு உடைமை ஆகிய இந்த மூன்று குணங்களும் நீங்காமல் 383
இருத்தல் வேண்டும்.

**4. அறன் இழுக்காது அல்லவைநீக்கி மறன்இழுக்கா**
**மானம் உடையது அரசு.**

நீதிநெறியில் தவறாமல் நின்று, குற்றங்களைப் போக்கி, வீரத்தில் குறையாத மதிப்பினை உடையவன் அரசன் என்று சொல்லுதற்குத் தகுதியுடையவனாவான். 384

**5. இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
**வகுத்தலும் வல்லது அரசு.**

பொருள் வரும் வழிகளை மேன்மேலும் உண்டாக்கிக் கொள்ளுதலும், அவ்வழியால் வந்த பொருள்களைச் சேர்த்து வைத்தலும், சேர்த்தவைகளைப் பாதுகாத்தலும், அவ்விதம் பாதுகாத்த பொருள்களை ஒழுங்காகச் செலவு செய்யப் பகுத்து வைத்தலும் ஆகிய இவைகளைச் செய்ய வல்லவனே அரசன் என்று சொல்லத் தக்கவனாவான்.

இயற்றல்-உண்டாக்குதல்; ஈட்டல்-சேர்த்தல்; வகுத்தல்-நாட்டின் நன்மைக்கான பல துறைகளில் செலவழிக்க வேண்டிய பொருள் இவ்வளவு என்று பகுத்து ஒதுக்கி வைத்தல். 385

**6. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்**
**மீக்கூறும் மன்னன் நிலம்.**

பலரும் எளிதாக வந்து காணக்கூடியவனாகவும் கடுமையாகப் பேசாதவனாகவும் இருந்தால் அந்த அரசனை உலகிலுள்ளோர் அனைவரும் புகழ்ந்து கூறுவர். 386

**7. இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்**
**தான்கண் டனைத்திவ் வுலகு.**

இனிய சொற்களைச் சொல்லி, வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்துக் காப்பாற்ற வல்ல அரசனுக்கு இவ்வுலகம் அவனுடைய சொல்லின் ஆற்றலாலேயே அவன் நினைத்தபடி ஆளக்கூடியதாக இருக்கும். 387

**8. முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறையென்று வைக்கப் படும்.**

நீதிமுறை தவறாது நடந்து குடிகளைக் காப்பாற்றும் அரசன் மக்களால் கடவுளுக்குச் சமமாக மதிக்கப்படுவான். 388

**9. செவிகைப்பச் சொல்பொறுக்கும் பண்புடை வேந்தன்**
**கவிகைக்கீழ்த் தங்கும் உலகு.**

பிறர் சொல்லும் குறைபாடுகள் கேட்பதற்குத் தன் காதுகட்கு இனிமையாக இல்லாமல் வெறுக்கத் தக்கனவாக இருந்தாலும், அத்தகைய கடுஞ் சொற்களையும் பொறுமையோடு கேட்கும் குணமுடைய அரசனது ஆட்சியின் கீழே இவ்வுலகத்தார் அனைவரும் அடங்கி வாழ்வர்.

செவிகைப்ப–காதுகளால் கேட்கச் சகியாத; கவிகை–குடை, இங்கே ஆட்சியைக் குறிக்கும். 389

**10. கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்**
**உடையானாம் வேந்தர்க் கொளி.**

கொடுக்கும் தன்மையும், கருணையும், நீதிமுறையும், குடிமக்களைக் காப்பாற்றும் தன்மையும் ஆகிய இந்த நான்கு குணங்களையும் உடைய அரசன் பிற அரசர்களுக்கெல்லாம் விளக்கொளி போன்று இருந்து பிரகாசிக்கத் தக்கவன்.

அளி-கருணை; செங்கோல்-நீதி நெறியோடு ஆட்சி புரியும் தன்மை; குடியோம்பல்-குடிகளுக்குத் துன்பம் வாராமல் காக்கும் தன்மை; ஒளி-விளக்குப் போன்றவன்; சூரியனுக்கு ஒப்பானவன் என்றும் சொல்லலாம். 390

## 40. கல்வி

**1. கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக.**

கற்பதற்குத் தகுதி வாய்ந்த நூல்களைக் குற்றம் அறக் கற்க வேண்டும். அவ்வாறு கற்ற பிறகு கற்ற நூல்களில் சொல்லியவாறு நடக்க முயலுதல் வேண்டும்.

கசடு-ஐயமும் மயக்கமும் ஆகிய குற்றங்கள்; அற–நீங்க; கற்பவை-கற்கத் தகுந்த நூல்கள். 391

**2. எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழும் உயிர்க்கு.**

எண் என்று சொல்லப்படும் கணக்கு நூல்களும், எழுத்து என்று சொல்லப்படும் இலக்கண, இலக்கிய நூல்

களும் ஆகிய இவ்விரண்டும் இவ்வுலகத்தில் வாழ விரும்பும் மக்களுக்குக் கண்களுக்குச் சமமானவை என்று பெரியோர் கூறுவர்.

எண்-கணக்கு நூல்கள்; எழுத்து-இலக்கண, இலக்கிய நூல்கள். 392

3. கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

படித்தவர்களே கண்ணுடையவர்கள் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவார்கள். படியாதவர் முகத்தில் இரண்டு கண்களைப் பெற்று இருந்தாலும் அவை கண்கள் அல்ல. அவர்கள், தம் முகத்தில் இரண்டு புண்களை உடையவரே ஆவர்.

கல்லாதவர் தம் கண்களின் வயப்பட்டுப் பல பொருள்களைக் கண்டு ஆசை கொண்டு அவற்றையடைய முயன்று துன்புறுவர். ஆதலின், அவர் கண்களைத் துன்பம் தரும் புண்கள் என்று கூறினார். 393

4. உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

பலரும் மகிழும்படியாக மக்களிடம் கூடிப் பழகி, 'இனி இவரை மறுபடியும் எப்போது காண்போம்' என்று நினைந்து வருந்தும்படியாக அவர்களை விட்டுப் பிரிதல் கல்வியிற் சிறந்த புலவர்களின் செயலாகும்.

உவப்ப - மகிழும்படி; தலைக்கூடுதல் - வந்து சேர்ந்து பழகுதல்; உள்ளல் - நினைந்து வருந்துதல்; பிரிதல் - நீங்குதல்; அனைத்து - அத்தன்மையது. 394

5. உடையார்முன் இல்லார் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்.

செல்வமில்லாத வறியவர்கள், செல்வம் உடையவர்களிடம் உள்ள பொருளைப் பெற ஏங்கி நின்று பணிவுடன் கேட்டுப் பெறுவர். அது போலக் கல்வியுடையவர்களிடம் கல்வியில்லாதவர்கள் அக்கல்வியறிவைப் பெறும் பொருட்டு ஏங்கி நின்று பணிவுடன் கேட்டறிந்து கொள்ளுதல் வேண்டும். அங்ஙனம் கற்றவரே உயர்ந்தோராவர். அங்ஙனம் கல்லாதவர் இழிந்தவராகவே கருதப்படுவர்.

உடையார்-செல்வம் உடையவர்; ஏக்கற்று-ஏங்கியிருந்து; கற்றார் உயர்ந்தார் என்று ஒரு சொல் வருவிக்க; கல்லாதவர் கடையர் என்று கூட்டுக. 395

6. தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு.

மணற்பாங்கான இடத்தில் உள்ள கிணறு, தோண்டு மளவுக்கு ஏற்ப நீர் சுரக்கும். அதுபோல மக்களுக்கு அறிவானது அவர்கள் எவ்வளவு படிக்கின்றார்களோ, அந்த அளவுக்கு ஏற்ப விளக்கமடையும். 396

7. யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கால்லாத வாறு.

கல்வியில் சிறந்த ஒருவனுக்கு எந்த நாடும் அவனுடைய சொந்த நாடு போன்று இன்பம் பயப்பதாகவே இருக்கும். அவ்விதமே எந்த ஊரும் அவனுடைய சொந்த ஊர் போன்று அவனுக்கு இன்பத்தைத் தரும். (இதைப் பலரும் நேரில் கண்டு அறிந்திருந்தும்) ஒருவன் தான் சாகின்றவரையிலும் கல்வி கற்காமலேயே காலங்கழிப்பது என்ன காரணமோ தெரியவில்லை. 397

8. ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து.

ஒரு பிறப்பில் ஒருவன் கல்வி கற்று அதனால் பெற்ற அறிவானது அப்பிறவியோடு இல்லாமல் அடுத்து வரக் கூடிய பிறவியிலும் அவனுக்குப் பாதுகாப்பினை அளிக்கும் தன்மையுடையதாம்.

எழுமை-ஏழு வகைப் பிறப்பு; மக்கள், தேவர், நரகர், மிருகம், பறவை, நீர்வாழ்வன, தாவரம் ஆகியவை. எனினும் இங்கே ஏழு பிறப்பு என்பதற்குப் பல பிறப்புக்களிலும் என்பதே பொருள். ஒருமை-ஒரு பிறப்பு; ஏமாப்பு-பாதுகாவல். 398

9. தாமின் புறுவது உலகுஇன் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

தாம் இன்புறுவதாகிய கல்வியினால் உலகத்தாரும் இன்பமடைகின்றனர். அவ்வாறு தமக்கும் பிறக்கும் இன்பம்

அளிக்கக்கூடிய பெருமை கல்விக்கிருப்பதால் அத்தகைய கல்வியைக் கற்றறிந்த பெரியோர்கள் மேலும் மேலும் விரும்பிக் கற்பர்.

காமுறுதல்-விரும்புதல், ஆசைப்படுதல். 399

10. கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.

ஒருவனுக்கு அழிவு இல்லாத சிறந்த செல்வம் கல்விச் செல்வமேயாகும். அதைத் தவிரப் பிற செல்வங்களெல்லாம் சிறந்த செல்வங்கள் அல்ல.

கேடு - அழிவு; விழுச் செல்வம் - சிறந்த செல்வம்; மாடு - செல்வம்; மற்றையவை - பொன், மணி முதலிய செல்வங்கள். 400

## 41. கல்லாமை

1. அரங்கின்றி வட்டாடி அற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

அறிவு அதிகரிப்பதற்குக் காரணமாக உள்ள நல்ல நூல்களைக் கற்காமல் ஒருவன் கற்றறிந்தோர் கூடிய சபையில் புகுந்து ஒன்றைப் பேசுதல், கோடு கிழித்து இடம் வகுத்துக் கொள்ளாமல் சதுரங்கம் ஆட முயல்வதற்குச் சமம் ஆகும்.

அரங்கு-சதுரங்கம் ஆடுதற்குக் கோடு கீறி வகுத்துக் கொள்ளும் இடம், அறை; வட்டு-சூதாடு கருவி; கோட்டி-கற்றறிந்தோர் கூடியுள்ள சபை. 401

2. கல்லாதான் சொல்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றிற்று.

கல்வியறிவு சிறிதும் இல்லாத ஒருவன் ஒரு சபையில் எழுந்து பேச, அவன் பேச்சைக் கேட்க விரும்புதல்; இரண்டு தனங்களும் இல்லாதவளை ஒருவன் மணக்க விரும்புதற்குச் சமம் ஆகும்.

கல்வியறிவு இல்லாத ஒருவன் ஒரு சபையில் எழுந்து பேச விரும்புதல் இரண்டு தனங்களும் இல்லாத ஒருத்தி பெண் தன்மையை விரும்புதற்குச் சமம் என்றும் பொருள் கொள்ளலாம். 402

3. கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்.

கற்றறிந்தவர்கள் கூடியுள்ள சபையில் ஒன்றும் சொல்லாமல் அமைதியாக இருப்பார்களானால், கல்வியறிவு சிறிதும் இல்லாதவர்களும் மிகவும் நல்லவர்களேயாவார்கள். (அவ்விதம் இருக்கமாட்டார்கள் என்பது பொருள்.)

நனி நல்லர்-மிகவும் நல்லவர்கள்; அமைதியாக இருத்தல் அவர்களால் இயலாது என்பதை விளக்க 'இருக்கப் பெறின்' என்றார். 403

4. கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யார்.

கல்லாதவனின் அறிவுடைமை சில சமயங்களில் மிகவும் சிறந்ததாக இருந்தாலும் கற்றறிந்த பெரியோர்கள் அவனை அறிவிற் சிறந்தவனாகக் கொள்ளமாட்டார்கள்.

நத்தை ஊர்ந்து செல்லும்போது தற்செயலாக உண்டாகும் எழுத்துப்போல அவ்வறிவு தற்செயலாக ஏற்பட்டது ஆதலின் 'கொள்ளார்' என்றார்.

ஒட்பம்-அறிவுடைமை; கழிய-மிகுதியும். 404

5. கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

கல்லாத ஒருவன் தன்னைத் தானே மதித்துக் கொள்ளும் மதிப்பு, அவன் நூல்களைக் கற்றாரிடம் சென்று பேசும்போது கெட்டொழியும்.

தகைமை-மதிப்பு; தலைப் பெய்தல்-கூடுதல், காணுதல்; சொல்லாடல்-பேசுதல்; சோர்வுபடல்-கெட்டொழிதல். 405

6. உளரென்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

கல்லாதவர் மனிதத்தோற்றத்தோடு இவ்வுலகில் இருக்கின்றனர் என்னும் அளவிலேதான் காணப்படுகின்றனர். இதையன்றி வேறு ஒன்றும் சொல்லுதற்குரியரல்லர். அவர் பார்ப்பதற்கு நிலம்போலத் தோன்றி விளைவுக்குப் பயன் படாத களர் நிலத்துக்குச் சமமாவர்.

நிலம்போல் தோன்றியும் எத்தகைய பயனையும் தாராத களர் நிலம்போல் மக்களாகத் தோன்றினும் கல்லாதவர் பிறர்க்கு எவ்வகையிலும் பயன்படார்.

மாத்திரையர்-அளவினை உடையவர்; களர்-விளைவுக் குப் பயன்படாத உவர் நிலம். 406

7. நுண்மாண் நுழைபுலம் இல்லார் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று.

நுட்பமான சிறந்த நூல்கள் பலவற்றையும் ஆராய்ந்து பார்க்கும் அறிவு இல்லாதவனுடைய நல்ல தோற்றத்தோடு கூடிய அழகு மண்ணினால் சிறப்பாகச் செய்யப்பட்ட பதுமை யின் அழகுக்குச் சமமானது.

கல்வி உடலுக்கு உயிர் போன்றது. கல்வியில்லாத அழகால் பயன் இல்லை என்பது கருத்து.

நுண்மை-நுட்பம்; மாண்பு-சிறப்பு; நுழைபுலம்-ஆய்ந்து பார்க்கும் அறிவு; எழில் - தோற்றப் பொலிவு; புனைதல்-செய்தல்; பாவை- பதுமை, பொம்மை; அற்று-அத்தன்மையது. 407

8. நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு.

கற்றறிந்த நல்லவர்க்கு ஏற்பட்ட வறுமையைப் பார்க்கிலும் கல்வியறிவு இல்லாதவர்களிடம் தங்கியுள்ள செல்வம் மிகவும் துன்பத்தை விளைவிக்கும்.

கற்றவர் வறுமை, அவருக்கு மட்டும் துன்பத்தைத் தரும். கல்லாதார் செல்வம் அவருக்கும் பிறர்க்கும் துன்பம் தருமாதலின் நல்லவர் வறுமையினும் அது தீயது என்றார்.

நல்லார்-இங்கே கற்றாரைக் குறிக்கும்; கற்றார் கற்ற வண்ணம் ஒழுகுவார் என்னும் கருத்தால், 'நல்லார்' என்றார். இன்னாது - கொடியது; திரு - செல்வம். 408

9. மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு.

கல்லாதவர் உயர்ந்த குடியிலே பிறந்தவராக இருந்தாலும் தாழ்ந்த குடியில் தோன்றியும் கல்வி கற்றாருக்குச் சமமான பெருமையுடையவராக உலகத்தவரால் மதிக்கப் படமாட்டார்.

குடி உயர்வினும் கல்வி உயர்வே சிறந்தது என்பது கருத்து.

மேற் பிறந்தார்-செல்வம், பதவி, ஒழுக்கம் முதலியவைகளால் உயர்ந்த குடியிலே பிறந்தவர்; பாடு-பெருமை. 409

**10.** விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர்.

சிறந்த நூல்களைக் கற்றவர்களுக்கும் கல்வியறிவில்லாத மற்றவர்களுக்கும் உள்ள வேறுபாடு பகுத்தறிவோடு கூடிய மக்களுக்கும் அஃதில்லாத மிருகங்களுக்கும் உள்ள வேறுபாட்டுக்குச் சமமாம்.

கல்லாதவர் வடிவத்தில் மக்களாக இருந்தும் அறிவு, குணம், செயல்களில் மிருகத்துக்குச் சமம் ஆவர் என்பது கருத்து.

அனையர்—அத்தகைய வேறுபாடுடையவர். இலங்குநூல் - அறிவு விளக்கத்துக்குக் காரணமான நூல்கள்; ஏனையவர்-மற்றையவர், இங்கே கல்லாதவரைக் குறிக்கும். 410

## 42. கேள்வி

**1.** செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை.

செல்வங்கள் பலவற்றுள்ளும் செவியால்கேட்டு அறியும் செல்வமே சிறந்த செல்வம் ஆகும். ஏனென்றால் அச்செல்வமே பிற எல்லாச் செல்வங்களிலும் முதன்மையானதாக இருக்கின்றது. 411

**2.** செவிக்குணவு இல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்.

செவிக்கு உணவாகிய கேட்டறிதல் என்பது இல்லாத போது வயிற்றுக்கும் சிறிது உணவு கொடுக்கலாம்.

நமக்குக் கேட்டறிதல் முதன்மையானது; வயிற்றிற்கு உணவு அதற்கு அடுத்தது என்பதே இப்பாட்டின் பொருள். வயிற்றுக்கும் என்பதும் ஈயப்படும் என்பதும் இழிவு தோன்ற நின்றன. மிகுதியாக உண்ணுதல் அறிவு விளக்கத்திற்குக் கேடாதலால் 'சிறிது' என்றார். 412

3. செவியுணவின் கேள்வி உடையார் அவியுணவின்
ஆன்றாரோடு ஒப்பர் நிலத்து.

செவியுணவாகிய கேள்வி அறிவினையுடையவர் இவ்வுலகத்தில் வாழ்கின்றவராயினும் அவியுணவைக் கொண்டு வாழும் தேவர்களுக்குச் சமம் ஆவர்.

அவியுணவு - வேள்வியின்போது தேவர்களுக்காக வேள்வித் தீயில் இடும் உணவு; ஆன்றோர் - பெரியோர். இங்கே தேவர்களைக் குறிக்கும். 413

4. கற்றிலன் ஆயினுங் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாம் துணை.

ஒருவன் சிறந்த நூல்களைக் கற்காமல் இருந்தாலும், அத்தகைய நூல்களைக் கற்றவரிடம் சென்று அவர்கள் சொல்லக் கேட்டாவது அறிதல்வேண்டும். அவ்விதம் கேட்பதால் அந்தக் கேள்வி ஞானம் அவனுக்கு வாழ்க்கையில் தளர்ச்சி வந்தபோது வழுக்கல் உடைய சேற்று நிலத்தில் செல்லும் ஒருவனுக்கு உதவும் ஊன்றுகோல் போலத் துணையாக இருக்கும்.

அஃது - அது, கேள்வியால் உண்டாகும் அறிவு; ஒற்கத்தின் - தளர்ச்சி வந்த காலத்தில்; ஊற்று - ஊன்றுகோல்; ஊன்று என்பது ஊற்று என்று திரிந்தது. 414

5. இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்.

ஒழுக்கத்திற் சிறந்த பெரியோர்களது வாயிலிருந்து பிறக்கின்ற சொற்கள் வழுக்கல் உடைய சேற்று நிலத்திலே செல்வோனுக்கு ஊன்றுகோல் உதவுவதுபோல் ஒருவனுக்கு உதவும்.

இழுக்கல் - வழுக்குதல்; உடையுழி - உடையபோது; அற்று - அந்தத் தன்மையுடையது. 415

6. எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.

ஒருவர் நல்ல பொருளைக் கேட்டறியவேண்டும். அஃது எவ்வளவு சிறியதாக இருப்பினும் கவலையில்லை அவ்வாறு கேட்டறிதல் அவர் கேட்ட அளவுக்கு நிறைந்த பெருமையைத் தரும்.

எனைத்தானும் - எவ்வளவு சிறியதாக இருந்தாலும்; அனைத்தானும் - அவ்வளவாயினும், ஆன்ற - நிறைந்த. 416

7. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார்
ஈண்டிய கேள்வி யவர். [இழைத்துணர்ந்து

நுட்பமாக ஆராய்ந்து அறிந்து நிறைந்த கேள்வி யறிவை யுடையவர்கள், ஏதோ ஒரு காரணத்தால் ஒன்றைத் தவறாக உணர்ந்தாலும் அறியாமையைக் காட்டும் சொற்களைச் சொல்ல மாட்டார்கள்.

பேதைமை சொல்லல் - அறியாமையைக் காட்டும் சொல்லைச் சொல்லுதல்; இழைத்து உணர்தல் - நுட்பமாக ஆராய்ந்து அறிதல்; ஈண்டிய - நிறைந்த. 417

8. கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.

நல்ல கேள்வி ஞானம் இல்லாத செவிகள் கேட்கும் திற முடையயன வாயினும் கேளாத செவிகட்கு சமமே ஆகும்.

தோட்கப்படாத செவி - அரிய செய்திகளைப் பல முறை கேட்டுப் பண்படாத செவிகள். 418

9. நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது.

நுட்பமான பொருள்களைக் கேட்டு அறியாதவர் வணக்கமான சொற்களைப்பேசும் வாயினையுடையவராக இருத்தல் முடியாது.

நுணங்கிய - நுட்பமான; வணங்கிய வாயினர்-வணக்க மான சொற்களைப் பேசுகின்றவர். 419

10. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்.

கேள்விச் சுவையினைத் தம் காதுகளால் உணர்ந்து அனுபவிக்க முடியாமல் நாவினாலே நல்ல உணவின் சுவை களை மட்டும் அறிந்து அனுபவிக்கும் மனிதர்கள் இறந்தால் தான் என்ன? வாழ்ந்தால்தான் என்ன?

செவியிற் சுவை யுணர்தல் - சிறந்த கருத்துக்களைக் காதுகளால் கேட்டு இன்புறுதல். 420

## 43. அறிவுடைமை

1. அறிவுஅற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்கல் ஆகா அரண்.

அறிவானது துன்பம் நேரிடுங் காலத்து அத்துன்பத்திலிருந்து காத்துக்கொள்ள உதவும் கருவியாகும். அன்றியும் உட்புகுந்து பகைவரால் அழிக்கமுடியாத உள்அரணும் ஆகும். 421

அற்றம் - துன்பம்; அழிவு.

2. சென்ற இடத்தால் செலவிடாது தீதுஒரிஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு.

மனம் சென்ற வழியெல்லாம் ஒருவனைச் செல்லவிடாமல் தீமையிலிருந்து நீக்கி அவனை நல்ல வழியில் செலுத்துவது அறிவாகும்.

ஒரீஇ - நீக்கி, நன்றின்பால் – நல்ல வழியில். 422

3. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

எத்தகைய செய்தியாக இருந்தாலும் அதனை யார் சொல்லக் கேட்டாலும் (அதை அப்படியே ஏற்றுக் கொள்ளாமல் அல்லது இகழ்ந்து தள்ளாமல்) அதன் உண்மையை ஆராய்வதே அறிவாகும்.

எப்பொருள் - உயர்ந்த அல்லது தாழ்ந்த செய்தி; யார் யார் உயர்ந்தவர் அல்லது தாழ்ந்தவர்.

சொல்லுவோரை நோக்காமல் சொல்லின் பயனையே நோக்குதல் வேண்டும். 423

4. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்
நுண்பொருள் காண்பது அறிவு. [வாய்

தான் சொல்லுவதை எளிதாக விளங்கும் சொற்களால் பிறர் மனத்தில் பதியும்படி சொல்லிப் பிறர் சொல்லும் சொற்களிலிருந்து நுட்பமான பொருளையும் ஆராய்ந்து காண்பதே அறிவுடைமையாகும்.

எண் பொருள் - எளிதாக விளங்கும் சொற்கள், செலச் சொல்லி - மனத்தில் பதியச் சொல்லி. 424

5. உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்லது அறிவு.

உலகத்தவரை நட்பாக்குவது ஒருவனுக்குள்ள நுண் ணறிவேயாகும். அந்த நட்பு முதலில் மிகுதியாகத் தோன்று தலும் பிறகு நாளடைவில் குறைதலும் இல்லாமல் என்றும் ஒரே தன்மையாக இருக்கச் செய்வதே அறிவாகும்;

உலகம் - உயர்ந்தார்; தழீஇயது - தழுவிக் கொள்வது, நண்பராக்கிக் கொள்வது; ஒட்பம் - நுண்ணறிவு, தெளிந்த அறிவு; மலர்தல் - விரிதல்; கூம்பல் - குறைதல். 425

6. எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு.

உலகத்திலுள்ள பெரும்பாலோர் எவ்விதம் நடக் கின்றார்களோ அந்த வகையினை அறிந்து அவர்கட்கு ஏற்ற வகையில் நடந்துகொள்வதே அறிவு.

எவ்வது - எந்த வகையால்; உறைவது - நடத்தல், ஒழுகுதல்; அவ்வது - அந்த வகையில்; உலகம் என்பதற்கு உலகத்திலுள்ள பெரியோர் என்றும் பொருள் கொள்ள லாம். 426

7. அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார்
அஃது அறி கல்லா தவர்.

பிறகு நிகழ இருப்பதை முன்னதாகவே எண்ணி அறிந்து கொள்ளும் திறம் உடையவரே அறிவுடையவர்; அதனை அறிந்து கொள்ளாதவர் அறிவில்லாதவரே ஆவர். 427

8. அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்.

அஞ்சத்தக்கதைக் கண்டு அஞ்சாமல் இருத்தல் அறிவில்லாமையே ஆகும். அஞ்சவேண்டிய ஒன்றைக் கண்டு அஞ்சுதலே அறிவுடையோர் செயல் ஆகும்.

அஞ்சவேண்டுவன; பாவம், கெடுதி முதலியன. 428

9. எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை
அதிர வருவதோர் நோய்.

வரப்போகும் தீமையினை முன்னதாக அறிந்து அஃது வாராதபடி காத்துக்கொள்ளத்தக்க அறிவினையுடைய வர்களுக்கு, அவர்கள் அஞ்சி நடுங்கும்படியாக வரக்கூடிய துன்பம் எதுவும் இல்லை.

எதிரதாக் காத்தல் - பிறகு வரக்கூடியதை முன்னதாக அறிந்து காத்துக் கொள்ளுதல். 429

10. அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்.

அறிவுடையவர் அந்த அறிவைத் தவிர வேறு எதுவும் இல்லாமல் இருந்தாலும் எல்லாப் பொருள்களும் உடைய வராகவே இன்புற்று இருப்பர். அறிவில்லாதவர் எல்லா நலன்களும் உடையவராக இருப்பினும் ஒன்றும் இல்லாத ஒருவரைப்போல என்றும் துன்புற்று இருப்பர்.

எல்லாம் - நிலம், நீர், வாகனம், ஏவலாளர், பொன், பதவி முதலிய செல்வங்கள். 430

## 44. குற்றங்கடிதல்

1. செருக்குஞ் சினமுஞ் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

கர்வம், கோபம், இழிகுணம் ஆகிய இந்த மூன்றும் இல்லாதவரது செல்வம் மேம்பாடுடையதாகும்.

செருக்கு - கர்வம், அகந்தை, அஃதாவது தமக்கு வாய்த்துள்ள பட்டம் பதவிகளை நினைத்து அறிவு மயங்கி இருக்கும் நிலை; சினம் - அளவுகடந்த கோபம், வெகுளி; சிறுமை - இழிவான குணம், காமமுமாம். 431

2. இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு.

உலோபத் தன்மையும், நன்மையின் நீங்கிய மானமும், தகுதிக்கு விஞ்சிய மகிழ்ச்சியும் ஆகிய இவை அரசனுக்குக் குற்றம் ஆகும்.

இவறல் – உலோபம். செலவு செய்யவேண்டிய விடத்துச் செய்யாமல் இருக்கும் குணம்; மாண்பு இறந்த மானம் - படாடோபம், வீண் ஆடம்பரம், தன் தகுதிக்கு மேம்பட்ட பெருமை; மாணா உவகை - தகுதிக்கு விஞ்சிய மகிழ்ச்சி. 432

3. **தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணை**
**கொள்வர் பழிநாணு வார்.** [யாக்

பழிக்கு அஞ்சுகின்ற மேன்மக்கள் தினை அளவாகிய சிறு குற்றம் நேர்ந்தாலும், அதைப் பனையின் அளவான பெரிய குற்றமாகக் கருதுவர்.

தினை, பனை என்பன சிறுமை பெருமைகட்கு அளவு கோல். தினை - ஒரு தானியம். பனை - பனம் பழம். 433

4. **குற்றமே காக்க பொருளாகக் குறறமே**
**அற்றம் தரூஉம் பகை.**

ஒருவன் செய்கின்ற குற்றமே அவனுக்கு அழிவை உண்டாக்கும் பகை ஆகும். ஆகையால், அக்குற்றம் நேராமல் இருத்தலை வாழ்க்கையின் நோக்கமாகக் கொண்டு ஒருவன் தன்னைக் காத்துக் கொள்ளுதல் வேண்டும்.

பொருள் - குறிக்கோள் அல்லது நோக்கம். 434

5. **வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்**
**வைத்தூறு போலக் கெடும்.**

குற்றம் நிகழ்வதற்கு முன்பே அக் குற்றத்திலிருந்து தன்னைக் காத்துக்கொள்ளாதவனுடைய வாழ்க்கை (ஒரு சிறிய) நெருப்புப் பொறியின்முன் கிடந்த (பெரிய) வைக்கோல் போர் போல அழிந்துவிடும்.

வை - வைக்கோல்; தூறு - குவியல், போர்; கெடும் - அழியும், குற்றம் மிகச் சிறியதாக இருந்தாலும் நீண்ட வாழ்நாளை முற்றிலும் கெடுத்துவிடும் என்பது பொருள். 435

6. **தன்குற்றம் நீக்கிப் பிறர்குச்றம் காண்கிற்பின்**
**என்குற்றம் ஆகும் இறைக்கு?**

அரசன் முதலில் தன் குற்றத்தை உணர்ந்து நீக்கிக் கொண்டு பிறகு தன்னைச் சூழ்ந்துள்ளோரின் குற்றங்களை அறிந்து நீக்க முயல்வானானால் அவனுக்கு நேரக்கூடிய தீமை என்ன இருக்கும்? எத்தகைய தீமையும் இல்லை.

தலைவனாக இருப்பவன் முதலில் தன் குற்றத்தை ஆய்ந்து உணர்ந்து நீக்கிக்கொண்டு, பிறகு பிறர் குற்றங்களை நீக்கி முறைசெய்ய முயலுதல் வேண்டும் என்பது பொருள். 436

**7. செயற்பால செய்யாது இவறியான் செல்வம்**
**உயற்பாலது அன்றிக் கெடும்.**

செய்துகொள்ளத் தக்க வசதிகளைச் செய்யாது சேர்த்து வைப்பவனுடைய செல்வம் நிலைத்திராமல்-அழிந்துவிடும்.

செயற்பால - செய்துகொள்ளத்தக்க வசதிகள்; இவறியான்-உலோபி; உயற்பாலது அன்றி - நிலைபெற்றிராமல்.
437

**8. பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்**
**எண்ணப் படுவதொன்று அன்று.**

பொருளின்மீதே பற்றுக்கொள்ளுதல் ஆகிய உலோபத் தன்மை எத்தகைய குற்றங்களோடும் ஒப்பிட்டுப் பார்க்கக் கூடிய ஒரு சாதாரணக் குற்றம் அன்று; அது பெரிய குற்றமாகும்.

இவறன்மை - உலோபத் தன்மை; எற்றுள்ளும் - எத்தகைய குற்றத்தோடும். 438

**9. வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க**
**நன்றி பயவா வினை.**

ஒருவன் எவ்வளவு உயர்வினை அடைந்திருந்தாலும் எந்தக் காலத்திலும் தன்னை மிகவும் உயர்ந்தவனாக எண்ணிக் கர்வங்கொள்ளுதல் கூடாது; அவ்விதமே தனக்கும் பிறர்க்கும் நன்மையைத் தாராத செயலை எந்தக் காலத்திலும் புரிய விரும்புதலும் கூடாது.

வியத்தல் - ஆச்சரியப்படுதல், இங்கே கர்வப்படுதல்; நயத்தல் - விரும்புதல். 439

**10. காதல காதல் அறியாமை உயக்கிற்பின்**
**ஏதில ஏதிலார் நூல்.**

ஒருவன் தான் விரும்பும் பொருள்கள்மீது தனக்குள்ள விருப்பத்தைப் பிறர் அறிந்துகொள்ளாதபடி அவைகளை அனுபவிக்க வல்லவனாக இருந்தால், அவனை அவன்

பகைவர் வஞ்சிக்க எண்ணும் எண்ணங்கள் யாவும் பயன் தாராமற் போகும்.

காதல் - விருப்பம், ஆசை; காதல - ஆசைப்படும் பொருள்கள்; உய்க்கிற்பின் - அனுபவிக்க வல்லவன் ஆயின்; ஏதிலார் - பகைவர்; ஏதில - பயனற்றன; நூல்- எண்ணம். 440

## 45. பெரியாரைத் துணைக்கோடல்

1. அறன்அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

நீதி நெறிகளை அறிந்து முதிர்ச்சியடைந்த பெரியோரின் நட்பைத் துணையாகக் கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு கொள்ளும்போது அந்தப் பெரியோரின் தகுதிக்கு ஏற்றபடி அவரிடம் நடந்துகொள்ள வேண்டியதை ஆராய்ந்து அறிந்து அவரைத் துணையாகக் கொள்ளவேண்டும்.

அறன் அறிந்து - நீதிநெறிகளை நூல்களைக் கொண்டும் அநுபவ வாயிலாகவும் அறிந்து, மூத்த - அறிவு; ஒழுக்கம், வயது ஆகிய இம்மூன்றிலும் முதிர்ந்த.

துணைக்கோடல் - துணையாகக் கொள்ளுதல். 441

2. உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

ஒருவனுக்கு நேர்ந்துள்ள துன்பங்களைப் போக்கக்கூடிய வராயும் மேலும் துன்பம் வாராதபடி முன்னதாக அறிந்து அதனைக் காக்கவல்ல தன்மையுடையவராகவும் உள்ள பெரியோரை, அவர் மகிழும் வண்ணம் உபசரித்து ஒருவன் தனக்குத் துணையாகக் கொள்ள வேண்டும்.

உற்ற - நேர்ந்த; உறாஅமை - நேராதபடி; பேணி - போற்றி, அவர் மகிழும் வண்ணம் உபசரித்து. 442

3. அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

கல்வி, ஒழுக்கம், அனுபவம் முதலியவைகளால் சிறந்த பெரியாரை அவர் மகிழும் வண்ணம் உபசரித்துத் தம்

சுற்றத்தவருள் ஒருவராகக் கொள்ளுதல் அரிய செல்வங்கள் பலவற்றுள்ளும் அருமையானதாகும்.

தமர் - தம்மவர், தமக்கு நெருக்கமான உறவினர்; அரசருக்குத் தமர் - அமைச்சர், சேனைத்தலைவர், புலவர் முதலியவர்கள். 443

4. தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாந் தலை.

அறிவு, ஒழுக்கம், அநுபவம், வயது முதலியவைகளால் தம்மைக் காட்டிலும் மிக்காராக இருக்கும் பெரியார் தனக்குச் சுற்றத்தவராக இருக்கும்படி நடந்துகொள்ளுதல் மிகவும் வல்லமையுடைய செயல்கள் பலவற்றுள்ளும் தலைசிறந்ததாகும்.

வன்மை - வல்லமை, தலை - சிறந்தது. 444

5. சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

தன்னைச் சுற்றியுள்ள அமைச்சர், சேனைத் தலைவர், புலவர் முதலியவர் அரசாட்சியாகிய உடலுக்குக் கண்போல் இருந்து உதவுபவர் ஆவர். ஆதலால், அரசன் தன்னைச் சூழ்ந்துள்ள அமைச்சர் முதலியோரை நன்றாக ஆராய்ந்து பார்த்துத் தனக்குத் துணையாகக் கொள்ளுதல் வேண்டும்.

குடும்பத்துக்குத் தலைவனாக இருப்பவன் தன் சுற்றத்தார், நண்பர், வேலையாட்கள் முதலியவர்களை நன்றாக ஆராய்ந்து பார்த்துக் கொள்ளுதல் வேண்டும் என்பதும் பொருள்.

சூழ்வார் - சூழ்ந்து இருப்பவர்; அமைச்சர் முதலியோர்; சூழ்ந்து - ஆராய்ந்து. 445

6. தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்
செத்தார் செயக்கிடந்தது இல்.

தகுதி வாய்ந்த பெரியோர் தன்னைச் சூழ்ந்திருக்க, அவர் தம் சொற்படி நடக்கவல்ல ஒருவனுக்கு அவனுடைய பகைவர் செய்யக்கூடிய தீங்கு ஒன்றும் இல்லை.

இனத்தன் - இனத்தை உடையவனாய் இருப்பவன்; செற்றார் - பகைவர். 446

**7. இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே**
**கெடுக்கும் தகைமை யவர்.**

குற்றம் கண்டால் அக் குற்றத்தைப் போக்குவதற்காக வற்புறுத்தி அறநெறி கூறும் பெரியாரைத் துணையாகக் கொண்டு ஆட்சி புரியும் அரசரைக் கெடுக்கும் வல்லமையுடைய பகைவர் எவர் இருக்கின்றனர்? எவரும் இலர்.

இடித்தல் - கேட்போர் மனத்தில் படும்படி வற்புறுத்திக் கூறுதல் என்பது இங்கே பொருள்; துணையாரை ஆள்வாரை - துணைவராகக் கொண்டு ஆட்சி புரிபவரை. 447

**8. இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்**
**கெடுப்பார் இலானுங் கெடும்.**

குற்றம் கண்டவிடத்து வற்புறுத்தி அறநெறி சொல்லக் கூடிய பெரியோர்களைத் தனக்குத் துணையாகக் கொள்ளாத பாதுகாவல் அற்ற அரசன் தன்னைக் கெடுக்கும் பகைவர் எவரும் இல்லாவிட்டாலும் தானே கெட்டுப் போவான்.

ஏமரா - ஏமம் மருவாத; (ஏமம் - காவல்; மருவாத - பொருந்தாத) காவல் இல்லாத.

பாகன் இல்லாத யானைபோன்று தனக்குத்தானே தீங்கினைத் தேடிக்கொள்வான் என்பது பொருள். 448

**9. முதலிலார்க்கு ஊதியம் இல் லை மதலையாம்**
**சார்பிலார்க்கு இல்லை நிலை.**

முதற் பொருள் இல்லாத வணிகருக்கு அதனால் வரும் இலாபம் இல்லை. அதுபோல் துன்பம் வந்தபோது தாங்கக் கூடிய துணையாகிய பெரியோரை இல்லாதவர்க்குக் கெடாமல் நிலைத்திருக்கும் தன்மை இல்லை.

வணிகருக்குப் பொருள், அறிவு, உழைப்பு இம் மூன்றும் முதற் பொருள் ஆகும். ஊதியம் - இலாபம்; மதலை - பாரம் தாங்கக்கூடியது; தூண். சார்பு - துணை; நிலை, விழாமல் நிலைத்து இருக்கும் தன்மை. 449

**10. பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே**
**நல்லார் தொடர்கை விடல்.**

தனக்கு நன்மையைப் புரிவோராய பெரியோர் ஒருவரின் நட்பினை இழத்தல், (வல்லமை வாய்ந்த) பலருடைய பகைமையைத் தேடிக்கொள்ளுவதைவிடப் பத்துமடங்கு அதிகமான தீமையை விளைவிப்பது ஆகும்.

பல்லார் - பலர், கணக்கற்றவர்; கைவிடல் - முற்றிலும் ஒழித்து விடுதல். 450

## 46. சிற்றினம் சேராமை

**1. சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்**
**சுற்றமாச் சூழ்ந்து விடும்.**

பெருந்தன்மை வாய்ந்த பெரியோர் இழிந்த குணம் வாய்ந்த சிறியோர் கூட்டத்தை நெருங்குதற்கு அஞ்சுவர்; சிறியோர் தம்மைப் போன்ற சிறுமைக் குணம் வாய்ந்தோரைக் கண்டபோதே அவரைத் தம் நெருங்கிய சுற்றத்தவராக எண்ணித் தழுவிக் கொள்வர்.

சிற்றினம் - குணத்தாலும், அறிவாலும், செயலாலும் இழிந்த தன்மை வாய்ந்தவர் கூடியுள்ள கூட்டம்; பெருமை- பெருந்தன்மை வாய்ந்த பெரியோர். 451

**2. நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு**
**இனத்தியல்ப தாகும் அறிவு.**

நீரானது எந்த நிலத்துடன் சேர்கின்றதோ அந்த நிலத்தின் தன்மையைப் பெற்றுத் தன் இயல்பிலிருந்து முற்றிலும் மாறிவிடும். அதுபோல மக்களுக்கும் அவர்கள் எந்த இனத்தாருடன் சேர்கின்றனரோ அந்த இனத்தாரின் தன்மைக்கு ஏற்ற அறிவே ஏற்படும்.

இயல்பு - தன்மை; திரிந்து - மாறி; அற்று - அத்தன்மையது (நிலத்தின் தன்மையது); மாந்தர் - மக்கள். 452

**3. மனத்தானாம் மாந்தர்க்கு உணர்ச்சி இனத்தானாம்**
**இன்னான் எனப்படும் சொல்.**

மக்களுக்கு அறிவு அவர் தம் மனம் காரணமாக உண்டாகிறது. ஆனால், 'இவர் இத்தகைய குணம் உடையவர்'

என்று உலகத்தாரால் சொல்லப்படும் சொல் அவர் சேரும் இனம் காரணமாகவே ஏற்படுகிறது.

உணர்ச்சி - அறிவு; இன்னான் - இத்தன்மையன், இந்தக் குணத்தினை யுடையவன். 453

**4. மனத்து ளதுபோலக் காட்டி ஒருவர்க்கு**
**இனத்துளது ஆகும் அறிவு.**

ஒருவருக்கு அறிவு அவர்தம் மனத்திலிருந்து தோன்றுவது போலக் காட்டி, அவர் சேர்ந்த இனத்தின் காரணமாகவே தோற்றம் அளிக்கின்றது.

மனத்திலிருந்தே அறிவு உண்டாகிறது என்பது ஒருவகையில் உண்மையாக இருந்தாலும், அந்த அறிவு மனத்திலிருந்து தோன்றுவதற்குக் காரணம் இனத்தின் சேர்க்கையே ஆகும் என்பதாம். அறிவு, குணம் இரண்டற்கும் இனமே காரணம். 454

**5. மனத்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்**
**இனத்தூய்மை தூவா வரும்.**

ஒருவருக்கு உள்ளம் தூய்மையாக இருத்தல், அவர் செய்யும் செயல் தூய்மையாக இருத்தல் ஆகிய இரண்டு தன்மைகளும் அவர் சேர்ந்துள்ள இனத்தின் தூய்மை காரணமாகவே ஏற்படும்.

தூவா - காரணமாக; (தூ + ஆக) தூ - பற்றுக்கோடு. காரணம். 455

**6. மனந்தூயார்க்கு எச்சம்நன் றாகும் இனந்தூயார்க்கு**
**இல்லைநன் றாகா வினை.**

மனம் தூய்மையாக இருப்பவருக்கு அம் மனத்தின் காரணமாக எஞ்சி நிற்கும் செயலும் நன்றாக இருக்கும். (இனத்தூய்மையால் மனமும் தூய்மையாக இருக்கும் ஆதலால) குற்றமற்ற இனத்தாரோடு உள்ளவர்க்கு நன்றாகாச் செயல்களே இல்லை; எல்லாச் செயல்களும் நல்ல செயல்களாகவே இருக்கும்.

தூய்மையான இனத்தால் தூய்மையான மனமும், தூய்மையான மனத்தால் தூய்மையான செயலும் உண்டாகும் என்பது பொருள்.

மனத் தூய்மையின் மிகுதியால் தோன்றுவது நற்செயல். ஆதலால் மனம் தூயார்க்கு எச்சம் நன்றாகும் என்றார்; எச்சம் என்பதற்குப் புகழ் என்று சிலரும், மக்கள் என்று சிலரும் பொருள் கொள்ளுவர். 456

7. மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம் இனநலம்
எல்லாப் புகழும் தரும்.

மனத்தின் நன்மை மக்களுக்கு மேலுலகச்செல்வத்தைத் தரும். இனத்தின் நன்மை இவ்வுலகத்தில் எல்லாப் புகழையும் தரும்.

மன்னுயிர் — இங்கு மக்களைக் குறிக்கும்; ஆக்கம் - ஆக்கப்படுவது, செல்வம்; இங்கே மேலுலகச் செல்வம். 457

8. மனநலம் நன்குடையர் ஆயினும் சான்றோர்க்கு
இனநலம் ஏமாப் புடைத்து.

பெரியோர்கள் இயல்பிலேயே மனத் தூய்மையைப் பெரிதும் உடையவர்களாக இருந்தாலும், இனத்தின் நன்மை அந்த மனத் தூய்மைக்கு மேலும் உறுதியினை அளிக்கும்.

ஏமாப்பு - உறுதி, வலிமை அல்லது பாதுகாவல்.

பொதுமக்களுக்கே அன்றிப் பல நற்குணங்களையும் இயல்பாகவே பெற்ற பெரியோர்கட்கும் இனநலம் வலிமையைத் தரும் என்பது கருத்து. 458

9. மனநலத்தின் ஆகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தின் ஏமாப் புடைத்து.

மன நலத்தினால் மறுமை இன்பம் உண்டாகும்; அஃதும் இனநலத்தின் சிறப்பாலேயே வலிமை பெறுகிறது.

இன நலத்தினாலே மனநலமும், மன நலத்தினாலே மறுமை இன்பமும் உண்டாவதால் இன நலம் மறுமை இன்பத்துக்குத் துணையாக இருக்கிறது.

மறுமை - மறுபிறப்பு; இங்கே மறுபிறப்பில் அடையத் தக்க இன்பம். 459

10. நல்லினத்தின் ஊங்கும் துணைஇல்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல்.

ஒருவனுக்கு நல்லஇனத்தைவிடச் சிறந்ததாகிய துணையும் (இவ்வுலகத்தில்) இல்லை. தீய இனத்தைவிட மிகுந்த துன்பத்தைத் தரும் பகையும் இல்லை.

ஊங்கு - சிறந்தது, மிகுந்தது; அல்லல் - துன்பம்; படுப்பதூஉம் - துன்பத்தை உண்டாக்குவதும், துணை என்பதற்கேற்பப் பகை என்பது வருவித்துக் கொள்ளப் பட்டது. 460

## 47. தெரிந்து செயல் வகை

1. அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல்.

ஒரு செயலைச் செய்யத் தொடங்குமுன் அதனால் அழியக் கூடியதையும் பிறகு அதன் வழியாக உண்டாகக் கூடிய ஊதியத்தையும் ஆராய்ந்து பார்த்துச் செய்தல் வேண்டும்.

தெரிந்து செயல் வகை - ஆராய்ந்து செய்யும் வகை; வழி பயத்தல் - அதன் வழியாக உண்டாதல்; ஊதியம் - நன்மை, இலாபம்; சூழ்ந்து - ஆராய்ந்து பார்த்து.

வரவு - செலவு; இலாபம் ஆகிய இம்மூன்றையும் எண்ணிப்பார்த்து ஒரு செயலைச் செய்தல் வேண்டும் 461

2. தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல்.

தகுந்தவர்கள் என்று தெரிந்து கொள்ளப்பட்ட நண்பர்களோடு கலந்து ஆராய்ந்து தம் அறிவைக் கொண்டும் எண்ணிப் பார்த்து ஒரு காரியத்தைச் செய்ய வல்லவர்களுக்கு அருமையான செயல் எதுவும் இல்லை.

தெரிந்த இனம் - தக்கவர்கள் என்று ஆராய்ந்து தெரிந்து கொள்ளப்பட்ட நண்பர்கள்; தேர்ந்து எண்ணி- பிறரோடுஆராய்ந்து பார்த்துத் தாமும் தமக்குள் எண்ணிப் பார்த்து. 462

3. ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார்.

பிறகு வரக்கூடிய வருவாயைக் கருதித் தம் முதற் பொருளையே இழக்கக்கூடிய செயலை அறிவுடையார் மேற்கொள்ளமாட்டார்.

ஆக்கம்-செல்வம்; இங்கே பின் வரக்கூடிய இலாபம்; ஊக்கார்-மேற்கொள்ளார். 463

**4. தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர்.**

இழிவு என்னும் குற்றத்துக்கு அஞ்சும் அருங்குணம் வாய்ந்தவர்கள் இந்தச் செயலைச் செய்தால் வெற்றி கிடைக்கும் அல்லது கிடைக்காது என்று நிச்சயமாகத் தெரிய வாராத சந்தேகத்துக்கு இடமான ஒரு செயலை ஒரு போதும் செய்ய மாட்டார்கள். 464

**5. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோர் ஆறு.**

செய்ய மேற்கொண்ட செயலின் வகைகளையெல்லாம் முற்றிலும் ஆராய்ச்சி செய்யாது ஒரு செயலைச் செய்யத் தொடங்குதல், பகைவராகிய பயிர் நன்றாக வளர்வதற்காக அவற்றை நல்ல நிலத்திலே நடுதற்குச் சமம் ஆகும்.

அரசன் நன்கு ஆராயாமல் ஒரு செயலைச் செய்வது பகைவருக்கு வேண்டிய அனுகூலங்களையெல்லாம் தானே செய்து கொடுப்பதற்குச் சமம் ஆகும் என்பதாம். ஒரு குடும்பத் தலைவன், இயக்கத் தலைவன் முதலியவர்களுக்கும் இது பொருந்தும்.

சூழாது-எண்ணிப் பார்க்காமல்; எழுதல்-ஒன்றைச் செய்யத் தொடங்குதல்; பாத்தி-நன்றாக வளரத்தக்க நிலம்; படுப்பது-நிலைபெறச் செய்வது; ஆறு-வழி. 465

**6. செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்.**

செய்யத் தகாத செயல்களைச் செய்வதனாலும் கேடு உண்டாகும்; செய்யத் தகுந்த செயல்களைச் செய்யாமல் விடுவதனாலும் கெடுதி உண்டாகும்.

செய்யத்தகாத செயல்; 1. செய்யமுடியாத பெரிய செயல். 2. செய்தால் பயன் தராதவை, 3. குறைந்த பயன்விளையும் செயல், 4. சந்தேகத்துக்கு இடமான செயல்.

செய்யத்தகுந்த செயல்; 1. சிறிது முயற்சியால் முடியக் கூடிய செயல். 2. பயன் தரும் செயல், 3. பெரிய பயன் விளையும் செயல், 4. சந்தேகத்துக்கு இடம் இல்லாத செயல். 466

7. எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.

செய்யத் தொடங்கும் ஒரு செயலை முன்னதாகவே நன்றாக ஆராய்ந்து, பிறகு அதைச் செய்யத் தொடங்க வேண்டும். செய்யத் தொடங்கிய பிறகு அதன் முடிவை எண்ணிப் பார்க்கலாம் என்பது தவறு.

துணிக - செய்யத் தொடங்குக; இழுக்கு - தவறு; குற்றம். 467

8. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

தகுந்த வழியில் முயலாத முயற்சி (தவறு நேர்ந்த பிறகு) பலர் துணையாக இருந்து பாதுகாத்த போதிலும் குறை பாடுடையதாகவே இருக்கும்.

ஆறு-வழி, இங்கே நல்ல வழி; வருந்தா-முயலாத, செய்யப்படாத, வருத்தம்-இங்கே முயற்சி என்னும் பொருளில் வந்துள்ளது; பொத்துப் படல்-தவறு படல். 468

9. நன்றாற்ற லுள்ளும் தவறுண் டவர்அவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

அவரவர் குணநலன்களை அறிந்து அவரவருக்குத் தக்க வகையில் நலன்களைச் செய்யாவிட்டால் நன்மை புரியும் போதும் குற்றங்கள் உண்டாதல் கூடும்.

நன்றாற்றல்-நல்ல செயல்களைச் செய்தல், நன்மை புரிதல்; ஆற்றாக்கடை-செய்யாதபோது. 469

10. எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு.

உலகத்தவர் தம் கருத்துக்கு ஒத்துவராத செயல்களை ஏற்றுக்கொள்ளார். ஆதலால், ஒருவர் தமக்கு நல்லதாகத்

தோன்றினாலும் பெரும்பாலோராய உலகத்தவர் கண்டு இகழாத வகையில் செயல்களை ஆய்ந்து பார்த்துச் செய்தல் வேண்டும்.

எள்ளாத - இகழாத; கொள்ளாத - தம் கருத்துக்கு ஒத்து வாராத. 470

## 48. வலியறிதல்

1. **வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்.**

தான் செய்ய எண்ணும் ஒரு செயலை அச்செயலின் வலிமையையும், தன் வலிமையையும், எதிரியின் வலிமையையும் ஆராய்ந்து பார்த்துச் செய்தல் வேண்டும்.

வினை - தொழில், செயல்; மாற்றான் - பகைவன், எதிரி; தூக்கி - ஆராய்ந்து பார்த்து. 471

2. **ஒல்வது அறிவது அறிந்ததன் கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல்.**

தம்மால் இயல்வதை அறிந்தும், மேலும் அறிய வேண்டியதைப் பிறர்மூலம் கேட்டு அறிந்தும், தாம் மேற்கொண்ட செயலிலேயே மனத்தைப் பொருந்த வைத்து முயற்சி செய்கின்றவர்க்கு முடியாதது ஒன்றும் இல்லை.

ஒல்வது - இயல்வது; ஒல்வது அறிதல் - தமக்குள்ள வலிமையைத் தெரிந்து கொள்ளுதல்; அறிவது அறிதல் - மேலும் அறியவேண்டியதை ஒற்றர் மூலம் கேட்டறிதல்; அதன்கண் தங்குதல் - அந்தச் செயலின் மேல் கண்ணும் கருத்துமாக இருத்தல்; செல்வார் - முயற்சி செய்யத் தொடங்குபவர்; செல்லாதது - முடியாதது. 472

3. **உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்.**

தம்முடைய வலிமையின் அளவை அறிந்து கொள்ளாமல் தமக்குள்ள ஊக்கத்தின் மிகுதியால் ஒரு செயலைச்

செய்ய முன் வந்து தொடங்கி அந்தச் செயல் முடிவதற்கு முன் இடையிலேயே அழிந்து ஒழிந்தவர் பலர் ஆவர்.

உடைத்தம் வலி - தம்முடைய வலிமை; ஊக்கி - செய்யத் தொடங்கி; இடைக்கண் - இடையிலே; முரிதல் - கெட்டு ஒழிதல். 473

4. அமைந்தாங் கொழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

தனக்கு இயல்பாக அமைந்துள்ள வலிமைக்கு ஏற்றபடி நடவாமலும், தன் வலிமையின் அளவையும் உள்ளபடி உணர்ந்துகொள்ளாமலும், தன் வலிமையைக் குறித்துத் தானே பெருமைப்பட்டுக் கொண்டிருப்பவன் விரைவில் கெட்டு அழிவான்.

அமைந்தாங்கு - தனக்கு இயல்பிலே அமைந்துள்ளபடி; ஒழுகான் - நடவாதவன்; வியந்தான் - தன்னைத் தானே பெரிதும் மதித்துக் கொள்பவன். 474

5. பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்.

மெல்லிய மயில் இறகு ஏற்றிய வண்டியாக இருந்தாலும் அந்த மயில் இறகுச் சுமையினை வலிமை வாய்ந்த அந்த வண்டியின்மீது அளவு கடந்து மேன்மேலும் ஏற்றினால் முடிவில் அந்த வண்டியின அச்சு முரியும்.

வலிமையில்லாதவர் மிகப் பலராக இருப்பின் மிகவும் வலிமை பெற்ற ஒருவனையும் ஒழித்துவிடக்கூடும் என்பது பொருள்.

பீலி - மயில் இறகு; சாகாடு - சகடம், வண்டி; அச்சு - வண்டியின் சக்கரம் கோக்கப்படும் மரம்; சால மிகுத்து - மிகவும் அதிகமாக; பெயின் - ஏற்றினால். 475

6. நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்.

ஒரு மரக்கிளையின் நுனியில் ஏறி நிற்பவர் அதையும் கடந்து அதற்கு அப்பாலும் ஏறி நிற்க முனைந்தால், அம் முயற்சி அவர்தம் உயிருக்கே முடிவினைக் கொண்டு வந்து விடும்.

தம் அளவுக்கு மீறிய முயற்சியில் ஈடுபடும் ஒருவர் முடிவில் தாமே அழிந்து படுவார்; எதற்கும் ஓர் எல்லை உண்டு. அவ்வெல்லையைக் கடவாமல் முயற்சி செய்பவர் வெற்றி பெறுவர் என்பது கருத்து.

கொம்பர் - கொம்பு, மரக்கிளை; ஊக்குதல் - முயலுதல், மன எழுச்சி கொள்ளுதல்; இறுதி - முடிவு, அழிவு. 476

**7. ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்**
**போற்றி வழங்கும் நெறி.**

வருவாயின் அளவுக்குத் தக்கபடி பிறருக்குக் கொடுத்தல் வேண்டும். அவ்விதம் அளவறிந்து தருதலே பொருளைப் பாதுகாத்து ஒழுகும் வழியாகும்.

ஆற்றின் அளவு அறிந்து ஈதலாவது வருவாயுள் கால் பாகத்துக்கு மேற்படாமல் பிறருக்கு உதவி செய்தல்; ஆறு - வழி, இங்கே பொருள் வரும் வழி, வருவாய்; போற்றி - பாதுகாத்து; வழங்கும் நெறி - ஒழுகும் வழி, வாழும் வழி. 477

**8. ஆகாறு அளவிட்டிது ஆயினும் கேடில்லை**
**போகாறு அகலாக் கடை.**

வருவாய் சிறிதாக இருந்தாலும், செலவு வருவாய்க்கு மேற்படாமல் இருந்தால, அதனால் கெடுதியில்லை.

ஆகு ஆறு - பொருள் வரும் வழி, வருவாய்; இட்டிதாயினும் - சிறிதாக இருந்தாலும்; இட்டிது - சிறிது; போகு ஆறு - பொருள் போகின்ற வழி, செலவு; அகலாக் கடை - (வரவுக்கு மேல்) விரிவுபடாமல் இருந்தால், 478

**9. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல**
**இல்லாகித் தோன்றாக் கெடும்.**

தனக்குள்ள பொருளின் அளவினை அறிந்து அதற்கு ஏற்ப வாழாதவனுடைய வாழ்க்கை முதலில் வளம் பலவும் அமைந்துள்ளனபோல தோன்றிப் பின்னர் இல்லாதனவாய் இருந்த இடம் தெரியாமல் அழிந்து போய் விடும்.

உள - (வளம் பலவும் அமைந்து) உள்ளவை; தோன்றாக் கெடும் - மறுபடியும் ஒரு காலத்தே தோன்றுதற்கு இல்லாதபடி அடியோடு கெட்டொழியும். 479

10. உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

தனக்குப் பொருள் உள்ள அளவினை ஆராய்ந்து பார்க்காமல் மேற்கொள்ளும் பரோபகாரத்தினால் ஒருவனது செல்வத்தின் அளவு விரைவில் குறைந்துவிடும்.

உளவரை - உள்ள அளவு; தூக்காத - ஆராய்ந்து பார்க்காத; ஒப்புரவு - உலக நடை அறிந்து உதவி செய்தல்; வல்லை - சீக்கிரம், விரைவு. 480

## 49. காலம் அறிதல்

1. பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

தன்னைவிட வலிதாகிய கூகையைக் காக்கை பகற்போதிலே வென்றுவிடும். அதுபோலப் பகைவரை வெல்லக் கருதும் அரசருக்கு அதற்கு ஏற்ற காலம் இன்றியமையாதது.

கூகை - கோட்டான்; இகல் - பகை. 481

2. பருவத்தோ டொட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு.

காலத்தோடு பொருந்தத் தொழிலில் ஈடுபட்டு நடத்தல், நில்லா இயல்புடைய செல்வத்தை நீங்காமல் கட்டி வைக்கும் கயிறு ஆகும்.

பருவத்தோடு ஒட்ட ஒழுகல் - காலத்துக்கு ஏற்ற வண்ணம் செய்தல்; தீராமை - விட்டு நீங்காமல் இருக்கும்படி; ஆர்க்கும் - கட்டி வைக்கும். 482

3. அருவினை என்ப உளவோ கருவியால்
காலம் அறிந்து செயின்.

செய்து முடித்தற்கு ஏற்ற கருவிகளுடனே செய்தற்கு ஏற்ற காலத்தையும் உணர்ந்து செய்தால், மக்களால் செய்ய முடியாத அரிய செயல்களும் உளவோ? இல்லை.

அருவினை - அரிய செயல்; கருவிகளாவன - மூவகை ஆற்றலும் நால்வகை உபாயங்களும் ஆகும். மூவகை

ஆற்றல்; அறிவு, ஆண்மை; பெருமை. நால்வகை உபாயம்; சாம, பேத, தான, தண்டம். இவை அரசியல் தலைவர்களுக்கு இன்றியமையாதவை. இக்காலத்துக்கு ஏற்ற விஞ்ஞானக் கருவிகளும் அவைகளை இயக்கும் விஞ்ஞான அறிவும் இவைகளுள் அடங்கும்.

எத்தகைய சிறந்த கருவிகள் இருப்பினும் காலமும் இன்றியமையாதது என்பது கருத்து. 483

4. ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின்.

ஒருவன் இவ்வுலகம் முழுவதையும் தானே ஆளவேண்டும் என்று எண்ணினாலும் அஃது அவனுக்கு நிச்சயமாகக் கிடைக்கும். ஆனால், அவன் அதற்கு ஏற்ற செயலைச் செய்யவேண்டிய காலம் அறிந்து, அதற்கு ஏற்ற இடத்தையும் மனத்திற்கொண்டு செய்தல் வேண்டும்.

ஞாலம் - உலகம். கைகூடும் என்பதற்கு நிச்சயமாகக் கிடைக்கும் என்றும் எளிதில் கூடும் என்றும் பொருள் கொள்ளுவர்.

செயல் கைகூடுதற்குத் தக்க முயற்சியோடு ஏற்ற காலமும் இடமும் இன்றியமையாதன. 484

5. காலங் கருதி இருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

உலகத்தை யெல்லாம் நாம் கட்டி ஆளவேண்டும் என்னும் எண்ணத்தை மனத்திற் கொண்டு இருப்பவர் அதற்கு ஏற்ற கருவிகளை யெல்லாம் தாம் கைக்கொண்டு இருந்தாலும், தகுந்த காலத்தையும் அமைதியோடு எதிர் பார்த்திருத்தல் வேண்டும்.

கலங்காது - மன அமைதியோடு; 'கலங்காது' என்பதற்குத் தப்பாமல் எனவும் பொருள் கொள்வர். 485

6. ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

ஊக்கம் உடையவன் காலத்தை எதிர்பார்த்து அடங்கியிருத்தல், போர் செய்யும் ஆட்டுக்கிடாய், எதிர் ஆட்டின்

மீது பாய்ந்து அதைத் தாக்குதற்காகப் பின்புறம் கால் வாங்குதல் போன்றது.

ஊக்கம் - மனவலிமையின் மிகுதி; ஒடுக்கம் - அடங்கியிருத்தல்; தகர் - ஆட்டின் பொதுப்பெயர்; ஆட்டுக்கிடாய்; தாக்கற்கு - எதிர்ப்பதற்கு; பேர்தல் - பின்வாங்குதல்; தகைத்து - தன்மையுடையது. 486

**7. பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்(து)**
**உள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.**

பகைவர் தமக்குக் கெடுதலைச் செய்த அப்போதே அறிவுடையோர் அவர் மீதுள்ள கோபத்தை வெளிக்குக் காட்டிக் கொள்ளமாட்டார்; அந்தப் பகைவரை வெல்லுங் கோபத்தை மறைத்து வைத்திருப்பர்.

பொள் என - உடனே விரைவாக; புறம் வேரார் - வெளியே கோபத்தைக் காட்டிக் கொள்ளமாட்டார்; வேர்தல் - கோபம் கொள்ளுதல்; ஒள்ளியர் - அறிவுடையவர். 487

**8. செறுநரைக் காணின் சுமக்க இறுவரை**
**காணின் கிழக்காம் தலை.**

காலம் நன்கு அமையாதபோது பகைவரைக் கண்டால் அவருடைய குற்றங்களைத் தாங்கிக்கொண்டு அமைதியாக இருத்தல் வேண்டும். அந்தப் பகைவருக்கு முடிவு காலம் வந்தபோது அவருடைய நிலை தலைகீழாக மாறிவிடும்.

செறுநர் - பகைவர்; சுமத்தல் - தாங்கிக் கொண்டு இருத்தல், பணிவோடு இருத்தல்; இறுவரை - முடிவுகாலம்; கிழக்காம் தலை - தலைகீழாக மாறும்; கிழக்கு - கீழ். 488

**9. எய்தற் கரியது இயைந்தக்கால் அந்நிலையே**
**செய்தற் கரிய செயல்.**

கிடைத்தற்கு அருமையான காலம் வந்து வாய்த்த பொழுது செய்வதற்கு அரிய செயலை அப்போதே செய்து முடித்தல் வேண்டும்.

எய்தற்கு அரியது - கிடைத்தற்கு அரியது; இயைதல் - அடைதல்; அந்நிலையே - அப்போதே. 489

**10·** கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து.

ஒரு தொழிலைச் செய்வதற்குத் தகுந்த காலம் அமையாத போது கொக்குபோல் அமைதியாக இருத்தல் வேண்டும். தகுந்த காலம் வாய்த்தபோது அதன் குத்துப் போல அந்தச் செயலைத் தவறாது உடனே செய்து முடித்தல் வேண்டும்.

ஒக்க - ஒத்து இருக்க; கூம்பும் பருவம் - ஒடுங்கியிருக்கும் காலம்; கூம்புதல் - ஒடுங்குதல்; சீர்த்த இடம்-செயல் புரிவதற்கு வாய்த்த இடம். சீர்த்தல்-சமயம் வாய்த்தல். 490

## 50. இடன் அறிதல்

**1·** தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்அல் லது.

பகைவரை முற்றுகை செய்தற்கு ஏற்ற இடத்தைக் கண்டு கொள்வதற்குமுன் அந்தப் பகைவரை வெல்ல நினைக்கும் எந்தச் செயலையும் தொடங்குதல் கூடாது. அச்செயல்களை இகழ்தலும் கூடாது.

எள்ளுதல் - இகழ்தல். இது பகைவரை இகழ்தல். பகைவரை அழிக்கும் காரணமாகச் செய்யத்தக்க செயல்களை இகழ்தல் ஆகிய இரண்டு செயல்கட்கும் பொருந்தும்; முற்றுதல் – பகைவர் கோட்டை கொத்தளம் முதலியவைகளை வளைத்துக் கொள்ளுதல். 491

**2.** முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும்
ஆக்கம் பலவும் தரும். [அரண்சேர்ந்தாம்

பிற துணைகள் சிறிதும் இன்றித் தம் உடல் வலிமை ஒன்றைக் கொண்டே பகைவரை வெல்லத்தக்க வலிமையுடையவர்க்கும் கோட்டை கொத்தளங்களோடு கூடிய வசதி பலவித நன்மைகளையும் கொடுக்கும்.

முரண் - மாறுபாடு, பகைமை; மொய்ம்பு - வலிமை; அஃதாவது மிக்க வலிமை; அரண் - கோட்டை கொத்தளங்கள்; ஆக்கம் - வசதி; பல - இங்கே பலவித நன்மை. 492

3. ஆற்றாரும் ஆற்றி அடுப இடனறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின்.

வெல்லத்தக்க இடம் அறிந்து முதலில் தம்மைப் பாது காத்துக்கொண்டு பிறகு பகைவரிடம் தம்முடைய வல்லமையைக் காட்டினால் வலிமை சிறிதும் இல்லாதவரும் வலிமையுடையவராகி வெற்றி பெறுவர். 493

4. எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

தாம் எண்ணிய செயலைச் செய்தற்குத் தகுந்த இடத்தை முதலில் அறிந்துகொண்டு அங்கே தங்கியிருந்து பிறகு தம் செயலை நெருங்கிச் செய்வாராயின் அவரை வெல்லுவதற்கு எண்ணியிருந்த பகைவர் தம் எண்ணத்தை இழந்துவிடுவர். 494

5. நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற.

ஆழமுள்ள நீரினையுடைய இடத்தில் முதலை பிற உயிர்களை வெல்லும்; அந்த நீரைவிட்டு முதலை வெளியே வருமானால் அதனை மற்ற உயிர்கள் வென்றுவிடும்.

அவரவர் இடத்தில் இருக்கும்போது வலிமை சிறிதும் இல்லாதவரும் வெற்றி பெறுவர்; தம் இடத்தைவிட்டு நீங்கினால் மிக்க வலிமை பெற்றவரும் தோல்வியுறுவர் என்பது கருத்து. 495

6. கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
நாவாயும் ஓடா நிலத்து.

தரையில் ஓடக்கூடிய வலிய சக்கரங்களையுடைய பெரிய தேர்கள் கடலில் ஓடமாட்டா; கடலில் ஓடக்கூடிய பெரிய கப்பல்களும் நிலத்தில் ஓடமாட்டா.

கால் - சக்கரம். தேர் — உருளை; வல் - வலிமை பொருந்திய; நாவாய் - பெரிய கப்பல்கள்.

ஒருவருக்கு உகந்த இடம் பிறிதொருவருக்கு உகந்ததாக இராது என்பது கருத்து. 496

7. அஞ்சாமை அல்லல் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தால் செயின்.

செய்யவேண்டிய செயல் வகைகளையெல்லாம் சிறிதும் குறையில்லாமல் சிந்தித்து, ஏற்ற இடத்தையும் அறிந்து ஒரு செயலைச் செய்யத் தொடங்கினால் அந்த முயற்சி கைகூடுதற்கு அஞ்சாமையைத் தவிர வேறு துணையே வேண்டியதில்லை.

தக்க இடத்தோடு அஞ்சாமையும் வேண்டும் என்பது கருத்து. 497

8. சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும்.

சிறிய சேனையை உடையவனாக இருந்தாலும் அவன் தனக்குப் பொருந்திய இடத்தை அடைந்திருப்பானானால், பெரிய சேனையை உடையவனும் அவனை எதிர்க்க முடியாமல் முயற்சி குன்றி அழிவான். 498

9. சிறைநலனும் சீரும் இலரெனினும் மாந்தர்
உறைநிலத்தோடு ஒட்டல் அரிது.

காவற் கோட்டையும் அதற்கேற்ற பிற சிறப்புக்களும் இல்லாதவராய் இருந்தாலும் பகைவர் நிலையாகத் தங்கியிருக்கும் இடத்துக்குச் சென்று அவர்களைத் தாக்குதல் அரிது. 499

10. காலாழ் களரின் நரியடும் கண்ணஞ்சா
வேலாள் முகத்த களிறு.

வேல் ஏந்திய வீரரைத் தன் கொம்பினால் குத்திக் கோத்து எடுக்கும் அஞ்சாத தன்மையுடைய பெரிய யானையையும் அது கால் ஆழும்படியான சேற்று நிலத்தில் அகப்பட்டுக் கொண்ட போது ஒரு சிறு நரி அதைக் கொன்றுவிடும்.

களர் - உவர் நிலம்; அடும் - கொன்றுவிடும்; கண் அஞ்சா - பயப்படாத; வேல் ஆள் - வேல் ஏந்திய வீரர்; முகத்த - முகத்தினையுடைய, இங்கே முகத்தில் உள்ள கொம்பினைக் குறிக்கும்; களிறு - ஆண் யானை. 500

## 51. தெரிந்து தெளிதல்

1. அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.

நீதிநெறி, பொருள், இன்பம், உயிருக்காக அஞ்சும் அச்சம் ஆகிய நான்கு வகையாலும் ஆராய்ந்த பிறகே ஒருவன் ஒரு தொழிலுக்கு உரியவானாகத் தேர்ந்தெடுக்கப் படல் வேண்டும்.

நான்கின் திறம் தெரிந்து தேறலாவது, இவன் நீதி தவறி நடக்கின்றவனா, பிறர் பொருளைக் கைக்கொள்ள எண்ணுபவனா, சிற்றின்பப் பிரியனா, தன் உயிருக்காக அஞ்சும் கோழையா என நான்கு வகையாலும் சோதித்துப் பிறகு தெளிதல்.

தெரிந்து தெளிதல் - இவன் தகுதியுடையவன், தகுதியில்லாதவன் என ஆராய்ந்து நிச்சயித்தல். 501

2. குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு.

நல்ல குடும்பத்தில் பிறந்து குற்றங்கள் சிறிதும் இல்லாமல், பழி பாவங்கட்கு அஞ்சி நாணும் தன்மையுடைய ஒருவனையே ஆராய்ந்து தெரிந்தெடுத்தல் வேண்டும்.

குடி - குடும்பம்; வடுப்பரிதல் - குற்றம் வருமோ என அஞ்சியிருக்கும் தன்மை; கட்டே - கண்ணதே. 502

3. அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு.

அருமையான நூல்கள் பலவற்றையும் கற்றுத் தெரிந்து குற்றம் சிறிதும் இல்லாதவர் எனப்படுவோரிடத்தும் ஆராய்ந்து பார்க்கும் போது அறியாமை இல்லாமல் இருத்தல் அருமையாகும். 503

4. குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

ஒருவனுக்குள்ள குணங்களையும் ஆராய்ந்து, குற்றங்களையும் ஆராய்ந்து பார்த்து, அவைகளுள் மிகுதியாக

உள்ளவற்றைக் கொண்டு அவன் நல்ல குணம் உடையவன் அல்லது தீய குணமுடையவன் என்பதைத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

குற்றமே யில்லாதவர் இலர். ஆதலால், குணம் குற்றங்களை ஆய்ந்து குற்றம் மிகுதியாயிருந்தால் வினைக்குரியவனாகக் கொள்ளற்க. 504

5. பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.

மக்களின் பெருமையை அறிவதற்கும், அவர்தம் சிறுமையை அறிதற்கும் அவரவர் செய்யும் செயல்களே உரைகல்லாக இருக்கின்றன.

கட்டளைக் கல்-உரைகல்; பொன்னை உரைத்துப் பார்த்து அதன் தரத்தை மதிப்பிடும் கல். 505

6. அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

எத்தகைய ஆதரவும் அற்றுத் திரிவாரை நம்பித் தெளிதல் கூடாது. அவர் உலகத்தவரோடு தொடர்பு சிறிதும் இல்லாதவர். ஆதலால் அவர் பழி பாவங்கட்கும் அஞ்சமாட்டார்.

அற்றார்-ஆதரவு அற்றவர்; சுற்றத்தவரின் தொடர்பு சிறிதும் இல்லாதவர் என்றும் கூறலாம். தேறுதல்-தெளிதல்; ஓம்புக-விட்டொழிக. 506

7. காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை எல்லாம் தரும்.

அறிந்துகொள்ள வேண்டியவற்றை அறிந்துகொள்ளாதிருப்பாரை அவர்மீது வைத்த அன்புடைமை காரணமாக நம்பித் தெளிதல் எல்லாவகையான அறியாமையையும் உண்டாக்கும்.

காதன்மை-ஆசை, அன்பு; கந்து-பற்றுக்கோடு. 507

8. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்.

அயலான் ஒருவனைச் சிறிதும் ஆராய்ந்து பாராது அவன்மீது நம்பிக்கை வைக்கும் ஒருவனால் அவன் துன்பப் படுவதல்லாமல் அவன் கால்வழியினரும் நீங்காத துன்பத்தை அனுபவிக்கும்படி நேரும். 508

9. தேறற்க யாரையும் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.

நன்றாக ஆராய்ந்து பார்க்காது யாரையும் தெளிதல் கூடாது. அவ்வாறு ஆராய்ந்துபார்த்தபின் அவரிடம் எந்தச் செயலைக் குறித்து ஆராய்ந்து தெளிந்து கொள்ளலாமோ அந்தச் செயலைக் குறித்து ஆராய்ந்து தெளிக. 509

10. தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.

ஆராய்ந்து பார்க்காது ஒருவனிடம் நம்பிக்கை வைத்தலும், ஆராய்ந்து பார்த்துத் தெளிவடைந்த ஒருவனிடம் சந்தேகம் கொள்ளுதலும் என்றும் நீங்காத துன்பத்தைத் தரும். 510

## 52. தெரிந்து வினையாடல்

1. நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும்.

ஒரு செயலில் உள்ள நன்மை, தீமை ஆகிய இரண்டையும் ஆராய்ந்து பார்த்து நன்மையையே விரும்பும் குணம் உடைய ஒருவனே அச்செயலுக்கு உரியவனாகத் தேர்ந்தெடுக்கப்படுவான்.

தெரிந்து வினையாடல் - ஒருவன் செய்யக்கூடிய செயலைத் தெரிந்து அச்செயலுக்கு அவனை ஏவுதல்; நலம் புரிந்த நன்மையான் - நன்மையை விரும்பும் குணமுடையவன். 511

2. வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை
ஆராய்வான் செய்க வினை.

பொருள் வரும் வழிகளை அதிகரிக்கச் செய்து அப்பொருளால் வளத்தை உண்டாக்கி, அப்போது

நேர்ந்த இடையூறுகளையும் ஆராய்ந்து நீக்க வல்லவனே குறித்த ஒரு செயலைச் செய்தல் வேண்டும்.

வாரி - வழி; வளம் - செல்வம்; உற்றவை - நேர்ந்த இடையூறுகள். 512

3. அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.

அன்பும் அறிவும் உள்ளத்தெளிவும் ஆசையில்லாமையும் ஆகிய நான்கு குணங்களையும் சிறப்பாக உடையவனையே ஒரு செயலைச் செய்யத் தெரிந்தெடுத்தல் வேண்டும்.

மேற்சொன்ன நான்கு குணங்களும் நிரம்பப் பெற்றவனிடத்தில் ஒரு வேலையைத் தர நிச்சயிக்க வேண்டும் என்பது கருத்து. 513

4. எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகை
வேறாகும் மாந்தர் பலர். [யான்

எல்லா வகையாலும் ஆராய்ந்து தெளிந்த பிறகு ஒரு வேலையை மேற்கொண்டு செய்யும்போது அவ்வேலை வேறுபாடு காரணமாகக் குணம் மாறுதல் அடையும் மக்கள் உலகத்திலே பலர் உண்டு.

எல்லா வகையாலும் ஆராய்ந்து நிச்சயித்துவிட்டோம் என்று எண்ணி ஏமாறலாகாது; பதவி உயர்வால் மக்கள் மாறுதல் கூடும் என்பது கருத்து. 514

5. அறிந்தாற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்
சிறந்தானென்று ஏவற்பாற் றன்று.

வேலை செய்யும் வழிகளை அறிந்து அவ்வேலையால் வரும் இடையூறுகளைத் தாங்கிச் செய்து முடிக்க வல்லவனை அல்லாமல் மற்றவனைச் சிறந்தவன் என்று எண்ணி ஒரு வேலையைச் செய்யும்படி கட்டளையிடுதல் கூடாது.

வினைதான் சிறந்தான் என்பதற்கு வேலையில் சிறந்தவன் என்றும் பொருள் கூறலாம். வேலையில் சிறந்தவன் என்பதை மட்டுமே கருதி மற்றவற்றை ஆராயாமல் ஒருவனை ஏவலாகாது. 515

**6. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு**
**எய்த உணர்ந்து செயல்.**

தொழில் செய்பவனுடைய திறமையினை ஆராய்ந்து செயலின் தன்மையினையும் ஆராய்ந்து இந்தக் காலத்துக்கு இது தகுந்தது தானா என்பதையும் அறிந்து அந்தவேலையை அவனிடம் தந்து செய்யச் சொல்லுதல் வேண்டும். 516

**7. இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து**
**அதனை அவன்கண் விடல்.**

இந்த வேலையை இந்த விதத்தினால் இவன் முடித்தல் கூடும் என்பதை ஆராய்ந்து அறிந்து பிறகு அந்த வேலையை அவனிடம் ஒப்புவித்தல் வேண்டும்.

அந்த அந்த வேலையில் வல்லவனையே அந்த அந்த வேலையில் அமர்த்தவேண்டும். ஒரு வேலையில் வல்லவன் எல்லா வேலையிலும் வல்லவனாக இரான் என்பது கருத்து. 517

**8. வினைக்குரிமை நாடிய பின்னர் அவனை**
**அதற்குரிய னாகச் செயல்.**

இந்த வேலைக்கு இவன் தகுந்தவன் என்று ஆராய்ந்து அறிந்து பின்பு அவனை அந்த வேலையைச் செய்வதற்கு உரியவன் ஆகுமாறு செய்தல் வேண்டும் (அந்த வேலையில் அவனை அமர்த்தல் வேண்டும். 518

**9. வினைக்கண் வினையுடையான் கேண்மை வேறாக**
**நினைப்பானை நீங்கும் திரு.**

தான் செய்ய மேற்கொண்ட வேலையின்மீது கண்ணும் கருத்துமாக இருந்து முயல்பவனது நட்பினைத் தவறாக நினைக்கும் தலைவனிடமிருந்து செல்வம் நீங்கிவிடும்.

வினைக்கண் வினையுடையான்-தன் வேலையின்கண் இடைவிடாத முயற்சி உடையவன்; கேண்மை-நட்பு; வேறாக நினைத்தல்-பகைவர் சொற்கேட்டுத் தவறாக எண்ணுதல்; திரு - செல்வம். 519

**10. நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்**
**கோடாமை கோடாது உலகு.**

தொழில் செய்கின்றவன் சரியாகத் தன் வேலையைச் செய்து வருவானானால் அந்த வேலையில் சம்பந்தப்பட்ட பிற மக்களும் ஒழுங்குபெற வாழ்ந்து வருவர். ஆதலால், அத்தகைய பொறுப்பு வாய்ந்த வினையைச் செய்வானிடம் அரசன் நாள்தோறும் கண்ணும் கருத்துமாக இருத்தல் வேண்டும். 520

## 53. சுற்றம் தழால்

1. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

செல்வம் நீங்கி வறியவன் ஆனபோதும் அவனோடு தமக்கு முன்பே இருந்த பழைய தொடர்பினை நினைந்து புகழ்ந்து பேசும் குணங்கள் சுற்றத்தாரிடத்தில்தான் உள்ளன.

சுற்றம் தழால் - தன்னைச் சூழ்ந்துள்ளவர்களை எக்காலத்தும் விடாமல் தழுவிக் கொண்டிருத்தல்; சுற்றம்- உறவின்முறை; அரசர்க்கு அமைச்சர், சேனைத்தலைவன் முதலியோர் சுற்றத்தினர் ஆவர். 521

2. விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
ஆக்கம் பலவுந் தரும்.

அன்பு நீங்காத சுற்றத்தினர் ஒருவனுக்குக் கிடைத்தால் அஃது அவனுக்கு மேன்மேலும் வளர்ச்சியில் குறையாத செல்வங்கள் பலவற்றையும் கொடுக்கும்.

அருப்பு அறா ஆக்கம்-கிளைத்தல் அறாத செல்வம். வளர்ந்துகொண்டே இருக்கும் செல்வம்; அருப்பு-அரும்பு. 522

3. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

சுற்றத்தாரோடு மனங்கலந்து உறவாடாதவன் வாழ்க்கை, குளப்பரப்பானது கரையில்லாது நீர் நிறைந்தாற் போலும்.

குளவளா-குளப்பரப்பு; கோடு. கரை.

கரையில்லாத குளம் நீர் நிரம்புதல் அரிது. அதுபோல் சுற்றத்தாரோடு மனங்கலந்து உறவாடாத வாழ்க்கை வாழ்க்கை அன்று என்பது பொருள். 523

4. சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன்.

சுற்றத்தார் தன்னைச் சூழ்ந்திருக்கும்படிஅவர்களோடு அளவளாவி வாழ்தலே ஒருவன் செல்வத்தைப் பெற்றதனால் பெற்ற பயன் ஆகும். 524

5. கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தால் சுற்றப் படும்.

சுற்றத்தார் விரும்புவன கொடுத்தலும், இன்சொல் கூறுதலும் ஆகியஇரண்டனையும் ஒருவன்செய்ய வல்லவன். ஆனால், அவன் தொடர்ந்து வரத்தக்க பலப்பல சுற்றத்தாராலும் சூழப்படுவான்.

தொடர்ந்து வரலாவது-ஒருவர்பின் ஒருவர் தொடர்பு கூறிக்கொண்டு வருதல். 525

6. பெருங்கொடையான் பேணான் வெகுளி அவனின்
மருங்குடையார் மாநிலத்து இல்.

ஒருவன் மிக்க கொடையாளியாகவும், கோபத்தை விரும்பாதவனாகவும் இருந்தால் அவனைப்போல் சுற்றத்தாரை உடையவர் இந்த உலகத்திலே எவரும் இலர்.

மருங்கு-பக்கம், இங்கே பக்கத்திலுள்ள சுற்றத்தார். 526

7. காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள.

காக்கைகள் தமக்குக் கிடைத்த உணவை மறைத்து வைக்காமல் தம்இனத்தை அழைத்து அவைகளோடுகலந்து உண்ணும். அப்படிப்பட்ட தன்மை உடையவர்களுக்கே சுற்றததினரால் அடையக்கூடிய பலவகைச் செல்வங்களும் உள ஆகும்.

கரவா-மறைத்து வைக்காமல்; கரைந்து- அழைத்து. 527

8. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்.

அரசன் தன்னைச் சூழ்ந்துள்ள அனைவரையும் ஒரே தன்மையிற் பார்க்காமல் அவரவர் தகுதிக்கு ஏற்ப அவரவர்களைக் கவனித்தல் வேண்டும். அவ்விதம் அவன் செய்வானானால் அந்தச் சிறப்பினை நோக்கி அவனிடம் சுற்றமாக இருந்து வாழ்பவர் பலர் ஆவர்.

பொது நோக்கம் - எல்லாரையும் ஒரு தன்மையாகக் கவனித்தல். 528

9. தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்
காரணம் இன்றி வரும்.

முன்பு தன் சுற்றத்தினராக இருந்து பின் ஏதோ ஒரு காரணத்தால் தன்னைவிட்டுப் பிரிந்து போனவர், அவ்விதம் பிரிய நேர்ந்ததற்கு உரிய காரணம் நீங்கியதும் தாமே வந்து சேர்வர்.

அமராமைக் காரணம் - அவ்விதம் பொருந்தி யிராததன் காரணம்; இன்றி - நீங்கியபின்.

தன் நடத்தையில் தவறு கண்டு பிரிந்து போனவர் அந்தத் தவற்றை உணர்ந்து ஒருவன் திருத்திக் கொள்வானானால் வலிய வந்து சேர்வார்கள். 529

10. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந்து எண்ணிக் கொளல்.

தன்னிடமிருந்து ஒருவன் பிரிந்து சென்று பிறகு ஒரு காரணம் குறித்துத் திரும்பி வருவானானால், அரசன் அவன் எண்ணியபடி உதவியைச் செய்து, அமைதியாக இருந்து, அவன் குணத்தையும் ஆராய்ந்து பார்த்து, அவனை உறவாகக் கொள்ளுதல் வேண்டும்.

உழை - இடம்: இழைத்து - அவனுக்கு வேண்டியதைச் செய்து; எண்ணி - ஆராய்ந்து பார்த்து.

நம்மைவிட்டுப் பிரிந்து போனவர்களையும் அவர்களுக்கு வேண்டுவன புரிந்து சுற்றத்தினராகச் சேர்த்துக்கொள்ள வேண்டும். அவ்விதம் சேர்த்துக் கொள்ளும்போது நன்றாகச் சிந்தித்துப் பார்த்தே சேர்த்துக்கொள்ள வேண்டும். 530

## 54. பொச்சாவாமை

1. இறந்த வெகுளியின் தீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

அளவுகடந்த கோபம் ஒருவனுக்கு மிகவும் தீமையினை விளைவிக்கும். அதனினும் தீமையைத் தரத்தக்கது ஒன்று உண்டு. அஃதாவது மிகுந்த மகிழ்ச்சிக் களிப்பினால் உண்டாகும் மறதியேயாம்.

பொச்சாவாமை - மறவாமல் இருத்தல்; பொச்சாப்பு- மறதி; இறந்த வெகுளி - அளவுகடந்த கோபம்; உவகை மகிழ்ச்சி- மிக்க மகிழ்ச்சியால் வரும் களிப்பு, பேரானந்தம்; சோர்வு - மறந்திருக்கும் தன்மை, மறதி. 531

2. பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

நாள்தோறும் துன்பத்தைத் தரும் தரித்திரம் ஒருவன் அறிவினை முற்றிலும் கெடுக்கும். அதுபோல மறதி ஒருவன் புகழினை அடியோடு அழித்துவிடும்.

கொல்லும் - முற்றிலும் கெடுத்துவிடும்; நிச்ச நிரப்பு - நித்திய தரித்திரம்; நிரபபு - தரித்திரம். 532

3. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை அதுஉலகத்து
எப்பால்நூ லோர்க்கும் துணிவு.

உள்ளச் சோர்வால் மறதி உடையவர்கட்கும் புகழுடன் வாழும் வாய்ப்பு இல்லை. இது நீதி நூலாரின் கொள்கை மட்டும் அன்று; பலவகைப்பட்ட கொள்கையினையுடைய நூலாசிரியரும் இதே கொள்கையுடையராவர்.

புகழ்மை - புகழுடன் வாழும் தன்மை; எப்பால் நூலோர் - எப்படிப்பட்ட கொள்கையுடைய நூலாசிரியர் களும்; துணிவு - ஒப்ப முடிந்த கொள்கை, முடிவான கொள்கை. 533

4. அச்ச முடையார்க்கு அரணில்லை ஆங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

காடு,மலை முதலிய அரண்களுக்கு நடுவே இருந்தாலும் மனத்தில் அச்சத்தை யுடையவர்களுக்கு அந்த அரண் களால் எந்தவிதமான பயனும் இல்லை. அதுபோலப்

[illegible] நன்மைகளை உடையவராக இருந்தாலும் மனத்தில் மறதியை உடையவர்க்கு அவைகளால் பயன் இல்லை.

நன்கு - நன்மை; செல்வம் என்றும் பொருள் கூறலாம். 534

5. முன்னுறக் காவாது இழுக்கியான் தன்பிழை
பின்னூறு இரங்கி விடும்.

வரக்கூடிய இடையூறுகளை முன்னதாகவே அறிந்து காத்துக் கொள்ளாமல் கவலையற்று மறந்து இருப்பவன் அந்த இடையூறு நேர்ந்த பிறகு தன் பிழையை நினைத்து வருந்துவான்.

இழுக்கியான் - மறந்திருப்பவன்; ஊறு-உற்ற காலத்தில், நேர்ந்தபோது; இரங்கிவிடும்-வருந்துவான்; பின்னூறு இரங்கிவிடும் - என்பதற்குப் பின்னால் வரக்கடவதாகிய நூற்றுக்கணக்கான துன்பங்களால் வருந்த வேண்டிவரும் என்றும் பொருள் கூறலாம். 535

6. இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
வாயின் அதுவொப்பது இல்.

எவரிடத்திலும் எந்தக் காலத்திலும் தவறாமல் எப்பொழுதும் மறவாமை ஆகிய குணம் ஒருவரிடம் பொருந்தி இருத்தல் வேண்டும். அவ்விதம் இருப்பின் அதற்கு ஒப்பான நற்குணம் வேறு ஒன்றும் இல்லை.

இழுக்காமை-மறவாமை; வழுக்காமை-தவறாமை; வாயின் - வாய்த்தால், பொருந்தியிருந்தால்; ஒப்பது-சமமானது. 536

7. அரியஎன்று ஆகாத இல்லைபொச் சாவாக்
கருவியால் போற்றிச் செயின்.

மறவாமை என்னும் கருவி கொண்டு எதனையும் எண்ணிச் செய்தால், செய்வதற்கு அருமையானவை என்று எண்ணிச் செய்யாமல் விட்டு விடவேண்டிய செயல்களே இல்லை.

அரிய - அருமையானவை; பொச்சாவாக் கருவி - மறவாமை என்னும் ஆயுதம்; போற்றி-எண்ணி. 537

**8. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யாது
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்.**

அறிஞர்களால் சிறந்தவை என்று பாராட்டிச் சொல்லப்படும் செயல்களைப் போற்றிச் செய்தல் வேண்டும்; அவ்விதம் செய்யாமல் அவற்றை மறந்தவர்க்கு ஏழு பிறப்புக்களிலும் நன்மை இல்லை. 538

**9. இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.**

ஒருவர் தம்முடைய மகிழ்ச்சியின் மிகுதியாலே தாம் இறுமாந்திருக்கும்போது அவ்வாறு இருந்து அதன் காரணமாக வந்த மனச் சோர்வினால் அழிந்து போனவர்களை எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

இகழ்ச்சி - மனச்சோர்வு; உள்ளுக - எண்ணிப் பார்ப்பாராக; மைந்துறுதல்-இறுமாந்திருத்தல், மறந்திருத்தல், 539

**10. உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளியது உள்ளப் பெறின்.**

ஒருவர் தாம் அடைய எண்ணியதை உள்ளச் சோர்வில்லாமல் நினைந்து வரக்கூடுமானால் அவர் தாம் எண்ணியதை அடைதல் எளிதாகும்.

உள்ளியது-எண்ணியது; எய்தல் - அடைதல்; மன்-அசைநிலை; உள்ள-நினைக்க, இடைவிடாது நினைக்க.

உள்ளச் சோர்வினை ஒழிப்பதற்கு இடைவிடாது நினைத்தல் வேண்டும். 540

## 55. செங்கோன்மை

**1. ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை.**

ஒருவன் செய்த குற்றத்தை ஆராய்ந்து அவன் வேண்டியவன் என்று அவன்மீது தாட்சணயம் காட்டாமல், நடுநிலைமையோடு இருந்து அறிஞர்களோடு கலந்து ஆராய்ந்து செய்யத்தக்கதைச் செய்வதே நீதிமுறை ஆகும்.

ஓர்ந்து - ஆராய்ந்து; கண்ணோடல் - தாட்சண்யம் காட்டல், அருளோடு பார்த்தல்; இறை-அரசன்; இங்கே நடுநிலைமை என்னும் பொருளில் வந்தது; முறை-நீதி.

செங்கோன்மை - செம்மை வாய்ந்த கோல்போல் எத்தகையவர்க்கும் சாயாது நடுநிலைமையோடு இருத்தல். 541

2. வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி.

உலகத்தில் உள்ள உயிர்கள் யாவும் மழையை நோக்கி உயிர் வாழ்கின்றன. நாட்டில் உள்ள குடிகள் எல்லாரும் அரசனுடைய செங்கோலை (நீதி நெறியினை) எதிர் பார்த்தே வாழ்கின்றனர்.

வான்-மழை; உலகு-உலகில் உள்ள உயிர்கள்; கோல்-நீதி நெறி. 542

3. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்.

மேலுலக இன்பத்துக்காக ஞானிகள் எழுதிய தத்துவ நூல்களும், இவ்வுலக இன்பத்துக்காக அறிஞர்கள் இயற்றியுள்ள நீதி நூல்களும் முதற் காரணமாக இருப்பது அரசனுடைய செங்கோலே யாகும்.

அந்தணர் - செந்தண்மை உடையவர், ஞானிகள்; அந்தணர் நூல்-ஞான நூல்; அறம்-நீதி நூல். 543

4. குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு.

குடிமக்களை அன்போடு தழுவிக் கொண்டு செங்கோல் செலுத்துகின்ற பேரரசனுடைய பாதங்களைத் தமக்கு அடைக்கலமாகப் பற்றிக் கொண்டு உலகில் உள்ள உயிர்கள் யாவும் நிலைத்து வாழும்.

அடிதழீஇ-பாதங்களைத் தமக்கு அடைக்கலமாகக் கொண்டு. (கடவுளுக்குச் சமமாக எண்ணி என்பது பொருள்.) 544

5. இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு.

நீதிநெறிப்படி செங்கோல் செலுத்தும் அரசனுடைய நாட்டிலே பருவ மழையும், குறையாத விளைச்சலும் ஒன்று சேர்ந்து உள ஆகும்.

இயல்புளி-இயல்பால்; நாட்ட-நாட்டிலே உள; பெயல்-காலந்தவறாது பொழியும் பருவ மழை; விளையுள்-விளைச்சல்; தொக்கு-ஒன்று சேர்ந்து. 545

6. வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடா தெனின்.

மன்னனுக்குப்போரின்கண் வெற்றியைத்தருவது அவன் எறியும் வேல் அன்று; ஆட்சிக் கோலே ஆகும். ஆனால், அக்கோலும் கொடுங்கோலாக இராமல் நேர்மையான செங்கோலாக இருத்தல் வேண்டும்.

கோடாது எனின்-கோணாமல் இருக்குமானால். 546

7. இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்.

உலகத்தையெல்லாம் அரசன் காப்பாற்றுவான்; அவன் நீதிமுறை தவறாது ஆட்சி புரிவானானால் அவனை அவன் ஆட்சி முறையே காப்பாற்றும்.

இறை-அரசன்; வையகம்-உலகம்; முறை-அரசாட்சி; மூட்டுதல்-தடைப்படுதல்; முட்டாச்செயின்-நீதி முறைக்குத் தடை நேரும்போது அத்தடை நேராவண்ணம் ஆட்சி புரிதல். 547

8. எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும்.

தம் குறைகளைத் தெரிவிக்க விரும்புகின்றவர்கள் எளிதில் பார்த்துப் பேசத்தக்க நிலையில் இருப்பவனாகி அவர்கள் குறையினை ஆராய்ந்து பாராமல் நீதிமுறை தவறி நடக்கின்ற அரசன், தாழ்ந்த நிலையை அடைந்தவனாகித் தானே அழிந்து போவான்.

எண்பதத்தான் - எவரும் எளிதில் வந்து தம் குறைகளைச் சொல்லக்கூடிய வகையில் எளிமையாக இருப்பவன், ஓரா - ஆராய்ந்து பாராது; முறை செய்யா - நீதிமுறை செய்யாது; தண்பதம் - தாழ்ந்த பதவி; தானே கெடும் - பகைவரில்லாமலேயே தானே அழிந்து போவான். 548

9. குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்.

குடி மக்களைப் பிறர் துன்புறுத்தாதபடி காத்து, தானும் அவர்களை வருத்தாமல் காப்பாற்றிக் குற்றம் செய்தால் அக்குற்றத்துக்குத் தக்க வண்ணம் தண்டனை விதித்து அக்குற்றத்தைப் போக்குதல் அரசனுக்கும் பழி ஆகாது; அது அவன் கடமையே ஆகும்.

புறங்காத்தல் - காப்பாற்றுதல்; ஓம்புதல் - காப்பாற்றுதல், அதாவது காத்தல்; குற்றம் கடிதல்-குற்றத்துக்குத் தக்க தண்டனை விதித்து அக்குற்றத்தை ஒலித்தல்; வடு-பழி, குற்றம். 549

10. கொலையிற் கொடியாரை வேந்துஒறுத்தல்
களைகட் டதனோடு நேர். [பைங்கூழ்

எந்த வகையினாலும் திருத்த முடியாமல் மிகவும் கொடியவர்களாய் இருப்போரை அரசன் கொலைத் தண்டனை மூலம் தண்டித்தல், உழவன் நெற்பயிரைக் காப்பாற்றுவதற்காகக் களையைப் பிடுங்கி எறிவதற்குச் சமம் ஆகும்.

ஒறுத்தல்- தண்டித்தல்; பைங்கூழ்-நெற்பயிர்; களை கட்டல் - இடையூறாக இருப்பவர்களைப் போக்குதல்; நேர் - சமம். 550

## 56. கொடுங்கோன்மை

1. கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்
அல்லவை செய்தொழுகும் வேந்து. [கொண்டு

குடிகளை வருத்தும் தொழிலை மேற்கொண்டு நீதி அல்லாத செயல்களைச் செய்து ஒழுகும் அரசன் கொலைத் தொழிலைச் செய்வோரினும் கொடியவன் ஆவான்.

*அலை-வருத்துதல்; அல்லவை-நீதி அல்லாதவை.*

*கொலை செய்வோரால் நேரும் துன்பம் ஒரு பொழுதே ஆகும். கொடுங்கோலரசனால் என்றும் துன்பம் ஆதலின் கொலை மேற்கொண்டாரினும் கொடுங்கோல் வேந்தன் கொடியவனாவான்.* 551

**2. வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்**
**கோலொடு நின்றான் இரவு.**

*ஆட்சிக் கோலைக் கையில் ஏந்திய அரசன் கொடுங் கோலனாய்க் குடிகளைப் 'பொருள் தா' என்று வேண்டிக் கேட்டல், வேல் ஏந்தி நிற்கும் ஆறலைக் கள்வன் வழிச் செல்வோரைப் 'பொருள் கொடு' என்று அச்சுறுத்திக் கேட்கும் செயலைப் போன்றதாகும்.*

*இடு-தா, கொடு; இரவு-வேண்டிக் கேட்டல்.* 552

**3. நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்**
**நாடொறும் நாடு கெடும்.**

*ஒவ்வொரு நாளும் தன் ஆட்சியில் ஏற்படும் குற்றங் குறைகளை ஆராய்ந்து ஆட்சி செலுத்தாத அரசன் நாள் தோறும் தன் நாட்டினை இழந்து கொண்டே வருவான்.* 553

**4. கூழும் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச்**
**சூழாது செய்யும் அரசு.**

*அமைச்சர், அறிஞர் முதலானவர்களோடு கலந்து ஆலோசிக்காமல் நீதிநெறி தவறி எதையும் செய்யும் அரசன் பொருளையும், குடிகளையும் ஒரே சமயத்தில் இழந்து விடுவான்.*

*கூழ்-பொருள்; ஒருங்கு-ஒரே சமயத்தில்; கோல்கோடி-நீதிநெறி தவறி; சூழாது-கலந்து ஆலோசிக்காமல்; (தானே எண்ணிப் பாராமல் என்றும் கூறலாம்)* 554

**5. அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே**
**செல்வத்தைத் தேய்க்கும் படை.**

*அரசனது கொடுங்கோல் ஆட்சியால் துன்பப்பட்டு அத்துன்பத்தைத் தாங்கமுடியாமல் அழுது சிந்தும் குடி*

மக்களின் கண்ணீர்த் துளிகளே, அந்த அரசனது செல்வத்தைத் தேய்த்து அழிக்கும் ஆயுதம் ஆகும்.

அல்லல் - துன்பம்; ஆற்றாது - தாங்கமுடியாமல்; படை - ஆயுதம். 555

**6. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதின்றேல்
மன்னாவாம் மன்னர்க் கொளி.**

அரசர்க்கு நிலைபேறுடைய புகழைத் தருவது அவர் தம் நீதி வழுவாத செங்கோல் முறைமையே யாகும். அந்தச் செங்கோல் முறைமை இல்லையானால் அவர்க்குப் புகழ் நிலைபெறாமற் போய்விடும்.

மன்னுதல் - நிலைபெற்றிருத்தல்; மன்னா - நிலைபெறாதனவாம்; ஒளி - புகழ். 556

**7. துளியின்மை ஞாலத்திற்கு எற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு.**

மழை இல்லாமை இவ்வுலகில் வாழும் உயிர்கட்கு எத்துணைய துன்பத்தைத் தரும்? அவ்வாறே ஓர் அரசன் கீழ் வாழும் குடிகட்கு அவன் அருள் இல்லாதிருப்பது துன்பத்தைத் தரும்.

துளி — மழைத்துளிகள்; ஞாலம் - உலகம், இங்கே உலகில் உள்ள உயிர்களைக் குறிக்கும்; அளி-கருணை. 557

**8. இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.**

நீதி முறைப்படி ஆட்சிபுரியாத கொடுங்கோல் அரசன் கீழ் வாழ நேர்ந்தால், பொருள் அற்ற வறுமை நிலையைவிடச் செல்வத்தைப் பெற்றிருக்கும் நிலை மிகவும் துன்பமானது.

இன்மை - பொருள் இன்மை, வறுமை; இன்னாது துன்பம் தருவது; உடைமை - பொருள் உடைமை. 558

**9. முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்.**

அரசன் ஒழுங்கு தவறி ஆட்சி செய்தால் பருவ மழையானது தவறி மேகம் மழை பொழிதலைச் செய்யாது.

முறை-ஒழுங்கு, ஆளும் நெறி; உறை - மழை; கோடி-தவறி; வானம்-மேகம்; பெயல் ஒல்லாது-பெய்தலைச் செய்யாது. கொடுங்கோல் ஆட்சியினால் இயற்கை நியதிகளும் மாறிவிடும் என்பது கருத்து. 559

10. ஆபயன் குன்றும்; அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின்.

அரசன் குடிமக்களை முறைப்படி காவாவிட்டால் பசுக்கள் பால் தருவது சுருங்கிவிடும் ; அந்தணர்களும் அற நூல்களை மறந்துவிடுவர்.

ஆ பயன் – பசுவினிடமிருந்து பெறப்படும் பால் ஆகிய பயன்; குன்றும் - குறையும்; அறுதொழிலோர் - அந்தணர்; நூல்-அறநூல் அல்லாத வேதம்.

ஆ பயன் என்பதற்கு முயற்சியால் ஆகும் பயன் என்றும் பொருள் கூறுவர். 'அறிதொழிலோர்' என்றும் பாடபேதம் உண்டு. அறிதொழிலோர் என்பதற்கு ஓதி அறியும் தொழிலையுடைய புலவர் என்றும் பொருள் சொல்லுவர். 560

## 57. வெருவந்த செய்யாமை

1. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து.

ஒருவன் குற்றம் செய்யின் அந்தக் குற்றத்துக்குத் தகுந்தபடி ஆராய்ந்து பார்த்து மீண்டும் அவன் குற்றம் செய்யாதபடி அந்தக் குற்றத்துக்கு ஏற்ப அவனைத் தண்டிப்பவனே அரசன் ஆவான்.

தக்காங்கு - தகுந்தபடி; நாடி ஆராய்ந்து பார்த்து; தலைச் செல்லாவண்ணம் - மீண்டும் அக்குற்றத்தை அவன் செய்யாதபடி; ஒத்தாங்கு - பொருந்திய வகையில், ஏற்றபடி ; ஒறுத்தல் - தண்டித்தல்.

வெருவந்த செய்யாமை - அஞ்சத்தக்க செயல்களைச் செய்யாதிருத்தல். 561

2. கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்.

செல்வம் தம்மிடம் நெடுங்காலம் நீங்காமல் இருக்க விரும்புகின்றவர், குற்றம் செய்தோரைத் தண்டிக்கத் தொடங்கும்போது அளவு கடந்த தண்டனையை அளிக்கப் ஓங்குவது போல் தொடங்கிக் குறைவாகத் தண்டித்தல் வேண்டும்.

கடிது ஓச்சல் - கோபத்தால் வேகமாகக் கோலினை கையில் உயர்த்திப் பிடித்தல்; மெல்ல எறிதல் - அளவில் மீறாத படி தண்டித்தல்; ஆக்கம் – செல்வம். 562

3. வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன் ஆயின்
ஒருவந்தம் ஒல்லை கெடும்.

குடிகள் அஞ்சத்தக்க கொடிய செயல்களைச் செய்து ஆட்சி புரியும் கொடுங்கோல் அரசனாக ஒருவன் இருப்பானேயானால், அந்த அரசன் நிச்சயமாக விரைவிலேயே அழிந்துபோவான்.

வெருவந்த-அச்சம் தரும் செயல்கள் ; வெங்கோலன்-கொடுங்கோல் மன்னன்; ஒருவந்தம் - நிச்சயமாக. 563

4. இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல் [வேந்தன்
உரைகடுகி ஒல்லைக் கெடும்.

'இந்த அரசன் கொடியவன்' என்று பலராலும் (வயிறெறிந்து) கூறப்படும் பழிச் சொல்லுக்குக் காரணமான அரசன், தன் வாழ்நாள் குறைந்து விரைவிலேயே இறந்துபடுவான்.

இன்னாச்சொல் – பழிச்சொல், துன்பம் தரும் சொல்; உறை-வாழ்நாள், ஆயுட்காலம் ; கடுகுதல்-விரைதல். 564

5. அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண்டு அன்னது உடைத்து.

எளிதில் காணமுடியாத நிலைமையினையும், காண நேரினும் சிடுசிடுப்பான முகத்தினையும் உடைய ஒருவனது பெரிய செல்வம், பேயினால் காக்கப்பட்ட செல்வத்தைப் போன்று எவர்க்கும் பயன்படாத தன்மையுடையதாய் இருக்கும்.

அருஞ் செவ்வி - காண்பதற்கு அருமையான காலம், கண்டு பேசமுடியாத தன்மை ; இன்னா முகம் - இனிமை யற்ற முகம், சிடுசிடுப்பான முகம்; பேய் கண்டன்னது - பேயால் காக்கப்படும் செல்வம் போன்றது. 565

**6.** **கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின்**
**நீடின்றி ஆங்கே கெடும்.** **[நெடுஞ்செல்வம்**

ஒருவன் கடுமையான சொற்களைச் சொல்லு பவனாகவும், தாட்சண்யம் சிறிதும் இல்லாதவனாகவும் இருந்தால், அவனுடைய பெரிய செல்வம் நீடித்தல் இன்றி அப்போதே அழிந்து விடும்.

கண்ணிலன் - கண்ணோட்டம் இல்லாதவன்; கண்ணோட்டம் - தாட்சண்யம். 566

**7.** **கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்**
**அடுமுரண் தேய்க்கும் அரம்.**

கடுமையான சொல்லும், அளவுக்கு மீறிய தண்டனை யும் அரசனுடைய பகைவரை வெல்லும் வன்மையைத் தேய்க்கும் அரம் ஆகும்.

கையிகந்த - அளவுக்கு மேற்படுதல் ; தண்டம்- தண்டனை ; அடுமுரண் - (பகைவரை) வெல்லும் வலிமை. 567

**8.** **இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்**
**சீறின் சிறுகும் திரு.**

ஓர் அரசன் தனக்கு இன்பமாக உள்ள அமைச்சர், சேனைத் தலைவர், பிற அறிஞர்கள் ஆகிய இவர்களோடு கலந்து ஆராயாமல் தனக்குள்ள சினத்தையே துணையாகக் கொண்டு பிறர்மேல் சீறி விழுவானானால் அவன் செல்வம் நாளடைவில் சுருங்கிவிடும்.

இனம்-மந்திரி, புரோகிதர், சேனாதிபதி, தூதர், சாரணர் ஆகிய ஐவகை அரசியல் தலைவர்கள் ; ஆற்றி எண்ணுதல் - கலந்து ஆராய்தல் ; சிறுகும்-சுருங்கும். 568

**9.** **செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்**
**வெருவந்து வெய்து கெடும்.**

போர் செய்ய நேர்ந்தபோது தன் பகைவனை வளைத்துச் சென்ற அரசன் முதலில் தனக்கு அரண் அமைத்துக் கொள்ளாமல் இருப்பானேயானால் போதிய பாதுகாவல் இன்மையால் பகைவனைக் கண்டு அஞ்சி விரைவில் அழிவான்.

அரசன் தன் நாட்டில் முன்னதாகவே மதில், அரண், நீர் அரண் முதலிய பலவகை அரண்களையும் வகுத்துக் கொள்ளாவிடின் திடுமெனப் போர் நேர்ந்தபோது போதிய பாதுகாவல் இல்லாமையால் அச்சமுற்று விரைவில் அழிவான் என்றும் பொருள் கொள்ளலாம்.

செரு - போர்; சிறை செய்யா - அரண் அமைத்துக் கொள்ளாது; வெருவந்து - (பகைவனைக் கண்டு) அஞ்சி; வெய்து - விரைவில். 569

**10. கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது
இல்லை நிலக்குப் பொறை.**

கொடுங்கோல் அரசன் கல்வி அறிவு சிறிதும் இல்லாதவர்களைத் தன் கொடிய ஆட்சிக்குத் துணையாகச் சேர்த்துக் கொள்வான். அந்தக் கூட்டத்தினரை அல்லாமல் பூமிக்குப் பாரம் வேறு வேண்டியதில்லை.

கொடுங்கோல் அரசனும் கல்வியறிவு இல்லாத அவன் சுற்றமும் ஆகிய அக்கூட்டம் பூமிக்குப் பாரமே அன்றி வேறு எதற்கும் பயன் இல்லை என்பது பொருள்.

பிணித்தல் துணையாகச் சேர்த்துக் கொள்ளல்; நிலக்குப் பொறை - பூமிக்குப் பாரம். 570

## 58. கண்ணோட்டம்

**1. கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை
உண்மையான் உண்டிவ் வுலகு.**

கண்ணோட்டம் என்று சொல்லப்படுகின்ற மிகச் சிறந்த அழகு இருக்கும் காரணத்தால் இந்த உலகம் நிலை பெற்றிருக்கின்றது.

கண்ணோட்டம் - தாட்சண்யம் ; கழி - மிகுதி ; கழி பெரும் - மிகச் சிறந்த ; காரிகை – அழகு.

இந்த உலகம் தாட்சண்யத்துக்குக் கட்டுபட்டது என்பது கருத்து. 571

2. கண்ணோட்டத் துள்ளது உலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.

கண்ணோட்டத்தினால்தான் இந்த உலக ஒழுக்கம் தடைபெற்று வருகின்றது. கண்ணோட்டம் சிறிதும் இல்லாதவர் இவ்வுலகத்தில் இருத்தல் இந்தப் பூமிக்கே ஒரு பெரிய பாரம்.

உலகியல் - உலக ஒழுக்கம், உலக ஒழுங்கு; உண்மை - இருத்தல், உயிர் வாழ்ந்திருத்தல். 572

3. பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல் கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண்.

பாட்டோடு பொருந்துதல் இல்லாவிட்டால் இசையினால் என்ன பயன்? அதுபோலக் கண்ணோட்டம் இல்லாதபோது கண்ணாலும் பயன் இல்லை.

பண் - இசை; இயைபு - பொருந்துதல்; இல்லாத கண் - இல்லாதபோது. 573

4. உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண்.

வேண்டிய அளவு தாட்சண்யம் இல்லாத கண்கள் முகத்தில் உள்ளவை போலத் தோற்றம் அளித்தல் அல்லாமல் வேறு என்ன நன்மையைச் செய்யும்? அவற்றால் எவ்வித நன்மையும் இல்லை.

கண்ணோட்டம் இல்லாத கண்கள் இருந்தும் பயன் இல்லை. 574

5. கண்ணிற்கு அணிகலன் கண்ணோட்டம் அ∴தின்றேல்
புண்ணென்று உணரப் படும்.

ஒருவருடைய கண்ணுக்கு ஆபரணம் போன்று அழகினைத் தருவது கண்ணோட்டம் என்னும் குணமே ஆகும். அஃது இல்லையானால் அது கண் அன்று புண் என்றே கருதப்படும்.

அணிகலம் - ஆபரணம். 575

6. மண்ணோடு இயைந்த மரத்தனையர் கண்ணோடு
இயைந்துகண் ணோடா தவர்.

[illegible] பெற்றிருந்தும் அதற்குரிய தாட்சண்யம் [illegible] கண்ணோட்டம் இல்லாதவர், மண்ணோடு [illegible] மரத்துக்குச் சமம் ஆவர்.

[illegible] யிருக்கின்ற மரத்துக்கும் [illegible] இருக்கின்றன. அந்தக் கணுக்கள் [illegible] காட்சி அளிப்பினும் கண்ணுக் [illegible] இல்லாதவை. ஆதலின் இந்த [illegible] ஆகும்.

'[illegible] இயைந்த மரத்தனையர்' என்பதற்குச் [illegible] மரம் போன்றவர் என்றும், [illegible] முதலியவைகளால் செய்யப்பெற்ற [illegible] மரப்பாவை போன்றவர் என்றும் [illegible] உளர். 576

7. கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர்
கண்ணோட்டம் இன்மையும் இல். [கண்ணுடையார்

[illegible] இல்லாதவர்கண்ணில்லாதவரே ஆவர்; [illegible] கண்ணுடையவர் கண்ணோட்டம் இல்லா [illegible].

[illegible] கண்ணோட்டத்துக்கும் உள்ள நெருங்கிய [illegible] விளக்கப்படுகிறது. 577

8. கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்திவ் வுலகு.

[illegible] வழுவாமல் கண்ணோட்டம் உடைய [illegible] வல்லவருக்கு இவ்வுலகம் உரியதாகின்றது.

[illegible] கண்ணோட்டம் செய்தல் [illegible]. தாட்சண்யம் காட்டுதலில் நண்பன், அயலான் [illegible] கூடாது. கண்ணோட்டம் கருதித் தாம் [illegible] செயலிலும் தவறுதல் கூடாது. இத்தகை [illegible] நெடுங்காலம் உரிமையோடு வாழத் தகுதியுடையவர் ஆவர். 578

9. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

தம்மைத் துன்புறுத்தும் குணமுடைய மிகவும் கொடிய வரிடத்தும் அவர் புரியும் குற்றத்தைப் பொறுத்துக் கண்ணோட்டம் உடையவராய் இருத்தலே தலைசிறந்த குணம் ஆகும்.

ஒறுத்தாற்றுதல் - துன்புறுத்தல்; பொறுத்து ஆற்றும் பொறுமையோடு இருந்து கண்ணோட்டம் புரியும். 579

10. பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

எல்லாராலும் விரும்பத்தக்க நாகரிகமான கண்ணோட்டத்தை விரும்புகின்றவர். தம் கண்களுக்கு எதிரிலே மதிக்கத்தக்க ஒருவர் விடத்தினைக் குவளையில் பெய்து உண்ணும்படி தம்மை வேண்டிக் கொண்ட போதும் அந்த வேண்டுதலை எப்படி மறுப்பது என்று எண்ணி அவர் தந்த விடத்தை உட்கொண்டு அவரிடம் மன அமைதியோடு இருப்பர்.

நஞ்சு - விடம்; அமைவர் - மன அமைதியோடு இருப்பர்; நயத்தக்க-பலராலும் விரும்பத்தக்க; நாகரிகம் - மரியாதை, கண்ணோட்டம், தாட்சண்யம். 580

## 59. ஒற்றாடல்

1. ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்.

ஒற்றரும், புகழமைந்த நீதிநூலும் ஆகிய இவை இரண்டனையும் அரசன் தன் இரண்டு கண்களாகத் தெளிதல் வேண்டும்.

ஒற்றன் - பகைவர், அயலார், நண்பர் என்னும் மூன்று வகையினரிடத்தும் நிகழும் செய்திகளைத் தெரிந்து கொள்வதற்கு அரசனால் அனுப்பப்படும் வேவுகாரன்; ஒற்று - உளவு; இங்கே உளவறிந்து சொல்லும் ஒற்றனைக் குறிக்கும்; உரைசான்ற - புகழ் அமைந்த; தெற்றென்க - தெளிக.

ஒற்று ஊனக்கண்ணும் உரைசான்ற நீதிநூல் ஞானக் கண்ணும் ஆகும் என்க. 581

2. எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில்.

எல்லாரிடத்திலும் நிகழ்கின்ற எல்லாவற்றையும் ஒற்றரால் முறையாக எப்போதும் விரைந்து அறிந்து கொள்ளுதல் அரசனுக்கு உரிய தொழிலாகும்.

எஞ்ஞான்றும் - எப்போதும்; ஞான்று - பொழுது; வல்லறிதல் - விரைவில் அறிந்துகொள்ளுதல்; எல்லாரிடத்திலும் என்பது சுற்றத்தார், பகைவர், அயலார், நண்பர் என்னும் நால்வகையினரையும் குறிக்கும். 582

3. ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றம் கொளக்கிடந்தது இல்.

ஒற்றன் வாயிலாக நாட்டில் நிகழும் செய்திகளை யெல்லாம் மறைவாக இருந்து அறிந்து, அவற்றின் பயனை ஆராய்ந்து உணராத அரசன் வெற்றி பெறத்தக்க வழி யாதும் இல்லை.

ஒற்றினான் - ஒற்றன் வாயிலாக; ஒற்றி - மறைவாகக் கேட்டறிந்து; கொற்றம் - வெற்றி. 583

4. வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
அனைவரையும் ஆராய்வது ஒற்று.

அரச காரியஞ் செய்பவர், அரசனுக்கு நெருங்கிய சுற்றத்தினராய் உள்ளவர், பகைவர் என்று சொல்லப்பட்ட அனைவரையும் ஆராய்வோனே ஒற்றன் ஆவான். 584

5. கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று.

பிறர் சந்தேகப்படாத வேடத்தோடு, பிறர் சந்தேகம் கொண்டு பார்க்க நேரினும் அதற்குச் சிறிதும் அஞ்சாது, எத்தகைய சமயத்திலும் தன் மனத்தில் உள்ளதை வெளிப் படுத்தாமல் இருக்க வல்லவனே ஒற்றன் ஆவான்.

கடாஅ உருவொடு - இவர் யார் என ஐயுற்று வினவாத வடிவத்தோடு, வேடத்தோடு; கண்ணஞ்சாது - சந்தேகம் கொண்டு பார்க்கும் கண்களுக்குச் சிறிதும் அஞ்சாமல்; உகாஅமை - உமிழாமை, இங்கே சொற்களை வெளி யிடாமை என்பது பொருள். 585

**6. துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந்து
என்செயினும் சோர்விலது ஒற்று.**

துறவிகளின் கோலம் தாங்கி, உட்செல்லுவதற்கு அரிய இடங்களில் எல்லாம் சென்று ஆராய்ந்து, பகைவர் தன்மீது சந்தேகம் கொண்டு எவ்வளவு துன்புறுத்தினாலும் சோர்வடைந்து தன்னை வெளிப்படுத்தாதவனே ஒற்றன் ஆவான்.

துறந்தார் - துறவிகள்; படிவம் - வேடம், கோலம்; இறந்து ஆராய்தல் - உட்செல்லுதற்கு அரிய இடங்களில் எல்லாம் சென்று ஆராய்தல். 586

**7. மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
ஐயப்பாடு இல்லதே ஒற்று.**

மறைவாகப் பிறர் புரிந்த செயல்களையும் பிறர்பால் கேட்டு அறிய வல்லவனாய், அவ்விதம் அறிந்து செய்திகளைச் சந்தேகம் இல்லாமல் ஆராய்ந்து தெளிந்து துணிய வல்லவனே ஒற்றன ஆவான்.

மறைந்தவை - மறைவாகச் செய்யும் செயல்கள்; கேட்க வற்றாகி - கேட்டறிய வல்லவனாகி. 587

**8. ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்.**

ஓர் ஒற்றன் மறைவாக இருந்து கேட்டு அறிந்து வந்த செய்தியை மற்றுமோர் ஒற்றனாலும் அறிந்து ஒப்புமை கண்ட பின்பு உண்மை என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

ஒற்று ஒற்றித் தந்த பொருள் - ஒற்றன் மறைவாக இருந்து கேட்டு அறிந்து வந்த செய்தி; ஒற்றிக் கொளல் - கேட்டறிந்து ஒத்துப் பார்த்து உண்மை அறிக. 588

**9. ஒற்றொற்று உணராமை ஆள்க உடன்மூவர்
சொல்தொக்க தேறப் படும்.**

ஓர் ஒற்றனை மற்றோர் ஒற்றன் அறியாதபடி அனுப்பி ஆளுதல் வேண்டும். அங்ஙனம் ஒன்றைப் பற்றி ஆயத் தனித்தனியே மூன்று ஒற்றர்களை அனுப்பி அம்மூவரும் அறிந்து வந்த செய்திகள் ஒத்திருந்தால் அச்செய்தி உண்மையானது என்று தெளிதல் வேண்டும். 589

10. சிறப்பறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்
புறப்படுத்தா னாகும் மறை.

ஒற்றர்கட்குச் செய்யும் சிறப்புக்களைப் பலரும் அறியும் வண்ணம் வெளிப்படையாகச் செய்தல் கூடாது. அப்படிச் செய்தால் அந்த அரசன் தன் இரகசியச் செய்திகளைத் தானே வெளிப்படுத்தியவன் ஆவான்.

சிறப்பு - பரிசு, பட்டம் முதலியன அளித்தல்; புறப்படுத்தான் - பலரும் அறியச் செய்தவன்; மறை - இரகசியச் செய்திகள். 590

## 60. ஊக்கம் உடைமை

1. உடையரெனப்படுவது ஊக்கம் அஃதில்லார்
உடையது உடையரோ மற்று.

ஒருவர் 'உடையவர்' என்று சிறப்பித்துச் சொல்லப்படுவதற்கு உரியதாய் இருப்பது ஊக்கம் என்பதே ஆகும். அந்த ஊக்கம் என்பதை ஒருவர் பெற்றில்லாமல் வேறு எதைப் பெற்றிருந்தாலும் பெற்றிருப்பவர் ஆகமாட்டார்.

உடையவர் - பெற்றிருப்பவர்; ஊக்கம் - மனச் சோர்வு இல்லாமல் உள்ளக் கிளர்ச்சியோடு ஒரு வேலையைச் செய்வதற்கு ஏற்றதாய் இருக்கும் தன்மை. 591

2. உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

ஒருவருக்கு ஊக்கம் என்னும் உள்ளக் கிளர்ச்சியே உடைமையாகும். பொருள் உடைமை நிலை பெற்று இராது, நீங்கிப் போய்விடும்.

உள்ளம் - மனம்; இங்கே உள்ளத்திலிருந்து உண்டாகும் ஊக்கம் என்னும் குணத்தைக் குறிக்கும். 592

3. ஆக்கம் இழந்தேமென்று அல்லாவார் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார்.

நிலைபெற்ற ஊக்கத்தைத் தம் கைப்பொருளாக உடையவர் செல்வம் இழந்தபோது அதனை இழந்துவிட்டதாக வருத்தப்பட மாட்டார்.

ஆக்கம் - செல்வம்; அல்லாவார் - வருந்தார்; ஒருவந்தம் - நிலைபேறு; கைத்து - கைப்பொருள். 593

4. ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்க முடையான் உழை.

தளர்ச்சியில்லாத ஊக்கம் உடையவனிடம் செல்வமானது தானே அவன் உள்ள இடத்துக்கு வழி கேட்டுக் கொண்டு செல்லும்.

அதர் - வழி; வினாய் - வினவி; அசைவு இலா - உள்ளத் தளர்ச்சி இல்லாத; உடையான் உழை - உடையானிடம். 594

5. வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு.

நீர்ப் பூக்களின் தாளின் நீளம் அவை நிற்கும் நீரின் அளவினதாக இருக்கும்; அதுபோல் மக்களின் உயர்வு அவர் தம் ஊக்கத்தின் அளவினதாகும்.

மலர் நீட்டம் - பூக்களின் தாள் நீட்சி; மாந்தர் - மக்கள். 595

6. உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து.

நினைப்பதெல்லாம் உயர்வுடையதாகவே இருத்தல் வேண்டும். ஊழ்வலியினால் அது முடியாமற் போனாலும் அந்த எண்ணம் இகழப்படாத தன்மையுடையது.

அது தள்ளினும் - அந்த எண்ணம் முடியாமற் போனாலும்; 'ஊழ்வினை' தடுத்தாலும், என்றும் கொள்ளலாம். 596

7. சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றும் களிறு.

யானையானது தன் உடம்பிலே புதையுண்ட அம்புத் தொகுதிகளால் புண்பட்டு இருந்தாலும் சிறிதும் தளர்ச்சியடையாமல் தன் பெருமையை நிலைநாட்டும்; அதுபோல

ஊக்கம் உடையவர் தாம் எண்ணிய உயர்வுக்கு அழிவு வந்த போதும் உள்ளத் தளர்ச்சியடையாமல் தம் பெருமையை நிலைநாட்டுவர்.

உரவோர் - உள்ள வலிமையுடையோர், ஊக்கம் உடையோர்; பாடூன்றும் – பெருமையை நிலை நிறுத்தும்; களிறு - ஆண் யானை. 597

8. உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னும் செருக்கு.

இவ்வுலகத்தாருள் யாம் வண்மையுடையோம் என்று எண்ணி மகிழும் பெருமிதத்தினை ஊக்கம் இல்லாதவர் அடையமாட்டார்.

வள்ளியம் - வண்மையுடையோம்; வண்மை - ஈகைக் குணம்; செருக்கு - பெருமிதம். 598

9. பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

யானையானது பருத்த உடம்பினையுடையது; அன்றி கூர்மையான கொம்புகளையும் உடையது. அவ்விதம் இருந்தும் (ஊக்க மிகுதியினையுடைய) புலி தாக்கினால் அந்த யானை அஞ்சும்.

மிக்க உடல் வலியும், ஆயுதங்களின் சிறப்பும் உடைய ராயினும் ஊக்கம் இலராயின் அஞ்சுவர் என்பது பொருள்.

பரியது - பருத்த உடம்பினையுடையது; கோட்டது - கொம்பினை யுடையது; வெரூஉம் - அஞ்சும். 599

10. உரமொருவற்கு உள்ள வெறுக்கைஅஃ தில்லார்
மரமக்கள் ஆதலே வேறு.

ஒருவனுக்கு வலிமையாவது ஊக்கமிகுதியே ஆகும்; அவ்வூக்கம் இல்லாதவர் மரங்களுக்குச் சமமே ஆவர்; அவருக்கும் மரங்கட்கும் உள்ள வேறுபாடு உருவ வேறுபாடே ஆகும்; வேறு வேறுபாடு இல்லை.

உரம் - வலிமை; உள்ள வெறுக்கை - ஊக்க மிகுதி; வெறுக்கை - மிகுதி; மக்கள் ஆதலே வேறு - மரங்களுக்கும் இந்த மனித மரங்களுக்கும் உள்ள வேறுபாடு உருவ வேறுபாடே அன்றிப் பிறிது இல்லை.

நல்ல அறிவும் தொழில் முயற்சியும் இல்லாமையால் இவர் மரங்கட்குச் சமம் ஆவர் என்பது பொருள். 600

## 61. மடி இன்மை

1. குடியென்னும் குன்றா விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்.

ஒருவன் பிறந்த குடும்பமாகிய மங்காத விளக்கு அவனுடைய சோம்பலாகிய மாசு மேல்மேல் படிய ஒளி மங்கி முடிவில் அணைந்து போகும்.

குடி - குடும்பம்; குன்றா விளக்கம் - மங்காத ஒளி விளக்கு, குறைவில்லாத ஒளி; மடி - சோம்பல்; மாசு - குற்றம், புகை, சிட்டம் முதலியன; ஊர - மேன்மேல் படிய; மாய்தல் - அழிதல். 601

2. மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

தாம் பிறந்த குடும்பத்தை மேன்மேலும் சிறப்புடைய குடும்பமாகச் செய்ய விரும்புகின்றவர் சோம்பலைச் சோம்பாமல் ஒழிக்க முயலுதல் வேண்டும்.

மடி - சோம்பல்; மடியா - சோம்புதல் இல்லாமல்; 'மடியா' என்பதற்கு மடித்து அல்லது கெடுத்து என்றும் பொருள் கூறலாம்; ஒழுகல் - நடத்துவாராக; குடியாக - சிறந்த குடும்பமாக. 602

3. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியும் தன்னினும் முந்து.

சோம்பலைத் தன்னிடம் கொண்டு ஒழுகும் அறிவில்லாதவன் பிறந்த குடும்பம் அவன் அழிவதற்கு முன்னதாகவே அழிந்துவிடும்.

மடிமடிக் கொண்டு - சோம்பலைத் தன் மடியில் கொண்டு; பேதை - அறிவில்லாதவன். 603

4. குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு.

சோம்பலில் ஆழ்ந்து சிறந்த முயற்சி இல்லாதவராய் இருந்து வருபவர்க்குத் தம் குடும்பத்தின் பெருமை அழிந்து குற்றமும் அதிகப்படும்.

மடிதல் - அழிதல், ஆழ்தல்; மாண்பு - சிறந்த; உஞற்று இலவர்க்கு - முயற்சி இல்லாதவர்க்கு. 604

5. நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்.

விரைந்து செய்யவேண்டியதை நீடித்துச் செய்தலும், மறதியும், சோம்பலும், அளவுக்கு மீறிய தூக்கமும் ஆகிய இந்த நான்கு குணங்களும் கெட்டு அழியும் தன்மை வாய்ந்தவர்கள் விரும்பி ஏறும் மரக்கலமாகும்.

நெடுநீர் - காலம் நீடித்துச் செய்யும் குணம்; கெடுநீரார் - கெட்டு அழியத்தக்க தன்மை வாய்ந்தவர்; காமம்- விருப்பம், கலம் - மரக்கலம், கப்பல்.

'காமக்கலன்' என்பதற்கு 'விரும்பிப் பூணும் ஆபரணம்' என்றும் பொருள் கூறுவர். 605

6. படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடியுடையார்
மாண்பயன் எய்தல் அரிது.

இந்தப் பெரிய உலகத்தையே தமக்கு உரிமையானதாகக் கொண்ட ஒரு பேரரசரின் உறவு வலிய வந்து சேர்ந்த காலத்திலும் சோம்பலையுடையவர் அந்தச் சேர்க்கையினால் சிறந்த பயனை அடைதல் அரிது.

படி - பூமி; பற்று - உறவு (செல்வம் என்றும் பொருள்); மாண்பயன் - பெரும்பயன்; எய்தல் - அடைதல்.

படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் என்பதற்கு இந்த உலகம் முழுவதும் ஒரு குடையின் கீழ் வைத்து ஆண்ட அரசரது செல்வம் தாமே வந்து சேர்ந்தாலும் என்றும் பொருள் கூறலாம். 606

7. இடிபுரிந்து எள்ளுஞ்சொல் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர்.

சோம்பியிருத்தலை விரும்பிச் சிறந்த முயற்சியைப் புரியாதவர் பிறர் இடித்துக் கூறி இகழ்ந்துரைக்கும் சொல்லையும் கேட்பதற்கு உரியவராய் இருப்பர்.

இடிபுரிதல் - இடித்துக் கூறுதல், கண்டித்துக் கூறுதல்; எள்ளுஞ்சொல் - இழிசொல். 607

8. மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும்.

ஒரு நல்ல குடும்பத்திலே பிறந்தவனிடம் சோம்பலானது வந்து சேருமானால், அஃது அவனுடைய பகைக்கு அவனை அடிமையாக்கி விடும். 608

9. குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

தன்னை அடிமையாக்கிக் கொண்டிருக்கும் சோம்பலை ஒருவன் ஒழித்து விடுவானானால் அ:.து அவன் குடும்பத்திலும், அக் குடும்பத்தை ஆளும் தன்மையிலும் உள்ள குற்றங்களையெல்லாம் தீர்த்துவிடும்.

மடியாண்மை - சோம்பலானது தன்னை அடிமையாக்கிக் கொண்டிருக்கும் தன்மை. 609

10. மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு.

தன் பாதத்தினாலே உலகத்தை அளந்த இறைவன் தாவிய நிலப்பரப்பு முழுவதையும் சோம்பல் இல்லாத ஓர் அரசன் ஒருங்கே அடைதல் கூடும்.

எய்துதல் - அடைதல்; அடி அளந்தான் - திருமால்; தா அயது - தாவி அளந்து; ஒருங்கு - ஒரே சமயத்தில். 610

## 62. ஆள்வினை உடைமை

1. அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

நாம் இவ்வினையைச் செய்து முடித்தல் மிகவும் அருமையானது என்று எண்ணி மனத்தளர்ச்சி அடைதல் கூடாது. முயற்சியானது அச்செயலைச் செய்து முடித்தற்கு ஏற்ற பெருமையைத் தரும்.

ஆள்வினை உடைமை - விடா முயற்சி உடைமை; அசாவுதல் - தளர்ச்சி அடைதல்.

எவ்வளவு பெரிய செயலாக இருப்பினும் முயற்சியினால் செய்து முடிக்கலாம் என்பது கருத்து. 611

2. வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு.

ஒரு வேலையை முற்றும் செய்து முடிக்காமல் அரைகுறையாக விட்டவரை உலகமும் கைவிட்டுவிடும். ஆதலால், செய்யும் தொழிலில் (அரைகுறையாகச் செய்து) அதைக் கெடுத்து விடுதலைத் தவிர்க.

வினைக்கண்-வேலையில்; வினைகெடல்-தொழிலைக் கெடுத்து விடுதல்; ஓம்பல்-தவிர்க, ஒழிக; வினைக்குறை-அரைகுறையாக வேலைசெய்தல்; தீர்த்தார்-கைவிட்டவர்; தீர்ந்தன்று-விட்டது. 612

3. தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு.

பிறருக்கு உதவி செய்தல் என்னும் பெருமிதம் முயற்சி என்னும் உயர்ந்த குணத்திலே நிலைத்திருக்கிறது. 613

4. தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

முயற்சி சிறிதும் இல்லாதவன் பிறருக்கு உதவி செய்பவனாக இருத்தல், படையைக் கண்டாலே அஞ்சும் பேடி தன் கையில் வாளை எடுத்து ஆளும் தன்மைபோல் நிறைவேறாத செயலாகவே முடியும்.

பேடி-பெண்தன்மை மிகுந்து பெண் என்றும் ஆண் என்றும் சொல்ல இயலாத தன்மையுடையவர். 614

5. இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்.

இன்பம் அனுபவித்தலை விரும்பாதவனாகித் தான் மேற்கொண்ட செயலை முடித்தலையே விரும்புகின்றவன், தன் சுற்றத்தாரின் துன்பத்தினை நீக்கி அவர்தம் வாழ்வாகிய பாரவிக்கையைத் தாங்கும் தூண் போன்றவன் ஆவான். 615

6. முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

முயற்சியானது ஒருவனுடைய செல்வத்தை வளர்க்கும். முயற்சி செய்யாமல் இருத்தல் ஒருவனை வறுமையில் சேர்த்து விடும்.

திரு-செல்வம்; ஆக்கும்-வளர்க்கும்; முயற்றின்மை-முயற்சி இல்லாமை; இன்மை-வறுமை; புகுத்திவிடும்-அடைவித்துவிடும். 616

7. மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள்.

சோம்பலையுடையவன் இடத்திலே கரிய நிறமுடைய மூதேவி தங்கியிருப்பாள் என்று கூறுவர். சோம்பல் இல்லாதவனுடைய முயற்சியிலே திருமகள் தங்கியிருப்பாள்.

மடி-சோம்பல், சோம்பலையுடையவன்; மா-கரிய நிறம்; முகடி-மூதேவி; தாள் உளாள்-முயற்சியில் தங்கியிருப்பாள்; தாமரையினாள்-தாமரை பூவில் வாழும் இலக்குமி, திருமகள். 617

8. பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி.

முயற்சிக்குத் தகுந்த பலனைத் தருகின்ற விதி இல்லாமல் இருத்தல் யார்க்கும் குற்றம் ஆகாது. அறிய வேண்டியவற்றை அறிந்து முயற்சி செய்யாதிருத்தலே குற்றம் ஆகும்.

பொறி-விதி. ஊழ், கண், காது முதலிய உறுப்புக்களுமாம்; பழி-குற்றம்; அறிவறிந்து-அறிய வேண்டுவனவற்றை அறிந்து; ஆள்வினை-முயற்சி. 618

9. தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

செய்து முடிக்க முயன்ற ஒரு செயல் ஊழ்வலியின் காரணமாக முற்றிலும் முடியாமற் போனாலும் உடம்பு வருந்த உழைத்த முயற்சியின் அளவுக்குப் பயன் கிடைத்தே தீரும்.

தெய்வம்-ஊழ்வலி; மெய்-உடல். 619

10. ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்.

உள்ளத்திலும் சோர்வு இல்லாமல், முயற்சியிலும் குறைவு இல்லாமல் ஒரு செயலைச் செய்ய முயல்கின்றவர், அச்செயலுக்கு இடையூறாகத் தோன்றும் விதியையும் புறமுதுகு காட்டும்படி செய்வர்.

உப்பக்கம் காணுதல்-புறமுதுகிட்டு ஓடும்படி செய்தல். 620

## 63. இடுக்கண் அழியாமை

1. இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்.

இடையூறு நேரும்போது அதன் பொருட்டுத் தளர்ச்சி யடையாது உள்ளத்தே மகிழ்ச்சி அடைதல் வேண்டும். ஏனெனில் அந்த இடையூற்றினை நெருங்கி எதிர்ப்பதற்கு அந்த மகிழ்ச்சியைப் போன்று வேறு ஒன்றும் இல்லை.

இடுக்கண்-துன்பம்; நகுதல்-சிரித்தல், மகிழ்தல்; அடுத்து ஊர்தல்-நெருங்கி எதிர்த்தல்.

மகிழ்வதனால் மனத்தளர்ச்சி குறைகின்றது; அதனால் நடையுற்ற தொழிலைச் செய்து வெற்றி பெறுவதற்கும் வழி ஏற்படுகின்றது. 621

2. வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்.

வெள்ளம்போல் அளவின்றி வரும் துன்பங்களை யெல்லாம் அறிவுடைய ஒருவன் தன் உள்ளத்தில் அவை வந்த தன்மையினைச் சிறிது நினைத்துப் பார்க்க, உடனே அத் துன்பங்கள் நீங்கிவிடும்.

இடும்பை-துன்பம்; உள்ள-நினைத்துப் பார்க்க. 622

3. இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர்.

துன்பம் நேர்ந்தபோது அதற்காக வருந்தி உள்ளம் கலங்காதவர், அந்தத் துன்பத்துக்கே துன்பத்தை உண்டாக்குவர்.

படுத்தல்-உண்டாக்குதல்; படுதல்-அனுபவித்தல். 623

**4.** மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து.

வண்டியை இழுத்துச் செல்லும் எருது வழியில் தடை நேர்ந்தபோதும் அந்தத் தடையினைக் கண்டு உள்ளம் ஓடியாமல் மேலும் முயன்று தடை நேர்ந்த இடங்களில் எல்லாம் வெற்றியைக் காண்பதுபோல், துன்பம் நேர்ந்த போதெல்லாம் அதைப் பொருட்படுத்தாது தன் தொழிலை மேற்கொள்ளும் ஒருவனிடம் அந்தத் துன்பமே துன்பப் படும் நிலையை அடையும்.

*மடுத்த வாய் எல்லாம்-இடையூறு நேர்ந்த இடத்தில் எல்லாம்; பகடு-எருது; இடர்ப்பாடு-துன்பம்.* 624

**5.** அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கட் படும்.

துன்பங்கள் பலவாக அடுக்கி ஒன்றன்மேல் ஒன்றாக வந்தபோதும் உள்ளத் தளர்ச்சி இல்லாதவனிடம் வந்த துன்பங்களே துன்பங்களை அடையும்.

*அடுக்கி வருதல்-ஒன்றன்மேல் ஒன்றாகத் தொடர்ந்து வருதல்; அழிவு இலான்-தளராதவன்.* 625

**6.** அற்றேமென்று அல்லற் படுபவோ பெற்றேமென்று
ஓம்புதல் தேற்றா தவர்.

செல்வம் வந்தபோது, 'இது பெற்றோமே!' என்று மகிழ்ந்து (அதை எவர்க்கும் உதவாமல் பூதம் போல்) பாது காத்திருத்தலை அறியாதவர், அது தம்மைவிட்டுப் போகும் போதும், 'நாம் இழந்துவிட்டோமே' என்று துன்பப்படு வாரா? (சிறிதும் துன்பப்பட மாட்டார்? எள்ளி நகையாடு வார்.) 626

**7.** இலக்கம் உடம்பிடும்பைக்கு என்று கலக்கத்தை
கையாறாக் கொள்ளாதாம் மேல்.

உடம்பு துன்பத்துக்கு இடமாக இருப்பது என்று தெளிந்து, மேலோர் தமக்குத் துன்பம் வந்தபோது மனக் கலக்கத்தை ஒழுக்க நெறியாகக் கொள்ளமாட்டார்.

இலக்கம்-குறிப்பொருள், இலட்சியம்; ஒன்றைச் செய்தற்கு இடமாகக் குறித்துக் கொள்வது; கையாறு-ஒழுக்க நெறி, நடக்கவேண்டிய வழி. 627

**8. இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன்.**

இன்பம் அனுபவிக்கும்போது அதற்காக மகிழாமல் துன்பம் நேர்ந்தபோதும் உடம்பைப் பெற்றவர் துன்பம் அடைதல் இயற்கை என்று தெளிந்திருப்பவன் துன்பம் அடையமாட்டான். 628

**9. இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்.**

இன்பத்தில் உள்ள இனிமையினை நினைத்து இன்புற விரும்பாதவன் துன்பத்துள் உள்ள துயரினையும் நினைத்து வருந்தமாட்டான். உடம்பைப் பெற்ற இவ்வுயிருக்கு இவை இரண்டும் இயல்பே என்று எண்ணி, அமைதியாக இருப்பான். 629

**10. இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு.**

துன்பத்தையே ஒருவன் இன்பமாகக் கருதிக் கொள்வானானால் அவனுடைய பகைவரும் விரும்பிப் போற்றும் சிறப்பு அவனுக்கு உண்டாகும்.

இன்னாமை-துன்பம்; ஒன்னார்-பகைவர். 630

# அங்கவியல்

## 64. அமைச்சு

1. கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு.

ஒரு தொழிலைச் செய்யும்போது அதற்கு வேண்டிய கருவி, அதற்கு ஏற்ற காலம், அதனைச் செய்யும் முறை, அம்முறையில் செய்யப்படும் அரிய செயல் ஆகிய இவைகளை மாட்சிமைப்படப் பொருத்தமாக எண்ணிச் செய்ய வல்லவனே அமைச்சன் ஆவான்.

மாண்டது-சிறப்புடையது.

கருவிகளாவன: அமைச்சருக்குச் சேனை, பொருள் முதலியன; மற்றவர்கட்கு அவரவர் தொழிலுக்கு ஏற்ற கருவிகள். 'அமைச்சு' என்பது இங்கு அமைச்சன் என்னும் பொருளில் வந்தது. 631

2. வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்டது அமைச்சு.

அஞ்சாமையும், குடிப்பிறப்பும், காக்கும் தன்மையும், பல நூல்களையும் கற்று அதனால் பெற்ற அறிவும், முயற்சியும் ஆகிய இந்த ஐந்தினையும் சிறப்புறப் பெற்றவனே அமைச்சனாவான்.

வன்கண்-அஞ்சாமை; குடி-குடும்பச் சிறப்பு; ஆள்வினை-முயற்சி; குடிகாத்தலை ஒன்றாகக்கொண்டால் கற்றறிதல் என்பதனைக் கற்றல், அறிதல் என இரண்டாகக் கொள்க. 632

3. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்லது அமைச்சு.

தன் அரசரிடத்திலிருந்தும், தன் அரசனுக்குப் பகைவராக உள்ளோரிடத்திலிருந்தும் பிரிக்க வேண்டியவர்களைப் பிரித்தலும், என்றென்றும் பிரியாமல் இருக்க வேண்டியவர்

களை இன்சொல் கூறல், பொருள் தந்து உதவல் முதலியவைகளால் பிரிந்து போகாமலும் காப்பாற்றிக் கொள்ளுதலும், முன்னரே பல்வேறு காரணங்களால் பிரிந்து இருப்பவர்களை அவரவர்கட்கு ஏற்றவைகளை உதவி, சேர்த்துக் கொள்ளுதலும் ஆகிய இவைகளில் வல்லமை பெற்றவனே சிறந்த அமைச்சனாவான்.

பேணிக்கொள்ளல் - அவரவர்கட்கு வேண்டியவைகளை அளித்து அன்புடன் சேர்த்துக் கொள்ளுதல். 633

4. தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு.

ஒன்றைச் செய்வதற்கு முன்பு நன்றாக ஆராய்ச்சி செய்தலும், செய்யத் தக்கது என்று தோன்றினால் அச் செயல் முடிவு பெறும் வகையில் நன்கு எண்ணிச் செய்தலும், இச் செயலைச் செய்யலாமா செய்யக் கூடாதா என உள்ளத்தில் ஐயப்பாடு ஏற்படுமானால் நன்கு சிந்தித்து இரண்டில் ஒன்றைத் துணிந்து சொல்லும் ஆகிய இவற்றில் வல்லமை உடையவனே சிறந்த அமைச்சன் ஆவான்.

தெரிதல் - ஆராய்ந்து அறிதல்; ஒருதலையாச் சொல்லுதல் - இருவகை எண்ணங்களில் ஒன்றைத் துணிந்து சொல்லுதல். 634

5. அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான் எஞ்ஞான்றும்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை.

அறவழியைத் தெரிவிக்க நேர்ந்தபோது அதில் உள்ள நீதி நெறிகளை நன்கு உணர்ந்து, அறிவோடும் அமைதி பொருந்திய தன்மையோடும் அதனைத் தெரிவிக்கக்கூடிய சொல்வன்மை உடையவனாயும், அவ்விதம் சொல்லுவதனால் விளையக்கூடிய நன்மை தீமைகளை எந்தக் காலத்தும் அறிந்திருப்பவனாயும் உள்ள அமைச்சனே ஒன்றைக் குறித்துக் கலந்து ஆலோசிப்பதற்குத் தக்க துணையாவான்.

அறன் - தரும நெறி அல்லது கடமை; ஆன்ற - அறிவு நிரம்பிய; அமைந்த - பொறுமையோடு கூடிய; திறன் - விளையத்தக்க நன்மை தீமைகள்; தேர்ச்சித் துணை - கலந்து ஆலோசித்தற்குத் தகுந்த துணைவன். 635

**6. மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்**
**யாவுள முன்னிற் பவை.**

நல்ல நூல்களைக் கற்றறிந்ததனால் ஆகிய அறிவும், இயற்கையாக அமைந்துள்ள நுண்ணறிவும் உடைய அமைச்சர்களுக்கு முன்னே வந்து நிற்கக்கூடிய மிகவும் நுட்பமான சூழ்ச்சிகள் எவை இருக்கின்றன? எவையும் இல.

பிறரால் நிகழக்கூடிய எத்தகைய சூழ்ச்சிகளையும் அத்தகைய அமைச்சர்கள் எளிதில் அறிந்து கொள்வர் என்பது பொருள். 636

**7. செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து**
**இயற்கை அறிந்து செயல்.**

செய்யவேண்டுவன இவையே என்று நூலறிவாலும், நுண்ணறிவாலும் நன்கு தெரிந்துகொண்ட போதிலும் அந்த இடத்தின் நிலையையும், காலத்தின் நிலையையும் அறிந்து அவைகளுக்கு ஏற்பவே செய்தல் வேண்டும்.

செயற்கை - செய்யவேண்டிய கடமை; உலகத்து இயற்கை - உலக ஒழுக்கத்துக்கு ஏற்ற செயலுமாம். 637

**8. அறிகொன்று அறியான் எனினும் உறுதி**
**உழைஇருந்தான் கூறல் கடன்.**

அறிந்து சொல்லுவோர் தம் சொற்களையும் இகழ்ந்து தானும் எண்ணிப்பாராது ஒருவன் ஒன்றைச் செய்பவனாக இருப்பினும் அவனுக்கு அருகே இருக்கும் அறிஞன் வாளா இராமல் உண்மைப் பொருளை விளக்கிக் கூறுதலே முறைமை ஆகும்.

'அறிகொன்று அறியான்' என்பதற்கு அறியவேண்டியவைகளுள் ஒன்றையும் அறியாதவன் என்றும் பொருள் கொள்ளுவர். உழையிருந்தான் - அருகே இருப்பவன். இங்கே அமைச்சனைக் குறிக்கும். 638

**9. பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்**
**எழுபது கோடி உறும்.**

அரசனுக்கு அருகிலேயே இருந்து அவனுக்குத் தீங்கினை விளைவிக்கும் மந்திரியைக் காட்டிலும் அந்த அரசனை நேருக்கு நேராக எதிர்த்து நிற்கக்கூடிய எழுபது கோடிப் பகைவரே மேலானவர்கள்.

தெவ்-பகைவர்; உறுதல்-பொருந்துதல். 639

10. முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர்
திறப்பாடு இலாஅ தவர்.

அமைச்சர்க்கு நன்கு சிந்தித்துப் பார்க்கும் அறிவு மட்டும் இருந்தால் பயனில்லை; அந்த அறிவுக்கு ஏற்பச் செய்யும் திறமையும் இருத்தல் வேண்டும். அத்தகைய திறமை இல்லாதவர் முடிவு பெறாத செயல்களையே செய்வர்.

முறைப்படச் சூழ்தல் - ஒழுங்குபட எண்ணுதல். 640

## 65. சொல்வன்மை

1. நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று.

பேச்சு வன்மை என்பது ஒருவனுக்குச் செல்வம் போன்றதாகும். அந்தச்செல்வத்தைப் பிறசெல்வங்களுக்குச் சமமாக எண்ணுதல் கூடாது. அஃது எல்லாச் செல்வங்களிலும் சிறந்து விளங்குவதாக இருக்கின்றது.

சொல்வன்மை - பிறர் உள்ளங்களைக் கவரும் வகையில் பேசும் தன்மை; நாநலம் என்னும் நலன் - பேச்சு வன்மை என்னும் செல்வம்; பிற நலன்களாவன; கேட்டறிதல், பார்த்தறிதல், சுவைத்தறிதல் முதலியன. 641

2. ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு.

நல்ல சொல்லால் செல்வமும், தவறான சொல்லால் கேடும் வரும். ஆதலால், ஒருவர் தம் சொல்லில் தவறு நேராமல் காத்துக்கொள்ள வேண்டும்.

சொல்லின் கண் சோர்வு - பேசும்போது நேரத்தக்க தவறு; காத்தோம்பல் - போற்றிக் காத்தல்; 'ஓம்பல்' இங்கே 'காத்துக்கொள்க' என்னும் பொருளில் வந்துள்ளது. 642

3. கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்.

சொல்லும் போது உடனிருந்து கேட்டவர் தம் உள்ளத்தை வயப்படுத்துவதோடு அவ்வாறு கேட்க இயலாதவரும் கேட்க விரும்புமாறு சொல்வதே சொல்வன்மை ஆகும்.

நண்பர்களைத் தம்மிடமிருந்து பிரியவொட்டாமல் மேலும் நட்பினை உண்டாக்குவதோடு நண்பர்கள் அல்லாத பகைவர்களும் அந்தப் பகைமை ஒழிந்து தம்மிடம் நட்புமுறை பாராட்டத்தக்க சொற்களை ஆய்ந்து பேசுவதே பேச்சுவன்மையாகும் என்றும் இக்குறளுக்குப் பொருள் கூறலாம்.

கேட்டார் - நண்பர்; கேளார் - பகைவர்; வேட்ப - விரும்பிக் கேட்கும்படி; பிணித்தல் - சேர்த்தல்; நண்பராகச் செய்தல்; தகை அவாய் - தன்மையை அவாவி, அஃதாவது விரும்பி என்றும் பொருள் கொள்வர். 643

4. திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங்கு இல்.

ஒருவர் ஏதேனும் சொல்ல விரும்பும்போது நன்றாக ஆய்ந்து இடம் பொருள் உணர்ந்து அந்தச் சூழ்நிலைக்கு ஏற்ற சொல்லையே சொல்லுதல் வேண்டும். ஏனென்றால் நீதியை நிலைக்கச் செய்வதற்கும், அடைய விரும்பும் பொருளை அடைவதற்கும் அந்தச் சொல்வன்மையைக் காட்டிலும் சிறந்தது வேறொன்று இவ்வுலகில் இல்லை.

திறன் - எந்த எந்தச் சமயத்தில் எதை எதை எந்த எந்த வகையில் சொல்லவேண்டுமோ அந்த வகைகளை யெல்லாம் எண்ணிச் சொல்லும் திறமை. 644

5. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து. [சொல்லை

ஒருவர் ஒரு சொல்லைச் சொல்லும்போது மற்றொருவர் அச்சொல்லை மறுத்துச் சொல்லாதவண்ணம் நன்கு சிந்தித்துப் பார்த்தே சொல்லுதல் வேண்டும். 645

6. வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்.

தாம் ஒன்றைச் சொல்லும்போது பிறர் விரும்பி அதை ஏற்றுக்கொள்ளுமாறு சொல்லி, பிறர் சொல்லும்போது அச்சொல்லின் பயனை மட்டும் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். இவ்விதம் நடத்திய குற்றமற்ற பேச்சுச் சிறப்பினை உடையவர்தம் கொள்கையாகும். 646

7. சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது.

ஒருவன் தான் எண்ணிய ஒன்றைப் பிறர் விரும்பி ஏற்றுக் கொள்ளும் வகையில் சொல்ல வல்லவனாகவும், அவையிலும் சொல்லும்போது எத்தகைய சொற்குற்றம், பொருட் குற்றங்களையும் புரியாதவனாகவும், தான் சொல்ல விரும்பும் ஒன்றைச் சொல்லுதற்கு வேண்டிய அஞ்சாமை உடையவனாகவுமாக இருந்தால் அவன் சோர்வில் குற்றம் கண்டு அவனை வென்றுவிட எவராலும் இயலாது.

இகல் - பகைமை, கருத்து வேறுபாடு. 647

8. விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

தாம் சொல்ல விரும்பும் கருத்துக்களை ஒழுங்கு பெறத் தொகுத்து வைத்துக்கொண்டு இனிமையாகச் சொல்லுதல் வேண்டும். அத்தகைய வல்லமை வாய்ந்தவர் கிடைக்கப் பெற்றால் இவ்வுலகில் உள்ளோர் தாமே அவரிடம் விரைந்து சென்று அவர் சொல்லும் தொழில் கேட்டு அவ்வண்ணமே நடக்கவும் முன்வருவர்.

ஞாலம் - உலகில் உள்ள மக்கள்; நிரந்து- ஒழுங்குபடக் கோத்து. 648

9. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர்.

குற்றமற்றவைகளாகிய சில சொற்களால் ஒரு கருத்தை விளக்கிச் சொல்ல அறியாதவரே பொருளற்ற பலப்பல சொற்களை அடுக்கிச் சொல்ல விரும்புவர்.

காமுறுதல் - விரும்புதல்; மன்ற - நிச்சயமாக அல்லது விளக்கமாக; தேற்றாதவர்-தெளியாதவர், அறியாதவர். 649

10. இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
உணர விரித்துரையா தார்.

தாம் கற்ற நூல்களின் பொருளைப் பிறர் அறிந்துகொள்ளும்படி விளக்கமாகச் சொல்ல இயலாதவர்; கொத்தாக

அழகு பெற மலர்ந்திருந்தும் மணம் சிறிதும் இல்லாமல் இருக்கும் மலருக்குச் சமமானவராகவே மதிக்கப்படுவர்.

இணர்- பூங்கொத்து; ஊழ்த்தல் - மலர்தல்; நாறா மலர்-மணமில்லாத மலர். 650

## 65. வினைத்தூய்மை

1. துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்
வேண்டிய எல்லாம் தரும்.

ஒருவருக்குத் துணையினது நன்மை செல்வம் ஒன்றனையும் கொடுக்கும். அதனோடு அவர் செயல் நலமும் பெற்றிருந்தால் அவர் விரும்பும் எல்லா நலன்களையும் அந்தச் செயல் நலம் தரும்.

அமைச்சர்கள் பேச்சு வன்மையோடு செயல் நலமும் உடையவர்களாக இருத்தலின் இன்றியமையாமையை இக் குறள் தெரிவிக்கிறது. வினை நலத்தால் இம்மையில் பெறக் கூடிய செல்வத்தோடு மறுமை இன்பத்தையும் அடையக்கூடும்என்றும் இக்குறளுக்கு விரிவுரை கூறுவர். 652

2. என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

ஓர் அமைச்சர் தமக்கும் தம் அரசனுக்கும் புகழையும் நன்மையையும் தாராத செயல்களை எந்தக் காலத்தும் முற்றிலும் ஒழித்துவிடுதல் வேண்டும்.

ஒருவுதல் - விட்டு நீங்குதல்; நன்றி – நன்மை. 651

3. ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅது என்னும் அவா.

மேம்பாட்டினை அடைய விரும்புவோர் தம் புகழ்கெட வரும் தொழிலைச் செய்தலை முற்றிலும் விட்டு நீங்குவாராக.

ஓஒதல் - ஓவுதல், ஒழித்துவிடுதல் ; ஒளி - இங்கே புகழினைக் குறிக்கும்; மாழ்குதல் – கெடுதல்; ஆஅதும் – ஆகுவோம்; மேம்பாட்டினை அடைவோம். 653

**4. இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்**
**நடுக்கற்ற காட்சி யவர்.**

தடுமாற்றம் சிறிதும் இல்லாத அறிவினையுடையவர் எத்தகைய துன்பத்தில் ஆழ்ந்தபோதும் அது தீர்த்தற் பொருட்டு இழிவான செயல்களைச் செய்யமாட்டார்.

இடுக்கண் - துன்பம் ; இளிவந்த - இழிவான செயல்கள் ; நடுக்கற்ற காட்சி - தடுமாற்றம் சிறிதும் இல்லாத அறிவு ; அஃதாவது எத்தகைய துன்பத்திலும் நிலை கலங்காத தன்மை ; காட்சி – இங்கே அறிவினைக் குறிக்கும். 654

**5. எற்றென்று இரங்குவ செய்யற்க செய்வானேல்**
**மற்றன்ன செய்யாமை நன்று.**

நான் எத்தகைய தவறுகளைச் செய்துவிட்டேன் என்று பிறகு எண்ணி வருந்தக்கூடிய செயல்களை என்றென்றும் செய்யா தொழிக, அத்தகைய குற்றங்களை ஒரு முறை செய்ய நேர்ந்துவிட்டாலும் மீண்டும் அவற்றைப் புரியாதிருத்தலே நல்லது.

எற்று - எத்தகையது ; இரங்குவ - வருந்தக்கூடிய செயல்கள். 655

**6. ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க**
**சான்றோர் பழிக்கும் வினை.**

தன்னைப் பெற்றெடுத்த தாயின் பசித் துன்பத்தை நேரில் கண்டு வருந்தத்தக்க நிலை நேர்ந்தாலும் அறிவின் மிக்க பெரியோர் அறிந்து இகழ்ந்து கூறத்தக்க செயலினை ஒருவன் செய்யாதிருத்தல் வேண்டும். 656

**7. பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்**
**கழிநல் குரவே தலை.**

பெரிய குற்றங்களைத் தாங்கிக்கொண்டு பெறத்தக்க செல்வத்தை அறிவிற் சிறந்த பெரியோர்கள் ஏற்க மாட்டார்கள் ; அத்தகைய குற்றங்களைச் செய்ய இசையாது வருந்தும் கொடிய வறுமையான நிலையையே விரும்புவர் ; அதுவே சிறந்தது.

மலைந்து - மேற்கொண்டு ; நல்குரவு - வறுமை. 657

**8. கடிந்த கடிந்தொரார் செய்வார்க்கு அவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்.**

அறிவுடையோரால் வெறுக்கப்பெற்ற செயல்களைத் தாமும் வெறுத்து நீக்காமல் செய்ய முயல்வாருக்கு அச் செயல்கள் நிறைவேறினாலும் அவை துன்பத்தையே தரும்.

கடிந்து — வெறுத்து ஒதுக்கிய செயல்கள் ; கடிந்து — வெறுத்து ; ஒரார் - நீக்காதவர் ; பீழை - துன்பம். 658

**9. அழக்கொண்ட எல்லால் அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை.**

பிறர் வருந்தும்படி ஒருவன் பெற்ற பொருள்கள் யாவும் அவனும் அவ்விதமே வருந்தும்படி ஒழிந்து போகும். நல்ல வழியில் பெற்ற பொருள்கள் அவ்விதம் பெற்றவனை விட்டு நீங்குதல் கூடும். எனினும் பின்னர் வேறோர் வகையில் அவை அவனுக்கு நன்மையைத் தரும். 659

**10. சலத்தால் பொருள்செய்து ஏமார்த்தல் பசுமண்
கலந்துள்நீர் பெய்திரீஇ யற்று.**

தீய செயலால் பொருள் தேடி அப்பொருளைக் காப்பாற்ற எண்ணுதல் உலராத பச்சைக் களிமண்ணால் செய்யப் பெற்ற மண் பாண்டத்துள் நீரைப் பெய்து அதைக் காப்பாற்ற முயல்வதற்குச் சமமே ஆகும்.

சலம் - தீய செயல்கள், வஞ்சனை ; ஏமார்த்தல் - ஏமம் செய்தல், பாதுகாத்தல் ; இரீஇயற்று - இருத்திய அத்தன்மைத்து. 660

## 67. வினைத்திட்பம்

**1. வினைத்திட்பம் என்ப தொருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற.**

ஒரு தொழிலினிடத்துத் திண்மை என்று சொல்லப் படுவது ஒருவன் உள்ளத்தின் உறுதியே ஆகும். மற்றவை யெல்லாம் இதற்கு அடுத்தவையாகவே கொள்ளுதல் வேண்டும்.

மற்றவை - கருவி, உபாயம் முதலியன ; படை, அரண், நட்பு முதலியவைகளையும் கொள்ளலாம். வினைத்திட்பம் செயலின்கண் உறுதியாய் இருத்தல். 661

2. ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறென்பர் ஆய்ந்தவர் கோள்.

ஒன்றைச் செய்ய முயலும்போது இடையூறு வருதல் கூடும். அத்தகைய இடையூறு வருவதற்கு முன்பே அதனை உணர்ந்து நீக்குதலும், அவ்விதம் முயன்றும் இடையூறு நேரின் அதன் பொருட்டு உள்ளம் தளராமையும் ஆகிய இந்த இரண்டினது வழியே வினைத்திட்பம் பற்றி ஆய்ந்தவர் தம் கொள்கையாகும்.

விளக்கம்: வினைத்திட்பம் இருவகைப்படும். ஒன்று இடையூறு நேராவண்ணம் முன்னரே அறிந்து காக்கும் உள்ள உறுதி. மற்றொன்று இடையூறு வந்த காலத்தும் உள்ளம் தளராமை.

ஊறு - துன்பம்; ஒரால் - நீக்குதல்; ஒல்காமை - உள்ளம் தளராதிருத்தல்; ஆறு - வழி; கோள் - கொள்கை. 662

3. கடைக்கொட்க செய்தக்கது ஆண்மை இடைக்
எற்றா விழுமம் தரும். [கொட்கின்

ஒருவன் ஒரு செயலைத் தொடங்கினால் அதை அதன் இறுதிவரையில் செய்து மீள்வதே அவனுக்கு ஆண்மையாகும். இடையிலேயே மீள்வானாயின் அஃது அவனுக்கு நீங்காத துன்பத்தையே விளைவிக்கும்.

வேறொரு பொருள்: ஒருவன் தான் செய்யும் செயலை முடிவில் வெளிப்படும்படியாக மறைத்துச் செய்வதே வினைத்திட்பம் ஆகும். அங்ஙனமின்றி இடையில் அச்செயல் பிறருக்குப் புலப்படும்படி ஒருவன் செய்வான் ஆயின், அத்தொழிலைச் செய்வானுக்கு அது நீங்காத துன்பத்தைத் தரும். 663

4. சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்.

ஒரு செயலை இவ்விதம் செய்து முடிக்கலாம் என்று சொல்லுதல் எவர்க்கும் எளியது ஆகும். அதனைச் சொல்லியவண்ணம் செய்தல் எவர்க்கும் அரியதுஆகும். 664

5. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்
ஊறெய்தி உள்ளப் படும்.

செய்யும் செயல்களால் தனிச் சிறப்பைப் பெற்று உயர்ந்தவர்தம் வினைத்திட்பமானது அந்த நாட்டை ஆளும் அரசன் உள்ளத்திலும் பதிவதால் எல்லாராலும் நலகு மதிக்கப்படும்.

வீறு - தனிச்சிறப்பு; மாண்டார் - சிறப்புக்களால் உயர்ந்தவர்; ஊறு எய்தல் - (உள்ளத்தே) சென்று தங்குதல்; உள்ளப்படும் - நன்கு மதிக்கப்படும். 665

**6. எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்**
**திண்ணிய ராகப் பெறின்.**

எண்ணினவர் அவற்றைச் செய்து முடிக்கும் உள்ள உறுதியை உடையவராகப் பெறுவாராயின் தாம் எண்ணியவற்றை எண்ணியபடியே பெறுவர். 666

**7. உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்**
**அச்சாணி அன்னார் உடைத்து. [தேர்க்கு**

உருண்டு செல்லத்தக்க பெரிய தேருக்கு அதன் அச்சில் இருந்து அதனைத் தாங்கும் சிறிய ஆணியைப் போன்ற திண்ணியாரை இவ்வுலகம் பெற்றிருக்கிறது. ஆதலால், ஒருவரை அவர்தம் வடிவின் சிறுமை கண்டு இகழக்கூடாது.

அச்சாணி - தேரின் கடையாணி. 667

**8. கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது**
**தூக்கம் கடிந்து செயல்.**

மனத் தெளிவுடன் ஆராய்ந்து கண்டறிந்த ஒரு தொழிலினைச் சோர்வு கொள்ளாமலும் காலம் கடத்தாமலும் செய்து முடிக்கவேண்டும்.

துளங்காமை - திட்பமுடைமை, உள்ளச் சோர்வு கொள்ளாமை; தூக்கம் - சோம்பலால் தாமதமாகச் செய்தல்; கடிதல் – நீக்குதல். 668

**9. துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி**
**இன்பம் பயக்கும் வினை.**

முடிவில் இன்பத்தைத் தரத்தக்க ஒரு செயலைச் செய்யும்போது துன்பம் மிகுதியாக வருமாயினும் அத்துன்பம் நோக்கி உள்ளம் தளராது துணிவு மேற்கொண்டு செய்து முடித்தல் வேண்டும். 669

10. எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டாது உலகு.

எத்தகைய அரண்களை ஒருவர் பெற்றிருப்பினும் தாம் செய்யும் தொழிலில் அவருக்கு உள்ள உறுதி இல்லாதிருக்குமேல் அவரை உலகம் விரும்பிப் போற்றாது.

எனைத்திட்பம் - படை, அரண், நட்பு முதலிய அரண்கள்; செல்வம், கல்வி, உறவு என்றும் கூறுவர். 670

## 68. வினை செயல்வகை

1. சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது.

ஒரு செயலைக் குறித்து ஆராய்ச்சி செய்வதன் முடிவு அச்செயலைச் செய்து முடிக்கத் துணிவு கொள்ளுதலே ஆகும். அங்ஙனம் துணிந்த செயலில் காலந் தாழ்ந்து நிற்பது குற்றமாகும்.

சூழ்ச்சி - ஆராய்ச்சி செய்தல்; தாழ்ச்சி – காலம் தாழ்த்தல். 671

2. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

நன்றாக எண்ணி நிதானமாகச் செய்யவேண்டிய செயலை நிதானமாகவே செய்தல் வேண்டும். காலங் கடத்தாமல் உடனே செய்யவேண்டிய ஒரு செயலைச் செய்வதில் சிறிதும் காலம் கடத்துதல் கூடாது.

தூங்குதல் - தாமதித்தல் நிதானமாகச் செய்தல். 672

3. ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

செய்ய இயலும் இடமெல்லாம் செயலைச் செய்து முடித்தல் நல்லது; அவ்விதம் செய்ய இயலாத காலத்து அதே எண்ணமாக இருந்து, இயலும் இடம் பார்த்துச் செய்தல் வேண்டும்.

ஒல்லும்வாய் – இயலும் இடம் ; ஒல்லாக்கால் செய்ய இயலும் இடம் நேராதபோது'; வாய் இடம்.

குறிப்பு : 'வினை' என்பதற்குப் பரிமேலழகர் 'போர்' என்றே பொருள் கொள்ளுகின்றார் ; போர் செய்ய இயலாத போது சாம பேத தான தண்டங்களுள் ஒன்றைச் செய்க என்று அவர் பொருள் கூறுகின்றார். 673

**4. வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்**
**தீஎச்சம் போலத் தெறும்.**

செய்யத் தொடங்கிய ஒரு செயல், தீர்க்கத் தொடங்கிய ஒரு பகை ஆகிய இரண்டையும் அரைகுறையாக விட்டு வைத்தல் கூடாது. அவ்வாறு விட்டுவைக்க எண்ணினால், தீயின் ஒரு பகுதியைமட்டும் அணைக்காமல் விட்டுவைத்தால் அஃது எவ்விதம் பின் வளர்ந்து கெடுதியை விளைவிக்குமோ அவ்விதம் அந்த அரைகுறைச் செயலும் பகைமையும் கெடுதியும் விளைவிக்கும்.

எச்சம் – எஞ்சிய பகுதி ; தெறும் – கெடும். 674

**5. பொருள்கருவி காலம் வினைஇடனொடு ஐந்தும்**
**இருள்தீர எண்ணிச் செயல்.**

ஒன்றைச் செய்யத் தொடங்கும்போது அதற்கு வேண்டிய பொருள், அதற்கு ஏற்ற கருவி, தகுந்த காலம், செயல் முறை, செய்தற்குரிய இடம் ஆகிய இந்த ஐந்தனையும் மயக்கந் தீர எண்ணிப் பார்த்த பின்பு அந்தச் செயலைச் செய்ய வேண்டும். 675

**6. முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்**
**படுபயனும் பார்த்துச் செயல்.**

ஒரு தொழிலைச் செய்யும்போது அது முடியும் வகையும், இடையில் வரக்கூடிய இடையூறும், அச்செயல் வெற்றிகரமாக முடியும்போது அதனால் அடையக்கூடிய பெரிய பயனும் ஆகியவற்றை ஆராய்ந்து பார்த்துச் செய்ய வேண்டும். 676

**7. செய்வினை செய்வான் செயல்முறை அவ்வினை**
**உள்ளறிவான் உள்ளம் கொளல்.**

செயலைச் செய்பவன் செய்யவேண்டிய முறையாவது அந்தச் செயலின் உண்மை இயல்பினை முன்னரே அறிந்தவனுடைய எண்ணத்தைத் தான் அறிந்துகொண்டு அதனைத் தன் உள்ளத்தே ஏற்றுக்கொள்ளுதலே ஆகும்.

உள்ளறிவான்-ஒரு செயலின் உண்மை இயல்பினை முன்னரே அறிந்தவன். 677

8. வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள் யானையால் யானையாத் தற்று.

ஒரு செயலைச் செய்யும்போது அச்செயலைக்கொண்டு பிறிதொரு செயலையும் முடித்துக்கொள்ளுதல் வேண்டும். அது ஒரு மதம் பிடித்த யானையைக் கொண்டு மற்றொரு மதம்பிடித்த யானையைப் பிடித்துக் கொள்வது போன்றதாகும்.

கோடல்-கொள்ளுதல்; நனைகவுள்-மதத்தால்நனைந்த கன்னம்; யாத்தற்று-கட்டுதல் போலும்; யா-கட்டு. 678

9. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே ஒட்டாரை ஒட்டிக் கொளல்.

தம்மிடம் முன்னரே நட்புக் கொண்டுள்ளவர்கட்கு நல்லனவற்றைச் செய்து, அவர்களை மகிழச் செய்வதற்கு முன்னர், தம் பகைவரோடு சேராமல் தனியே இருப்போரை நட்பாக்கிக் கொள்ளுதல் விரைந்து செய்யத்தககது.

நட்டார்-நண்பர்; ஒட்டார்-எவரிடமும் கலவாமல் இருப்பவர், பகைவர்; ஒட்டிக் கொளல்-சேர்த்துக் கொள்ளுதல்.

ஒட்டாரை ஒட்டிக்கொளல்-பகைவரோடு சேராதவரைத்தன்னிடம் சேர்த்துக்கொள்ளல் என்பர் பரிமேலழகர்; பகைவரையே தன்னிடம் சேர்த்துக் கொள்ளல் என்பர் மணக்குடவர். 679

10. உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக் குறைபெறின் கொள்வர் பெரியார்ப் பணிந்து.

சிறிய நாட்டுக்கு அமைச்சராக உள்ளோர் தம்மினும் வலியார் படை எடுத்தவிடத்துத் தம் குடியும் படையும்

கலங்கக் கூடும் என்று அஞ்சி அக்குறை தீரக்கூடிய சந்து வாய்க்கப்பெறின் தம்மினும் பெரியராய் அவர் தம் நட்பை மிகவும் தாழ்மையோடு ஏற்றுக் கொள்வர்.

உறை-உறையுமிடம், அஃதாவது நாடு; குறைபெறின்-தம் குறைகள் தீரப்பெறின் அல்லது குறையிரத்தற்கு உடன் பட்டுத் தம் எண்ணத்தை ஏற்றுக்கொள்வாராயின் என்பது. 680

## ௬௯. தூது

1. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

யாவரிடத்தும் அன்பாயிருத்தல், தன் பதவிக்கு ஏற்ற நல்லகுடும்பத்தில் பிறந்திருத்தல், அரசர்களாகவே விரும்பப் படும் குணங்களை யுடையவனாக இருத்தல் ஆகிய இவை தூதுரைப்பவனுக்குரிய தகுதிகளாகும்.

ஆன்ற குடிப்பிறப்பு-அரசர்களோடு அமர்ந்து உரையாடு தற்கு ஏற்ற உயர்ந்த குடும்பத்தில் பிறத்தல்; அவாம்-விரும்பத்தக்க; தூது-அரசர்கள் இடையே கருத்து வேற்றுமை நேர்ந்தபோது ஒருவர் எண்ணத்தை மற்றொரு வருக்கு எடுத்துரைத்தல். 681

2. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு
இன்றி யமையாத மூன்று.

அரசன்மாட்டு அன்பு, அரசனுக்கு ஆவன அறியும் அறிவுடைமை, வேற்று அரசரிடம் சொல்லும்போது அந்த அரசரிடம் தம் அரசன் கூறியவைகளை ஆராய்ந்து சொல்லத்தக்க சொல்வன்மை ஆகிய இவை தூது உரைக்கச் செல்பவர்க்கு இன்றியமையாத மூன்று குணங்கள் ஆகும். 682

3. நூலாருள் நூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

வேல்போன்ற போர்க் கருவிகளைக் கையாளும் பிற அரசரிடம் சென்று அவன் போன்றே போர்க் கருவிகளைக் கையாளும் தன் அரசனுடைய வெற்றிக்குக் காரணமான

செயல்களைப் பற்றித் தூதுரைக்கச் செல்பவன் எத்தகைய பண்புடையவனாக இருத்தல் வேண்டும் எனில், சிறந்த நூல்களை எல்லாம் கற்றுணர்ந்த ஒரு புலவன் முன்பு சென்று தனக்குள்ள நூற்புலமையைக் கூறி, வெற்றி பெற்றுத் திரும்பக் கூடியவனைப் போன்ற ஆற்றல் வாய்ந்தவனாக இருத்தலாம்.

நூலார்-பல நூல்களையும் கற்றறிந்த புலவர்; வேலார்-வேல் முதலிய போர்க் கருவிகளைக் கையாளும் அரசர். 683

**4. அறிவுரு ஆராய்ந்த கல்வி இம்மூன்றன்**
**செறிவுடையான் செல்க வினைக்கு.**

இயற்கை அறிவு நல்ல தோற்றம், பலரோடும் பல காலம் ஆராய்ந்த கல்வி அறிவு இம்மூன்றையும் குறைவறப் பெற்றிருப்பவனே வேற்று வேந்தரிடம் தூதுரைக்கச் செல்லத் தக்கவன்; வினை-தூது. 684

**5. தொகச் சொல்லித் தூவாதநீக்கி நகச்சொல்லி**
**நன்றி பயப்பதாம் தூது.**

பல செய்திகளையும் தொகுத்துச் சொல்லியும், பயனற்றவற்றை நீக்கியும், கேட்டறியும் வேற்றரசர் உள்ளம் மகிழுமாறு சொல்லியும் தன் தலைவனுக்கு நன்மை உண்டாக்குகின்றவனே தூதன் ஆவான்.

தொகச் சொல்லுதல்-சுருங்கச் சொல்லுதல்; தூவாத-வேண்டாதவை; நக-மகிழும்படி. 685

**6. கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்**
**தக்க தறிவதாம் தூது.**

தூதுக்கு வேண்டிய உபாயங்களையெல்லாம் தெரிந்து கொண்டு, மாற்றரசன் வெகுண்டு நோக்கினால் அந்தக் கொடிய பார்வைக்கும் அஞ்சாதவனாய் அவன் உள்ளத்தில் நன்கு பதியுமாறு தன் அரசன் தெரிவித்ததைச் சொல்லி அந்தந்தக் காலத்துக்கு ஏற்றதை அறிந்து நடந்து கொள்பவனே தூதனாவான்.

கற்று-தூதுக்கு வேண்டிய உபாயங்களை யெல்லாம் தெரிந்துகொண்டு; கண் அஞ்சான்-கண்பார்வைக்கு அஞ்சாதவனாய்; செலச்சொல்லி-உள்ளத்தில் பதியும்படி சொல்லி,

காலத்தால் தக்கது அறிதல்-சமயோசித அறிவின்படி நடத்தல். 686

7. கடன் அறிந்து காலம்கருதி இடனறிந்து
எண்ணி உரைப்பான் தலை.

தான் மேற்கொண்டுள்ள செயலின் நன்மையை மனத்திற்கொண்டு. அதனை முடித்தற்கு ஏற்ற சமயத்தையும் உள்ளத்திற்கொண்டு, தக்க இடத்தையும் தெரிந்து கொண்டு. இவைகளை யெல்லாம் நன்கு சிந்தித்துப் பார்த்துத் தன் அரசன் தெரிவித்த செய்தியைத் தெரிவிப்பவனே தூதர்களில் சிறந்தவனாவான்.

விளக்கம் : தூதர்களுள் இருவகை உண்டு. தானே தன் கடமையை அறிந்து இடம் காலங்களுக்கு ஏற்ற வண்ணம் தன் அரசன் தெரிவித்த செய்தியைச் சுருக்கியும் விளக்கியும் கூறுபவன் தலைசிறந்த தூதுவன் ஆவான். மற்றவன் அரசன் கூறியதை அவன் கூறியபடியேகூறுபவன். இவர்களுள் தலையாய தூதுவனின் இலக்கணங் கூறுவது இக்குறள். 687

8. தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

உள்ளத்தாலும் உடலாலும் தூய்மையுடைமை, போதிய பாதுகாப்புடைமை, என்ன தீங்கு நேர்ந்தாலும் தாங்கத்தக்க உள்ளத் துணிவுடைமை ஆகிய இம்மூன்றினிடத்தும் என்றும் வழுவாது வாய்மைத் தன்மை பெற்றிருத்தலே தூதுவனின் குணம் ஆகும்.

இம்மூன்றின் வாய்மை-தூய்மை, துணைமை, துணிவுடைமை ஆகிய இம்மூன்றினும் வழுவாது நிற்கும் உண்மைத் தன்மை; வழியுரைப்பான்-அரசன் கூறியவழியின்படி தூது உரைப்பவன். 688

9. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

குற்றமான சொற்களை வாய்தவறியும் சொல்லாத உள்ள உறுதியுடையவனே தன் அரசன் சொல்லி அனுப்பிய சொற்களை வேற்றரசருக்குச் சொல்லத்தகுதியுடையவனாவான்.

விடுமாற்றம்-ஓர் அரசன் பிறிதோர் அரசனுக்குச் சொல்லி அனுப்பும் சொற்கள், அஃதாவது தூதுரை; வடு-மாற்றம்; வாய் சோர்தல்-அச்சத்தினாலோ பிற காரணங்களினாலோ வாய் தவறித் தகுதியற்ற சொற்களைச் சொல்லுதல்; வன்கண்-உள்ள உறுதி. 689

**10. இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு**
**உறுதி பயப்பதாம் தூது.**

தன் அரசன் மாற்றரசனுக்குச் சொல்லி விடுக்கும் வார்த்தைகள் தன் உயிர்க்கே அழிவு தருவதாய் இருப்பினும், தான் சொல்ல வேண்டியவற்றில் சிறிதும் குறைக்காது தன் அரசன் சொல்லியவாறே சொல்லித் தன் அரசனுக்கு நன்மையைத் தருபவனே தூதனாவான். 690

## 70. மன்னரைச் சேர்ந்தொழுகல்

**1. அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க**
**இகல்வேந்தர் சேர்ந்தொழுகு வார்.**

என்றும் போர்த்தொழிலிலேயே ஈடுபாடுடைய மன்னரைச் சார்ந்து ஒழுகும் அமைச்சர், தூதர் முதலியவர்கள் அந்த மன்னரை மிகவும் நீங்கியிராமலும், மிகவும் நெருங்கியிராமலும் நெருப்பினிடமிருந்து குளிர் காய்கின்றவர்கள் போல இருத்தல் வேண்டும்.

இகல்வேந்தர் என்பதற்கு அடிக்கடி மாறுபடுதலை உடைய அரசர் என்றும் பொருள் கொள்ளலாம். 691

**2. மன்னர் விழைப விழையாமை மன்னரான்**
**மன்னிய ஆக்கம் தரும்.**

அரசரால் விரும்பப்படுபவைகளை அவரைச் சார்ந்தவர்களும் விரும்பாதிருத்தல் வேண்டும்; அவ்வாறு இருத்தல் நிலையான செல்வத்தை அவர்கட்குப் பெற்றுத் தரும்.

விழைப-விரும்பப்படுபவைகள்; அவை அரசரால் துய்க்கப்படும் பொருள்கள், அலங்காரங்கள் முதலியவை. 692

**3. போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கும் அரிது.**

*அரசரைச் சார்ந்த அமைச்சர், வீரர் முதலானோர் தம்மைக் காத்துக்கொள்ள விரும்பினால் அரிய பிழைகள் தம்மிடம் நேராமல் காத்துக்கொள்ளுதல் வேண்டும். அத்தகைய பிழைகள் நேர்ந்தனவாகக் கேட்டு அரசன் ஐயுற்றானானால் அந்த ஐயத்தினின்று அவனைத் தெளிவித்தல் யாவர்க்கும் அரிதாகிவிடும்.*

போற்றுதல்-காத்தல்; அரியவை-பொறுத்தற்கு அரியவாகிய பிழைகள்; கடுத்தல்-ஐயுறுதல், சந்தேகித்தல்; தேற்றுதல்-தெளிவித்தல். 693

**4. செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்
ஆன்ற பெரியோ ரகத்து.**

*பலப்பல சிறப்புக்கள் அமைந்த அமைச்சர் போன்ற பெரியாரிடத்துத் தங்கியிருக்கும்போது ஒருவன் செவியுள் மட்டும் படும்படி மற்றொருவன் மறைவாகச் சொல்லிக் கொள்ளுதலும், ஒருவனைப் பார்த்து ஒருவன் மெல்ல நகைத்துக் கொள்ளுதலும் ஆகியவற்றை முற்றிலும் நீக்கி ஒழுகுதல் வேண்டும்.* 694

**5. எப்பொருளும் ஓரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை.**

*அரசர் பிறரோடு மறைவாகப் பேசுவது எப்பொருள் குறித்தாயினும் அதனைச் செவிசாய்த்துக் கேளாமலும், அவரைப் பின்தொடர்ந்து வினவாமலும் அம்மறைப் பொருளை அவர் தாமே தம் வாய்விட்டு வெளிப்படுத்திய போது கேட்டறிதல் வேண்டும்.*

ஓரார்-உற்றுக் கேளார்; தொடரார்-பின் தொடர்ந்து சென்று கேட்டறியார்; விட்டக்கால்-வெளிப்படுத்திய போது; மறை-இரகசியச் செய்தி. 695

**6. குறிப்பறிந்து காலம் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.**

*அரசனிடம் சில செய்திகளைச் சொல்ல விரும்பினால் அவன் உள்ளக் குறிப்பை அறிந்து, சொல்வதற்கு ஏற்ற*

காலத்தையும் எண்ணிப் பார்த்து அறிந்து, வெறுப்பு இல்லாதனவாயும் அவனுக்குத் தேவைப்படுவனவாயும் உள்ள செய்திகளை அவன் விரும்பும் வகையில் சொல்லுதல் வேண்டும். 696

7. வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்
கேட்பினும் சொல்லா விடல்.

மன்னனைச் சார்ந்தவர்கள் அவன் விருப்பத்தோடு கேட்கக்கூடிய பயனுள்ள செய்திகளை அவன் தம்மைப் பார்த்துச் 'சொல்லுக' எனக் கேளாவிடினும் சொல்லுதல் வேண்டும். பயனற்ற செய்திகளை அரசன் கேட்டாலும் எந்தக் காலத்தும் சொல்லாதிருத்தல் வேண்டும். 697

8. இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும்.

அரசரை, 'இவர் எம்மினும் இளையர்: இன்ன முறையினையுடையவர்' என்று எண்ணி இகழாமல், அவர்தம் அரச பதவியின் பெருமைக்கு ஏற்ப மன்னரைச் சார்ந்தோர் ஒழுகுதல் வேன்டும்.

இளையர் - வயது, உடலமைப்பு முதலியவைகளுள் இளையர்; இனமுறையர் - இன்ன முறையினையுடையவர் (அஃதாவது மகன் முறை, பெயரன் முறை, மைத்துனன் முறை முதலிய முறை); ஒளி - ஆட்சியின் சிறப்பு. 698

9. கொளப்பட்டேம் என்றெண்ணிக் கொள்ளாத
துளக்கற்ற காட்சி யவர். [செய்யார்

கலக்கம் அற்ற திண்ணிய அறிவினையுடையவர், ''யாம் அரசனால் விரும்பி ஏற்றுக்கொள்ளப்பட்டோம்,'' என்று எண்ணி, விரும்பாதனவற்றைச் செய்யமாட்டார்.

கொளப்பட்டேம் - (அரசனால் விரும்பி) ஏற்றுக் கொள்ளப்பட்டோம்; கொள்ளாத - அரசனால் விரும்பி ஏற்றுக்கொள்ளப் படாத செயல்கள்; துளக்கம் - உள்ளக் கலக்கம்; காட்சி - அறிவு. 699

10. பழையம் எனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்.

'யாம் எம் அரசனுக்கு மிகவும் பழைமையானவராய் உள்ளோம்' என்று எண்ணிப் பழைமை பாராட்டித் தமக்குத் தகுதி அல்லாதவற்றைச் செய்து நட்புரிமை கொண்டாடுதல் அமைச்சருக்குக் கேட்டினைத் தரும். 700

## 71. குறிப்பறிதல்

1. கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி.

ஒருவர் தம் உள்ளத்தில் கொண்டுள்ள கருத்தை அவர் கூறாமலேயே அவர்தம் முகத்தாலும் அவர்தம் கண்ணாலும் எண்ணி அறிய வல்லவன் எந்தக் காலத்தும் வற்றாத கடல் சூழ்ந்த உலகத்துக்கு ஓர் அணிகலன் ஆவான்.

கூறாமை - வாயால் விளக்கிச் சொல்லாமை; நோக்கி - கண், முகம், முதலியவைகளைக் கண்டு; குறிப்பறிதல் - ஒருவர் சொல்லாமலேயே அவர்தம் முகக் குறிப்பைக் கொண்டு தெரிந்துகொள்ளுதல்; வையக்கு - உலகத்துக்கு. 701

2. ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

ஒருவன் உள்ளத்தில் உள்ளதை அவன் முகத்தாலும் கண்ணாலும் ஐயமில்லாமல் உறுதியாக அறிய வல்லவனை (அவன் மனிதனே ஆனாலும்) தெய்வத்தோடு ஒப்பவனாக மதித்தல் வேண்டும்.

விளக்கம்; குறிப்பறிதலில் சந்தேக விபரீதமின்றி உள்ளது உள்ளவாறு அறிதல் வேண்டும் என்பதும், அவ்வாறு அறிய வல்லவன் தெய்வத்துக்குச் சமமானவன் என்று தெரிவிப்பதும் குறிப்பறிதலின் சிறப்பினைத் தெரிவிக்கின்றன. 702

3. குறிப்பின் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாதும் கொடுத்தும் கொளல்.

முகக் குறிப்பினாலே உள்ளக் கருத்தை அறியவல்லவரை உறுப்பினுள் அவர் வேண்டுவது யாதாயிருப்பினும் அதனைக் கொடுத்துத் தனக்குத் துணையாகக் கொள்ளுதல் வேண்டும்.

இக்குறள் அரசர்க்கு ஏற்றது என்று உரையாசிரியர்கள் கருதுகின்றனர். உறுப்பினுள் என்பதற்கு நாட்டின் இன்றியமையா உறுப்புக்களான யானைப் படை, குதிரைப் படை முதலிய படைகளைக் குறிப்பர். சிலர் உடலிற் சிறந்ததாகிய கண்போன்ற உறுப்பினையும் குறிப்பர். 703

4. குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
உறுப்போர் அனையரால் வேறு.

ஒருவர் மனத்தில் எண்ணியதை அவன் கூறாமலேயே அறிந்து கொள்ள வல்லவரோடு மற்றவர் உறுப்பால் ஒத்தவராக இருந்தாலும் அறிவால் வேறுபட்டவரே யாவர்.

கூறாமலேயே அறிந்துகொள்ள இயலாதவர் மனிதர் அல்லர்; அறிவிற் குறைந்த விலங்கு அல்லது மரம் முதலியவைகட்குச் சமமானவர் என்பதை வள்ளுவர் தம் உள்ளக் குறிப்பாலேயே விளக்குதல் அறிந்து இன்புறத்தக்கது. 704

5. குறிப்பின் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்
என்ன பயத்தவோ கண்?

குறித்ததைக் காணவல்ல கண்களால் பிறர் உள்ளக் குறிப்பை அறிய இயலாவிட்டால் உறுப்பினுள் சிறந்த அக் கண்களால் என்ன பயன்?

உணராவாயின் - உணர இயலாதனவாயின், பயத்தவோ - என்ன பயனைச் செய்வன? பயன் சிறிதும் இல்லை.

குறிப்பறியாதார் கண்ணிருந்தும் குருடரே யாவார் என்பது கருத்து. 705

6. அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.

தன்னை அடுத்த பொருளின் வடிவத்தைக் காட்டவல்ல பளிங்குபோல ஒருவனுடைய நெஞ்சில் மிகுந்துள்ள குணத்தை முகமானது காட்டிக் கொடுத்துவிடும்.

அடுத்தது - தனக்கு எதிரில் இருப்பது; கடுத்தது - மிகுந்து தோன்றுவது. 706

7. முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும்.

ஒருவன் உள்ளமானது ஒன்றை விரும்பினாலும் வெறுத்தாலும் அதனை அவனுடைய முகம் முற்பட்டுத் தெரிவித்து விடும். ஆதலால், அம்முகத்தைவிட அறிவின் மிக்கது வேறொன்று உண்டோ? இல்லை.

முதுக்குறைவு - பேரறிவு; உவத்தல் - விரும்புதல்; காய்தல் - வெறுத்தல்; முந்துறும் - முற்பட்டுத் தெரிவித்து விடும். 707

8. முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி
உற்றது உணர்வார்ப் பெறின்.

ஒருவனுடைய உள்ளத்தைக் குறிப்பாலறிந்து அவனுக்கு உற்றதை உணரக் கூடியவரைப் பெற்றால் அவன் அவர் முகம் நோக்கி நிற்றல் ஒன்றே போதும். வாயினாலோ செய்கையினாலோ வேறு எத்தகைய குறிப்பினாலோ அவருக்கு அவன் தன் நிலையைத் தெரிவிக்க வேண்டியதே யில்லை என்பது குறிப்பு. 708

9. பகைமையும் கேண்மையும் கண்உரைக்கும் [கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின்.

ஒருவருடைய கண்நோக்கின் வேறுபாட்டை உணரும் திறமுடையவரைப் பெற்றால் அவருக்கு மற்றையவரின் பகைமையையும் நட்பையும் அவர் கண்களே அறிவித்து விடும்.

கண்களின் நோக்கு வேறுபாட்டைக் கொண்டு உள்ளத்து நிகழ்வதை அறியவல்லவர் பிறர் பகையையும் நட்பையும் கண்களாலேயே அறிந்துகொள்வர் என்பது கருத்து. 709

10. நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்லது இல்லை பிற.

'யாம் நுட்பமான அறிவுடையோம்' என்று சொல்லிக் கொள்ளத்தக்க அறிவுடைய அமைச்சர் முதலியோர், பிறர் உள்ளக் கருத்துக்களை அறிந்துகொள்ளப் பயன்படுத்தும் அளவுகோல் யாது என்று ஆராய்ந்து பார்க்குங்கால், அது கண்ணைத் தவிர்த்து வேறு எத்தகைய கருவியும் இல்லையாம்.

'கண்' என்று பொதுவாகக் கூறியிருப்பதால் தம்முடைய கண், பிறருடைய கண் இரண்டனையும் குறிக்கும். நுண்ணறிவு பெற்ற ஒருவர் மற்றொரு நுண்ணறிவு பெற்றவர் தம் கருத்தை அறிந்து கொள்ளப் பயன்படுவது கண்ணே என்றும் பொருள் கொள்ளலாம். சொல், செயல் முதலியவற்றால் கருத்தை மறைக்க இயலும். ஆனால், கண் என்னும் அளவு கோல் கருத்தை அறிந்துகொள்ளுவதில் சிறிதும் தவறாது. இச்செயல் அறிஞரால்தான் இயலும் என்பதையும் வள்ளுவர் குறிப்பதைக் கூர்ந்து நோக்க வேண்டும். 710

## 72. அவையறிதல்

1. அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகைஅறிந்த தூய்மை யவர்.

சொற்களின் வகைகள் பலவும் அறிந்த தூய்மையினையுடைய அமைச்சர், அரசர்மாட்டு இருக்கும் சபையாரின் மரபினை அறிந்து அவ்விடம் சொல்லத் தகுவனவற்றை ஆராய்ந்து பார்த்துச் சொல்லுதல் வேண்டும்.

அவை அரசரைச் சார்ந்த அறிஞர்களும் பெரியோர்களும் குழுமியிருக்கும் இடம், அரசசபை; சொல்லின் தொகை-சொற்களின் வகைகள். அஃதாவது செஞ்சொல், இலக்கணைச் சொல், குறிப்புச் சொல், முதலியன பலவும் அடங்கிய சொற்குழு; தூய்மையவர் - இங்கே இச்சொல் குற்றமற்ற உள்ளம் வாய்ந்த மந்திரிகளைக் குறிக்கும். 711

2. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்.

வெளிப்படைச் சொல், குறிப்புச் சொல் முதலிய பலவகைச் சொற்களின் ஒழுங்கினை ஆராய்ந்து அறிந்த நன்மையினை உடையவர், தாம் ஒன்றைச் சொல்லத் தொடங்குமுன் அந்தச் சபையின் தன்மையினை எண்ணிப் பார்த்துக் குற்றம் நேராவண்ணம் ஆராய்ந்து சொல்லுதல் வேண்டும்.

இடைதெரிதல் - இடம், காலம் முதலியன அறிதல்; சொல்லின் நடைதெரிதல் - இன்ன சொல் இன்ன இடத்துக்கு ஏற்ற சொல் என்பதை அறிதல். 712

**3. அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்**
**வகையறிவார் வல்லதூஉம் இல்.**

அவையின் தன்மை அறியாமல் ஒன்றைச் சொல்லுதலை மேற்கொள்பவர் சொல்லின் கூறுபாடும் அறியார்; கற்று வல்ல கலையும் அவர்க்கு இல்லை.

சொல்லின் வகையறியும் திறனும் சொல்வன்மையும் இருந்தும் ஒருவர் சபையின் தன்மையறியாது பேசுவாராயின் அவை இரண்டும் இல்லாதவராக எண்ணப்படுவர். 713

**4. ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் வெளியார்முன்**
**வான்சுதை வண்ணம் கொளல்.**

அறிவிற் சிறந்தவர் முன்பு தாமும் அறிவிற் சிறந்தவராக இருந்து பேசுதல் வேண்டும்; அறிவில்லாதவர் குழுமியுள்ள அவைக்களத்திலே வெண்சுண்ணம்போல் இருத்தல் வேண்டும்; அஃதாவது ஒன்றும் அறியாதவர் போல் இருத்தல் வேண்டும்.

ஒளியார்-ஒள்ளியார், அறிவில் மிகுந்தவர்; வெளியார்-வெள்ளிய அறிவுடையார், அஃதாவது அறிவில்லாதவர்; வான்சுதை - வெண்மையான சுண்ணாம்பு.

**கருத்து :** அறிவில்லாதவர் முன்பு சிறந்த நுண்ணிய கருத்துக்கள் பயன்படா; அவர்கள் பேசும் சொற்கள் போன்ற சொற்களைக் கொண்டே அவர்கட்கு ஏற்றவாறு பேசுதல் வேண்டும். 714

**5. நன்றென்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்**
**முந்து கிளவாச் செறிவு.**

தம்மைக் காட்டிலும் சிறந்த அறிஞர்கள் குழுமியுள்ள அவைக்களத்தின் முன்பு தாம் முன்னதாக ஒன்றும் பேசாமல் நாவடக்கத்துடன் இருத்தல் நன்மை என்று சொல்லப்பட்டவை எல்லாவற்றுள்ளும் மிகவும் சிறந்தது.

முதுவர் - தம்மினும் அறிவிற் சிறந்தவர்; முந்து - முற்பட்டு; கிளவா - பேசாத; கிளத்தல் - சொல்லுதல்; செறிவு - நாவடக்கம்.

**கருத்து :** வயது, அறிவு, குணம் முதலியவற்றால் தம்மினும் மூத்தவர்கள் ஒன்றைக் குறித்துப் பேசிய பின்பே தாமும் பேசுதல் வேண்டும். 715

**6. ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்னர் இழுக்கு.**

விரிவான நூற்பொருளைக் கேட்டு அவற்றின் உண்மையை ஆராயவல்லவர் குழுமியுள்ள அவையின்கண் சொற்சோர்வுபடுதல், ஒழுக்க நெறியிலே சிறந்தவர் அந்த நெறியிலிருந்து தவறி நடந்தால் அஃது எத்தகைய குற்றமாகக் கருதப்படுமோ அத்தகைய குற்றமாகக் கருதப்படும்.

ஆறு – நல்லொழுக்கம்; நிலை தளர்தல் – நல்வழியிலிருந்து தவறி நடத்தல்; வியன்புலம் – விரிந்த அறிவு, ஆகன்ற நூற் பொருள்கள்; ஏற்று – உட்கொண்டு; இழுக்கு – குற்றம்.

'ஆற்றின் நிலை தளர்ந்தற்றே' என்பதற்கு 'ஆற்று வெள்ளத்திலே அகப்பட்டுக் கரையேற இயலாமல் தவிக்கும் ஒருவன் நிலைபோன்றது' என்று பொருள் கூறுவாரும் உண்டு. 716

**7. கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல்தெரிதல் வல்லா ரகத்து.**

குற்றம் நீங்கச் சொற்களை ஆராய்வதில் வல்ல அறிஞர்கள் குழுமியுள்ள அவைக்களத்தின் முன்பு சொல்லுவதால் பல நூல்களையும் கற்று அதன் பயனையும் அறிந்துள்ளவரது கல்வி, விளக்கமுற்றுத் தோன்றும். 717

**8. உணர்வ துடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று.**

பொருள்களைத் தாமே தெரிந்தறியும் அறிவுடையார் முன்பு ஒன்றைச் சொல்லுதல் தானே வளர்வதற்குரிய பயிருள்ள பாத்தியில் நீரினை ஊற்றியது போலாகும்.

தானே வளர்தற்குரிய கல்வி கற்றார் அவைக்கண் சொல்லுவதால் மேலும் சிறந்து வளரும் என்பது கருத்து. 718

**9. புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்ல
நன்கு செலச்சொல்லு வார். [வையுள்**

நல்ல அறிஞர்கள் குழுமியுள்ள அவையின்கண் நல்ல பொருளை, உள்ளத்தில் நன்கு பதியுமாறு பேசவல்லவர், அறிவில்லாதவர் கூட்டத்தில் மறந்தும் பேசுதல் கூடாது.

புல்லவை - கல்வி அறிவில்லாதவர் குழுமியுள்ள சபை; பொச்சாந்து - மறந்து; செலச் சொல்லுதல் – மனத்தில் பதியும்படி சொல்லுதல். 719

**10. அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தம்கணத்தர்**
**அல்லார்முன் கோட்டி கொளல்.**

அறிவாலே தம் இனத்தவர் அல்லாதவர் சபையில் அறிவுடையார் ஒரு பொருள்பற்றிப் பேசுதல் தூய்மை யில்லாத முற்றத்தில் சிந்திய அமிர்தம் போன்றது.

அங்கணம் - தூய்மையில்லாத முற்றம், சேறு நிறைந்த இடம், கழிவுநீர் செல்லும் வாய்க்கால் என்றும் கூறலாம்; உக்க – சிந்திய; அமிழ்து - பால், தேவாமிர்தம்; தம் கணம்– தம் இனத்தவர்; கோட்டி கொளல் - கூட்டத்தில் கலந்து பேசுதல். 720

## 73. அவையஞ்சாமை

**1. வகைஅறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்**
**தொகைஅறிந்த தூய்மை யவர்.**

சொல்லைத் தொகுத்துரைக்கும் முறையினை அறிந்த தூய்மை உள்ளம் வாய்ந்தவர்கள், கற்றுவல்லோர் அவை, கல்லாதவர் அவை என்னும் அவையின் வகையினை அறிந்து, வல்லவரின் அவையில் பேசும்போது அச்சங் காரணமாக வாய்தவறிப் பிழைபடப் பேசமாட்டார்.

வகை அறிதல் - கல்வியறிவுடையோர் கூடியுள்ள சபை அல்லது கல்வி அறிவு இல்லாதவர் கூடியுள்ள சபை என்பதை அறிந்து கொள்ளும் வல்லமை; வல்லமை - கற்று வல்லவர் கூடியுள்ள சபை; வாய் சோர்தல் - அச்சங் காரணமாகத் தவறான சொற்களைச் சொல்லி விடுதல்; சொல்லின் தொகை – சொற்களின் வகைகள். 721

**2. கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்**
**கற்ற செலச்சொல்லு வார்.**

கற்றவரின் முன்பு தாம் கற்றவைகளை அவர் தம் உள்ளத்தில் பதியுமாறு சொல்லவல்லவர் கற்றவர்களுள் கற்றவராக மதிக்கப்படுவார். 722

3. பகையகத்துச் சாவார் எளியர்; அரியர்
அவையகத்து அஞ்சா தவர்.

பகைவர் உள்ள போர்க்களத்தின் இடையே அஞ்சாது சென்று உயிர் விடுவோர் உலகத்திலே பலர் உள்ளனர். ஆனால் கற்றார்தம் அவைக்கண்ணே அஞ்சாது சென்று பேச வல்லவர் சிலரே ஆவர்.

எளியர் - இங்கே எளியர் என்னும் சொல் மிகப் பலராய் உள்ளோரைக் குறிக்க வந்துள்ளது. அரியர் - அருமையாகக் காணக் கூடியவர்; சிலர். 723

4. கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற
மிக்காருள் மிக்க கொளல்.

பல நூல்களையும் கற்றார் அவைக்கண் தாம் கற்றவற்றை அவர் உள்ளத்தே நன்கு பதியும்படி எடுத்துச் சொல்லித் தாம் சொன்னவைகளைக் காட்டிலும் சிறந்த பொருள்களைத் தம்மினும் மிக்காராகிய அக் கற்றாரிடமிருந்து மிகுதியாக அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

கற்றார்முன் அஞ்சாமல் எடுத்துச் சொல்வதாலும் அக் கற்றோரிடமிருந்து நாணாமல் கேட்டறிந்து கொள்ள முந்துவதாலும் இக்குறள் அவையஞ்சாமையின் பாற்படுகிறது. 724

5. ஆற்றின் அறிவறிந்து கற்க அவையஞ்சா
மாற்றம் கொடுத்தற் பொருட்டு.

அளவை நூலாகிய தருக்க சாத்திர நூலை அமைச்சர்கள் சொல்லிலக்கண நெறியின்படி அறிந்து கற்றல் வேண்டும். அவ்வாறு கற்றல் எதற்காக எனில் அது வேற்று வேந்தரிடை அஞ்சாது அவர் சொல்லிய சொற்களுக்குத் தக்க வண்ணம் விடைதருதற் பொருட்டே ஆகும்.

ஆறு - வழி அல்லது நெறி; சொல்லிலக்கணம் நன்கு அறிந்த பிறகே அளவை நூலாகிய தருக்க நூலை அறிந்து கொள்ள வேண்டுமாதலின் தருக்க இலக்கணத்துக்குச் சொல்லிலக்கணம் வழியாக உள்ளது. மாற்றம் - சொல்; மாற்றம் கொடுத்தல் - பதில் கூறுதல். 725

6. வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு நூலோ
நுண்ணவை அஞ்சு பவர்க்கு. [டென்

அஞ்சாத நெஞ்சம் படைத்த வீரர்களல்லாத கோழைகட்கு வாளோடு என்ன தொடர்பு உண்டு? அதுபோன்றே நுண்ணறிவு வாய்ந்த அறிஞர்கள் கூடியுள்ள சபையில் எழுந்து பேச அஞ்சுபவர்களுக்கு அவர்கள் கற்ற நூலோடு என்ன தொடர்பு உண்டு?

நூலறிவு இருந்தும் அவைக்கு அஞ்சுதலின் அந்த அறிவு பயனற்றது ஆகின்றது. வன்கண்ணர் - அஞ்சாத நெஞ்சம் படைத்த வீரர்; நுண்ணவை - நுண்ணறிவு வாய்ந்த அறிஞர்கள் குழுமியுள்ள சபை. 726

7. பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சு மவன்கற்ற நூல்.

அவையின்கண் சென்று பேச அஞ்சுபவன் கற்ற நூல், பகைவரின் போர்க்களத்தில் அஞ்சுகின்ற பேடியின் கையில் உள்ள கூர்மையான வாளுக்குச் சமமே ஆகும்.

பகையகம் - போர்க்களம்; பேடி - பகைவன் எதிர்த்துப் போர்புரிய அஞ்சும் கோழை, பெண்ணியல்பு மிகுந்த ஆடவன்; ஒள்வாள் - கூர்மை தங்கிய வாளாயுதம். 727

8. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்குசெலச் சொல்லா தார்.

நல்ல அறிஞர்கள் குழுமியுள்ள அவையின்கண் சிறந்த பொருள்களை அவர்கள் உள்ளத்தில் நன்கு பதியும்படி சொல்ல இயலாதவர், பல அரிய நூல்களைக் கற்றாராயினும் உலகுக்குப் பயனில்லாதவரே ஆவர். 728

9. கல்லா தவரின் கடைஎன்ற கற்றறிந்தும்
நல்லார் அவைஅஞ்சு வார்.

பல அரிய நூல்களை நன்றாகக் கற்றறிந்தபோதிலும் நல்ல அறிஞர்கள் குழுமியுள்ள அவையின்கண் பேச அஞ்சுகின்றவர் ஒன்றும் கல்லாதவரைவிடக் கடைப்பட்டவரே ஆவர். 729

**10. உள்ளெனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சி**
**கற்ற செலச்சொல்லா தார்.**

கற்று வல்லார் அவைக்களத்திற்கு அஞ்சித் தாம் கற்றவைகளைக் கேட்பவர் உள்ளத்தில் பதியுமாறு சொல்ல முடியாதவர், உயிர் வாழ்ந்துள்ளார் எனினும் இறந்தாரோடு ஒப்பவே மதிக்கப்படுவார். 730

## 74. நாடு

**1. தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்**
**செல்வரும் சேர்வது நாடு.**

குறையாத விளைபொருளும், குணநலஞ்சான்ற அறிஞர்களும், கேடில்லாத செல்வமுடையோரும் கூடிப் பொருந்தியுள்ள இடமே நாடாகும்.

தள்ளா விளையுள்- குன்றாத விளையுளைச் செய்யும் உழவர் என்பர் பரிமேலழகர்; மழையில்லாத காலத்திலும் சாவி போகாத நிலம் என்று மணக்குடவர் கூறுவர். 731

**2. பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்**
**ஆற்ற விளைவது நாடு.**

பெரும் பொருள் வளத்தால் பலராலும் விரும்பப்பட்டதாகிக் கேடில்லாமையோடு மிகுதியாக விளைப்பொருளைத் தருவதே நாடாகும்.

பெட்டக்கதாகி-விரும்பப்படுவதாகி; பெட்பு-விருப்பம்; அருங்கேடு - கெடுதியில்லாமை, அஃதாவது மிக்க மழை, மழையின்மை. எலி, விட்டில், கிளி, பன்றி, யானை, பகைவரால் கொள்ளை போதல் முதலியவற்றால் அழிவின்மை; ஆற்ற- மிகுதியாக. 732

**3. பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு**
**இறைஒருங்கு நேர்வது நாடு.**

பிற நாட்டு மக்கள் பலப்பல காரணங்களால் ஒருங்கே வந்து குடியேறினாலும் அதனால் நேரத்தக்க பெரிய சுமையையும் தாங்கிக்கொண்டு தன் அரசனுக்குரிய வரிப்பணத்தையும் குறைவின்றித் தரவல்லதே நாடாகும்.

பொறை- சுமை; இறைவன்- அரசன்; இறை- வரி; ஒருங்கு- முழுவதும்; நேர்வது- தருவது.

பொறையொருங்கு தாங்குதலாவது ஏனைய நாடுகளில் உள்ள குடிகள் போர் காரணமாகவோ, கொடிய பஞ்சங் காரணமாகவோ திரண்டு தன் நாட்டுக்கு வந்தால் தாங்கிக் கொள்ளுதல். 733

**4. உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு.**

மிக்க பசியும், நீங்காத நோயும், அயல் நாடுகளிலிருந்து வந்து தாக்கி அழிவு செய்யத்தக்க பகையும் தன்னிடம் சேராமல் இனிது நடப்பதே நாடாகும். 734

**5. பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும்
கொல்குறும்பும் இல்லது நாடு. [வேந்தலைக்கும்**

மாறுபட்ட கொள்கைகளையுடைய பல்வகையான கூட்டங்களும், உடனிருந்தே பாழ்படுத்தும் உட்பகையும், அரசனைத் துன்புறுத்தும் கொலைத் தொழில் பொருந்திய குறும்பரும் இல்லாததே நாடாகும். 735

**6. கேடறியாக் கெட்ட இடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டின் தலை.**

பகைவரால் கெடுதி அடையாததாய், அங்ஙனம், கெட்டாலும், செழுமையில் குன்றாததாய் உள்ள நாடே எல்லா நாட்டிலும் சிறந்த நாடு என்று அறிஞர் கூறுவர். 736

**7. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு.**

நிலத்தின்மேல் உள்ள நீர், நிலத்தின் கீழ் உள்ள ஊற்று நீர் ஆகிய இருவகை நீர் நிலைகளும் வாய்ப்பு உடைத்தாக விளங்கும் மலையும், அந்த மலையிலிருந்து பெருகிவரும் ஆற்று நீரும், வலிய கோட்டையும் நாட்டுக்குச் சிறந்த உறுப்புக்களாகும்.

இருபுனல் - பூமிக்கு மேலிருந்தும், அடியிலிருந்தும் கிடைக்கத்தக்க இருவகை நீர்; மழை நீர், ஊற்று நீர்

என்றும் கூறலாம். வருபுனல் - ஆற்று நீர்; வல்லரண் - உறுதி வாய்ந்த கோட்டை; உறுப்பு - அவயவம். 737

**8. பிணிஇன்மை செல்வம் விளைவின்பம் ஏமம்**
**அணிஎன்ப நாட்டிற்கிவ் வைந்து.**

நோயில்லாதிருத்தல், செல்வமுடைமை, விளைவுடைமை, இன்ப வாழ்வு, நல்ல பாதுகாப்பு ஆகிய இவை ஐந்தும் நாட்டிற்கு அழகு என்று கூறுவர். 738

**9. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல**
**நாட வளம்தரும் நாடு.**

தேடி வருந்தாமல் எளிதில் கிடைக்கத்தக்க செல்வத்தையுடைய நாடுகளே சிறந்த நாடுகள் என்று நூலோர் சொல்லுவர்; தேடி முயன்றே பொருள் பெறத்தக்க நாடுகள் சிறந்த நாடுகள் ஆகமாட்டா.

நாடா வளம் - தேடி வருந்தாமல் எளிதில் கிடைக்கத் தக்க செல்வம்; நாட - தேட. 739

**10. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே**
**வேந்தமைவு இல்லாத நாடு.**

மேற்சொன்ன வளங்களெல்லாம் உடையதாக இருந்தாலும் வேந்தனோடு ஒற்றுமையாக வாழ இயலாத குடிகளையுடைய நாடு பயன் சிறிதும் இல்லாத நாடே ஆகும்.

வேந்து அமைவு என்பதற்குக் குடிகள் அரசனிடம் அன்புடையராதலும், அரசன் குடிகளிடம் அருளுடையனாதலும் ஆகிய இரண்டும் அடங்கும் என்று பரிமேலழகர் விளக்கம் தருவர். 740

## 75. அரண்

**1. ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தன்**
**போற்று பவர்க்கும் பொருள்.**

பிறர்மேல் படையெடுத்துச் செல்வார்க்கும் அரண் சிறந்தது; தம்மேல் படையெடுத்து வருவார்க்கு அஞ்சித் தம்மைப் பாதுகாத்துக் கொள்பவர்க்கும் அரண் சிறந்தது.

அரண் - பகைவரால் துன்பம் நேர்ந்தபோது அரசனுக்கும், சேனைக்கும் பிறருக்கும் பாதுகாப்பாக இருப்பது; ஆற்றுபவர் - பகைவர்மேல் படையெடுத்துச் செல்பவர்; போற்றுபவர் - தம்மைப் பாதுகாத்துக் கொள்பவர். 741

2. மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழல்
காடும் உடையது அரண்.

மணிபோல் தெளிந்த நீரும், வெட்டவெளியான நிழலும், மலையும், அழகிய நிழலையுடைய காடும் உடையதே அரணாவது.

நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் ஆகிய இவை நால்வகை அரண்களாகும். 742

3. உயர்வகலம் திண்மை அருமைஇந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல்.

உயர்வு, அகலம், உறுதி, பகைவர் அணுகுவதற்கு அருமை ஆகிய இந்நான்கும் பொருந்தியதே அரண் என்று நூலோர் கூறுவர்.

உயர்வு-ஏணியாலும் அடைய முடியாது; அகலம் அடிப்பாகம் அகன்றிருத்தல்; திண்மை - உறுதி; அருமை - பொறி முதலியவைகளால் நெருங்க முடியாத அருமை; இது மதிலரணின் சிறப்புக் கூறுகிறது. 743

4. சிறுகாப்பின் பேரிடத்த தாகி உறுபகை
ஊக்கம் அழிப்ப தரண்.

பெரிய இடத்தை உள்ளடக்கிக் காக்கவேண்டிய இடம் சிறியதாய்த் தன்னை எதிர்த்து வந்த பகைவர் தம் ஊக்கத்தைக் கெடுக்க வல்லது அரண் ஆகும்.

சிறுகாப்பு - காக்க வேண்டிய இடம் சிறியதாய் இருத்தல்; பேரிடம்-கோட்டைக்குள் இருப்போர் துன்பின்றி இருத்தற்குரிய அகன்ற இடம். 744

5. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்
நிலைக்கெளிதாம் நீரது அரண்.

எதிரியால் கைப்பற்றப்படுவதற்கு அருமையுடைய தாய்ப் பல்வகை உணவுப் பொருள்களையும் தன்னகத்தே உடையதாய் உள்ளிருந்து போர்புரிதற்கு எளிதாகிய தன்மையுடையது அரண்.

கூழ்-உணவு; நீரது-தன்மையுடையது. 745

6. எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துதவும்
நல்லாள் உடையது அரண்.

கோட்டைக்குள்ளே தங்கி யிருப்பவர்கட்கு இன்றியமை யாது வேண்டிய எல்லாப் பொருள்களும் குறைவறப்பெற்ற தாய், போர் நிகழும்போது உள்ளிருந்து போர்புரிந்து காத்தற்குரிய சிறந்த வீரர்களையும் உடையது அரண். 746

7. முற்றியும் முற்றா தெறிந்தும் அறைப்படுத்தும்
பற்றற் கரியது அரண்.

கோட்டையை முற்றுகையிட்டும், முற்றுகையிடாமல் கோட்டைக்கு வெளியே இருந்து போர் செய்தும், கோட்டை மதில்களைப் பல்வகைச் சூழ்ச்சிகளால் துளைத் தும் இடித்தும் வேறு என்ன செய்தும் கைப்பற்ற முடியாத அருமையுடையது அரணாகும்.

அறைப்படுத்தல்-பல்வகைச் சூழ்ச்சிகளால் கோட்டை யைக் கடக்க முயலுதல், சதி செய்தல், கீழறுத்தல். 747

8. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வது அரண்.

கோட்டையை முற்றுகையிட வந்து சூழ்ந்து கொண் டுள்ள பகைவரை முற்றுகையிடாவண்ணம் தடுத்துக் காக்கவல்லதும் கோட்டைக்குள் இருப்போரை வெற்றி பெறுமாறு செய்ய வல்லதும் அரண் ஆகும்.

முற்றாற்றி முற்றியவர்-கோட்டையை முற்றுகையிடச் சூழ்ந்து கொண்டுள்ள பகைவர்; பற்றியார் பற்றாற்றி- கோட்டையைப் பற்றாகக் கொண்டுள்ளவரை அந்தக் கோட்டையை விடாமல் இருக்கச் செய்து. 748

9. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்டது அரண்.

கோட்டையை முற்றுகையிடும் பகைவர் அழியும் படியாகக் கோட்டைக்கு உள்ளிருப்போர் பலப்பல வீரச் செயல்களைப் புரிந்து சிறக்கும் மாட்சியை உடையது அரணாகும்.

முனைமுகம்-போர்முனை; மாற்றலர்-பகைவர்; சாய-இறந்துபட; வினைமுகம் (கோட்டைக்குள்ளே தங்கியுள்ள வீரர்கள் புரியும்) வினை வேறுபாடுகள்; வீறு எய்தல்-பலப்பல பொறிகளைக் கொண்டு பகைவரை எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுதல் முதலிய போர்ச் செயல்களைச் செய்து சிறப்புறுதல்; வீறு-சிறப்பு; மாண்டது-மாட்சிமைப்பட்டது. 749

**10. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்கண் இல்லது அரண்.**

மேற்சொன்ன எத்தகைய மேன்மைகளையெல்லாம் பெற்றிருந்த போதிலும் போர்புரியும் திறமை இல்லாதாரிடத்தில் உள்ள அரண் பயனில்லாததுஆகும். 750

## 76. பொருள் செயல் வகை

**1. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்லது இல்லை பொருள்.**

ஒரு பொருளாக மதிக்கத் தகாதவரையும், பொருளாகப் பலராலும் மதிக்கப்படச் செய்யும் செல்வத்தையல்லது வேறு சிறந்த பொருள் இவ்வுலகில் இல்லை.

பொருள்-செல்வம்; பொருளல்லவர்-மதிக்கப்படாதார்; அறிவில்லார், குணத்தால் இழிந்தவர், நோயாளர், தொண்டு கிழவர், பகைவர் இன்னோரன்னர். 751

**2. இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு.**

குல உயர்வு, அறிவு, கல்வி, வீரம், அழகு முதலிய பிற நலன்களெல்லாம் பெற்றிருப்பவராயினும் பொருள் இல்லாதவரை எல்லாரும் இகழ்வர்; பிற நலன்களுள் ஒரு சிறிதும் பெறாதவராக இருப்பினும் பொருள் பெற்றுள்ள செல்வரை எல்லாரும் பாராட்டுவர்.

எல்லாரும் எள்ளுவர் - தாய், மனைவி, மக்கள் முதலியோர், அனைவரும் இகழ்வர்; எல்லாரும் செய்வர் சிறப்பு - பகைவர், அயலார் முதலிய அனைவரும் புகழ்வர். சிறப்புச் செய்தல் - புகழ்ந்து பேசுதல், மகிழ்ந்து வரவேற்றல், உபசரித்தல் முதலியன. 752

3. பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று.

பொருள் என்று பலராலும் புகழப்படும் அணையாத விளக்கு ஒருவர் செல்ல எண்ணும் இடங்களுக்கெல்லாம் அவரை அழைத்துச் செல்வதோடு, ஆங்காங்கே பகை என்னும் இருள் சூழ்ந்திருப்பினும் அதனை அடியோடு போக்கி விடும்.

பொய்யா விளக்கு - அணையாத விளக்கு; பொருள் என்பது அழியத்தக்கதாக இருப்பினும் தன்னை உடையவரின் எண்ணத்தை முடித்துவைக்கும் இயல்புடையதாக இருப்பதால் அதனைப் 'பொய்யா விளக்கு' என்றார். 753

4. அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

பொருளைத் தொகுத்தற்குரிய வழியை அறிந்து எவர்க்கும் எத்தகைய துன்பத்தையும் விளைவிக்காமல் தேடிய பொருள் ஒருவருக்கு அறத்தையும் தரும்; இன்பத்தையும் தரும். 754

5. அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

ஒருவர் பொருள் திரட்டத் தொடங்கும்போது அப்பொருளை ஏழைகளிடமிருந்து பெற நேரினும், தமக்குச் சமமானவரிடமிருந்து பெற நேரினும் அவர்கள் உள்ளம் துன்புறா வண்ணம் அருள் உள்ளத்தோடு அதனை அவர்களிடமிருந்து பெறுதல் வேண்டும். அவர்கள் அப்பொருளை அன்போடு தருகின்றனரா என்று எண்ணிப் பார்த்துப் பெறுதல் வேண்டும். இவ்விதம் வாராத பொருளை ஏற்றுக் கொள்ளாமல் நீக்கிவிட வேண்டும்.

அருள் - தாழ்ந்தோர்மாட்டு உயர்ந்தோர் காட்டும் இரக்கம்; அன்பு - சமத்துவமான நிலையிலிருப்போரிட

மிருந்து வெளிப்படும் இன்போடு கூடிய உள்ள நெகிழ்ச்சி; புல்லுதல் - பொருந்துதல், தங்குதல். புரளவிடல் - நீக்கி விடுக, போகவிடுக. 755

6. உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.

இயல்பாகக் குடிமக்கள் வரியாகச் செலுத்தும் பொருளும், சுங்கப் பொருளும், தன் பகைவரிடமிருந்து திறையாகக் கொள்ளும் பொருளும் ஆகிய இவை அரசனுக் குரிய பொருள்களாகும்.

உறுபொருள்-குடிமக்கள் நிலவரியாக ஆறில் ஒரு பங்கு தரும் பொருள். தொகுத்து வைத்தார் இல்லாமற் போக நெடுங்காலம் நிலத்தின்கண் இருந்து பின் கண்டெடுத்த பொருள்; சந்ததி அற்றுப்போக அரசனிடம் வந்து சேர்ந்த பொருள் என்றும் கூறுவர். உல்கு பொருள் - சுங்கப் பொருள், சுங்கப் பொருளாவது, நிலம் மூலமாகவும் நீர் மூலமாகவும், ஓரிடத்திலிருந்து பிறிதோர் இடத்துக்குச் செல் லும் பொருளுக்கு அரசன் தீர்வையாகப் பெறும் பொருள்; ஒன்னார் - பகைவர்; தெறு பொருள் - திறைப்பொருள்; திறை - கப்பங்கட்டுதல். 756

7. அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு.

அன்பென்னும் தாயால் பெற்றெடுக்கப்பட்ட அருள் என்னும் குழந்தை பொருட்செல்வமாகிய செவிலித் தாயால் வளரும்.

அருள் - எத்தகைய தொடர்பும் கருதாமல் யாவரிடத் தும் தோன்றத்தக்க இரக்க குணம்; இது தொடர்புபற்றி வரும் அன்பின் முதிர்ச்சியால் உண்டாவது. ஆதலால், அன்பாகிய தாயிடமிருந்து பிறந்த குழந்தை என்றும், இந்த அருட்குணம் வளர்வதற்குப் பொருள் இன்றியமை யாததாக இருப்பதால் பொருளைச் 'செல்வச் செவிலி' என்றும் கூறினர்; செவிலி - வளர்ப்புத் தாய். 757

8. குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்
உண்டாகச் செய்வான் வினை. [தொன்று

தன் கையில் பொருள் வைத்துக்கொண்டு ஒன்றைச் செய்பவனுடைய செயல், சமவெளியில் நிகழும் யானைப் போரை ஒருவன் மலையின்மீது இருந்துகொண்டு அச்சமும் வருத்தமும் சிறிதும் இன்றிக் கண்டு இன்புறுதற்குச் சமம் ஆகும்.

தன் கைத்து - தன் கையினிடத்தில்; ஒன்று உண்டாகச் செய்வான் - ஒரு தொகைப் பொருளை வைத்துக் கொண்டு ஒரு செயலைச் செய்பவன். 758

9. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரியது இல்.

ஒருவன் பொருளைச் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும்; தன் பகைவரின் செருக்கினைக் கெடுக்கவல்ல கூர்மையான ஆயுதம் அதனைப் போல் வேறொன்றும் இல்லை.

பொருளைச் செய்தல் - பொருளைத் தொகுத்து வைத்துக் கொள்ளுதல்; செறுநர் - பகைவர்; செருக்கு - பெருமிதம், அகந்தை; எஃகு - ஆயுதவகை; கூரியது - கூர்மையானது. 759

10. ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு.

நல்ல வழியில் வந்த பொருளை மிகவும் அதிகமாகத் தொகுத்துக் கொண்டவருக்கு மற்றை அறன், இன்பம் ஆகிய இரண்டும் எளிதில் பெறக்கூடிய பொருள்கள் ஆகும்.

ஒண்பொருள்-ஒள்ளிய பொருள். நல்வழியில் தொகுத்த சிறந்த பொருள்; காழ்ப்ப - மிகுதியாக; காழ்த்தல் - முதிர்தல்; எண்பொருள்-எளியபொருள்கள்; ஏனை என்பது அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றனுள் பிறவாகிய அறமும் இன்பமும் ஆகும். 760

## 77. படைமாட்சி

1. உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையுள் எல்லாம் தலை.

யானை, குதிரை, தேர், காலாள் ஆகிய நால்வகைப் பகுதிகளும் நிறைந்ததாய்ப் போரின்கண் நேரத்தக்க

எத்தகைய இடையூறுகட்கும் அஞ்சாததாய் நின்று பகையை வெல்லத்தக்க படை, அரசனுடைய செல்வங்கள் எல்லாவற்றினும் சிறந்ததாகும்.

உறுப்பு - அங்கம்; இங்கே இச்சொல் யானை, குதிரை, தேர், காலாள் ஆகிய நால்வகைப் பகுதிகளையும் குறிக்கும். ஊறு - துன்பம், இடையூறு; வெறுக்கை - செல்வம். 761

2. உலைவிடத்து ஊறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக்கு அல்லால் அரிது.

படைபலம் குறைந்து அரசனுக்குப் போரின்கண் துன்பம் நேர்ந்தபோது தான் அழிந்து, சிறிதாயிருந்தாலும் எத்தகைய இடையூறுகளுக்கும் அஞ்சாது போர்புரியும் உள்ளத் துணிவு, பரம்பரை பரம்பரையாகப் படைக்கலப் பயிற்சி புரிந்து வரும் மூலப் படைகளுக்கு அல்லது மற்றப் படைகளுக்கு இல்லை.

உலைவு - துன்பம், கேடு; ஊறு — இடையூறு; வன்கண்- அஞ்சா நெஞ்சமுடைமை; தொலைவிடம் - படைகள் அழிந்து குறைவாக உள்ள நிலை; தொல்படை - வழிவழி யாகப் போர்த் தொழில் பயிற்சி பெற்று வந்த பெருமை வாய்ந்த மூலப்படை.

மூலப்படை, [கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப் படை, துணைப்படை, பகைப்படை, என்னும் அறுவகைப் படைகளுள்ளும் மூலப்படையே சிறப்புடையது. 762

3. ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்.

எலியாகிய பகை திரண்டு கடல்போல் ஒலித்தாலும் நாகப் பாம்புக்கு என்ன நேரிடும்? அந்நாகம் மூச்சு விட்ட அளவில் அந்த எலிக்கூட்டம் அழிந்தொழியும்.

அதுபோலப் பெரும் படையாயினும் வலிமையற்ற தாயின் ஆண்மையுடைய ஒருவன் வீரத்துக்கு ஆற்றாது அஃது அழிந்தொழியும்.

ஒலித்தல் - கூச்சலிடல்; உவரி - கடல்; நாகம் - நல்ல பாம்பு என்னும் கொடிய விடமுள்ள பாம்பு; உயிர்த்தல் மூச்சுவிடுதல். அளவினால் பயனில்லை; படைக்கு ஆண்மையே சிறந்தது என்பது கருத்து. 763

4. அழிவின்றி அறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

போரில் பகைவரால் எளிதில் வென்று அழிக்க முடியாததாய்ப் பகைவருடைய சூழ்ச்சி செய்து ஒழிக்கப்படாததாய் வழிவழி வந்த அஞ்சாமையுடையதே படை.

அறைபோகுதல் - பகைவர் தம் சூழ்ச்சியால் நிலை குலையச் செய்தல்; வழிவந்த வன்கண்மை - பரம்பரை பரம்பரையாக வரும் ஆண்மைத் தன்மை. 764

5. கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.

எமனே கோபங்கொண்டு தன்மேல் எதிர்த்து வரினும் ஒன்றாகக் கூடிக்கொண்டு எதிர்த்து நிற்கும் வல்லமை உடையதே படையாகும். 765

6. மறமானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு.

வீரம், மானம், புகழ்பெற்ற முன்னோர் வழிவந்த நன்னடத்தை, தம் தலைவரால் நம்பித் தெளியப்பெற்ற தன்மை ஆகிய நான்கு குணங்களும் படைக்குப் பாதுகாப்பாகும்.

மறம் - வீரம்; மானம் - இழிவு நேர்ந்தபோது உயிர் வாழ எண்ணாத தன்மை; மாண்ட - மாட்சிமைப்பட்ட; வழிச் செலவு - பாரம்பரியமாக வரும் குணம்; தேற்றம் - தெளிவு, நம்பிக்கை; ஏமம் - பாதுகாப்பு. 766

7. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்கும் தன்மை யறிந்து.

தன்னை எதிர்த்துவரும் படையை எதிர்த்து வெல்லும் தன்மையை அறிந்து, பகைவனுடைய தூசிப் படையை எதிர்த்துச் செல்வதே படையாகும்.

தார் - முன்னே கொடி தாங்கிச் செல்லும் படை, அதாவது தூசிப்படை; தானை - சேனை; தலை வருதல் - முன் வருதல்; போர் தாங்கும் தன்மை - இன்ன வகைப் படை வந்தபோது தன்னை எதிர்த்துவரும் படையை இன்ன வகையால் எதிர்த்து வெல்ல வேண்டும் என்னும் தன்மை. 767

8. அடற்றகையும் ஆற்றலும் இல்லெனினும் தானை
படைத்தகையால் பாடு பெறும்.

பகைவனை எதிர்த்துத் தாக்கும் வன்மையும், எதிர்த்த படையை எதிர்த்து நின்று முறியடிக்கும் வல்லமையும் இல்லையானாலும் படை தன் தோற்றப் பொலிவால் பெருமை பெறும்.

படைத்தகை - படையின் தோற்றப் பொலிவு. அஃதாவது யானை, குதிரை, தேர், காலாள் முதலியவற்றை ஒழுங்குபட நிறுத்திவைத்து அழகினை மிகைப்படுத்திக் காட்டுதல்; பாடு - பெருமை. 768

9. சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்
இல்லாயின் வெல்லும் படை.

படைபலம் வரவரக் குறைந்து காணப்படுதலும், நீங்காத வெறுப்பும், வறுமையும் இல்லாமல் இருக்குமானால் அத்தகைய படை வெற்றி பெறும்.

சிறுமை - இழிவாகக் காணப்பெறும் தோற்றம்; செல்லாத் துனிவு - உள்ளத்திலிருந்து என்றும் நீங்காத வெறுப்பு; வறுமை - தரித்திரம். 769

10. நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்கள் இவ்வழி இல்.

ஒரு படையானது நெடுங்காலமாக உள்ள வீரர் பலரை உடையதாக இருந்தாலும், தலைமை தாங்கும் தலைவர் இல்லாதபோது அந்தப் படை இல்லாததற்கே சமமாகும். 770

## 78. படைச் செருக்கு

1. என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை
முன்நின்று கல்நின் றவர்.

பகைவர்களே, என் தலைவன் முன்பு எதிர்த்து நில்லாதீர்கள்; என் தலைவனை எதிர்த்து நின்று சண்டையிட்டு மடிந்து மண்ணில் புதைக்கப்பெற்றுத் தமக்குக் கல் நடப்பெற்றவர் பலர்.

என் ஐ - என் தலைவன்; தெவ்விர் - பகைவர்களே. முன்நின்று - எதிர்த்துப் போர் புரிந்து; கல் நின்றவர் - மண்ணில் புதைக்கப் பெற்று நடுகல் வடிவாய் நிற்பவர்.

இங்ஙனம் வீரன் ஒருவன் தன் ஆண்மையைப் பகைவன் முன் உயர்த்திக் கூறுதலை 'நெடுமொழி வஞ்சி' என்பர். 771

2. கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது.

காட்டில் பதுங்கியிருக்கும் ஒரு முயலைக் குறி பார்த்து அந்தக் குறி தவறாமல் அதைக் கொன்று வீழ்த்திய அம்பினை ஒருவன் பெற்றிருப்பதைக் காட்டிலும் வெட்ட வெளியிலே நின்று தன்னை எதிர்க்கவரும் ஒரு யானையைக் குறி பார்த்து எறிந்த வேல் குறி தவறியதாயினும் அந்த வேலைக் கையில் தாங்கிச் செல்வது சிறந்தது.

ஒரு சிறிய தொழிலைச் செய்து அதில் வெற்றி பெற்றுப் பெருமையடைய முயலுவதைவிடப் பெரிய செயல்களைச் செய்து முடிக்கத் தொடங்கி, வெற்றி பெறாவிட்டாலும் அந்தப் பெரு நோக்கமே சிறந்தது என்பது இக்குறளின் கருத்து. 772

3. பேராண்மை என்ப தறுகண் ஒன்றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு.

பகைவரை அஞ்சாது எதிர்த்துப் போர் புரியும் வீரச் செயலைப் பெருமைமிக்க ஆண் தன்மை என்று அறிஞர் பாராட்டுவர். தன்னை எதிர்த்த அந்தப் பகைவனுக்கு ஏதோ ஒரு காரணத்தால் துன்பம் நேர்ந்தபோது அதையே நல்ல வாய்ப்பாகக் கொண்டு, அவனை வெல்ல எண்ணாமல் அவனுக்கு உதவி புரியும் பெருந்தன்மையை ஆண்மையின் கூர்மை என்பர். அஃதாவது அந்த ஆண்மையிலும் சிறந்ததோர் ஆண்மை என்று அறிஞர் கூறுவர்.

ஊராண்மை - உதவி செய்யுந்தன்மை; அதன் எஃகு - அந்தப் பேராண்மையினும் கூர்மையுடையது. அஃதாவது சிறப்பு வாய்ந்தது; எஃகு - கூர்மை.

இலங்கை வேந்தன் போரில் தோற்றுத் தானைமுழுதும் இழந்து தனியனாக நின்றபோது 'இன்று போய் நாளை

வா' என்ற இராமன் செயலை ஊராண்மைக்குப் பரிமேலழகர் உதாரணம் காட்டுகிறார். இதைத் 'தழிஞ்சி" என்று இலக்கணம் வல்லார் கூறுவர். 773

4. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

தன் கையில் தாங்கியிருந்த வேலை மேல் வந்த யானையின்மீது எறிந்து கொன்று, வருகின்ற யானைக்கு வேறு வேலை தேடி வருகின்றவன் தன் மார்பின்கண் தைத்திருந்த வேலைக் கண்டு பறித்து மகிழ்ச்சி கொள்வான்.

களிறு - ஆண்யானை; மெய் - உடம்பு; இங்கே இச்சொல் மார்பினைக் குறிக்கும்; பறியா - பறித்து, பிடுங்கி. 774

5. விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப் பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு?

பகைவனைச் சினந்து நோக்கிய கண், அப்பகைவன் குறிபார்த்து வேலைக் கொண்டு எறிய முயலும்போது தன் இமைகளைச் சிறிது மூடித் திறந்தாலும் அஃது அஞ்சாமையையுடைய அந்த மாவீரனுக்குத் தோல்வியே யாகும்.

விழித்த கண் - சினந்து நோக்கிய கண்கள்; அழித்து இமைத்தல் - இமைகளைச் சிறிது மூடித் திறத்தல், ஓட்டு - பகைவனுக்கு அஞ்சி ஓடுதல்; வன்கணவர் - வீரத்தில் சிறந்தவர். 775

6. விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் நாளை எடுத்து.

வீரன் தன் வாழ்நாட்களை எண்ணிப் பார்த்து அந்த நாட்களுள் தன் மார்பிலும் முகத்திலும் புண்படாத நாட்களைப் பயனற்ற நாட்களாகவே வைத்து எண்ணிப் பார்ப்பான்.

விழுப்புண் - முகத்திலும் மார்பிலும் பட்ட புண்கள்; வழுக்கினுள் - பயனற்ற நாட்களுள். 776

7. சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

எண்திசையும் பரந்து நிற்கும் புகழை விரும்பி உயிரை விரும்பாத வீரர் தம் காலில் வீரகண்டையை அணிந்து கொள்வது அவருக்கு அழகு செய்யும் தன்மையுடையதாகும். (அவர்களைத் தவிர ஏனையோர் கழலணிதல் அழகுடையதன்று.)

சுழலும் - உலகை முழுதும் சூழ்ந்திருக்கும்; இசை - புகழ்; வேண்டா உயிரார் - உயிரை வேண்டாத வீரர்; கழல் - வீரகண்டை; யாப்பு - அணிந்து கொள்ளுதல்; காரிகை - அழகு; நீர்த்து - தன்மையுடையது. 777

8. உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்
செறினும்சீர் குன்றல் இலர்.

போர் நேர்ந்தால் தம் உயிரின் பொருட்டு அஞ்சாது போர் புரியத் துணியும் வீரர் அரசன் சினந்தாலும் தாம் போர் புரியும் சிறப்பில் சிறிதும் குன்றாதவர் ஆவர்.

உறின் - நேரின்; உறுதல் – தேர்தல் அல்லது தங்குதல்; மறவர் - வீரர்; செறினும் - சினந்தாலும்; சீர் - தம் இயல்பான போர் புரியும் தன்மை. 778

9. இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே
பிழைத்தது ஒறுக்கிற் பவர்.

போர் நிகழ்வதற்கு முன்னர்த் தாம் கூறிய சூளுரை தவறாதபடி போர் புரிந்து உயிர் துறக்கவல்ல வீரரை அவர்தம் சூளுரை தவறியதை எடுத்துக் காட்டிப் பழித்துரைக்க வல்லவர் யாவர்? (அத்தகையோர் புகழ்தற்கே உரியர் என்பது கருத்து.)

இழைத்தது - சூளுரைத்தது; 'யான் இன்னது செய்யேனாயின் இன்னவர் ஆகுக' எனச் சபதங் கூறுதலைச் சூளுரை அல்லது வஞ்சினம் என்பர். இகவாமை - தப்பாமை; பிழைத்தல்-தவறு இழைத்தல்; ஒறுக்கிற்பவர்-தண்டிப்பவர். 779

10. புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து.

தமக்குச் செய்த நன்றிகளை நினைத்துத் தம்மைக் காத்த தலைவரின் கண்கள் நீர் பெருகுமாறு சாகப் பெற்றால் அத்தகைய சாவு இரந்தும் பெற்றுக்கொள்ளத் தக்க பெருமையுடையதாகும்.

புரந்தார் - காப்பாற்றியவர், இங்கே அரசர்; சாக்காடு - சாவு; இரந்து கோள் தக்கது - வேண்டிப் பெற்றுக் கொள்ளத் தக்கது. 780

## 79. நட்பு

1. செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.

நட்பைப்போலச் செய்து கொள்ளுதற்கு அருமையானவை எவை உள்ளன? அத்தகைய நட்பைப் பெற்றுக் கொண்டால் அதுபோலத் தொழிலுக்கு அரிய காவலாய் இருப்பவை எவை உள்ளன?

யா - எவை; வினை - செயல், தொழில்; காப்பு - காவல். 781

2. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு.

அறிவுடையார் நட்புக்கள் பிறைமதி போன்று நாள் தோறும் வளர்ந்துவரும் தன்மையுடையன; அறிவிலார் நட்புக்கள் முழுமதி நாளுக்குநாள் தேய்ந்து வருதல்போல நாள்தோறும் குறையும் தன்மையுடையன.

நிறைநீர - நிறைந்துவரும் தன்மையுடையன; நீர - தன்மையுடையன; நீரவன் என்னும் சொல் இங்கே அறிவுடையவர் என்னும் பொருளில் வந்தது; கேண்மை - நட்பு; மதிபின்நீர - முழுமதிபோன்று தேய்ந்து வரும் தன்மை உடையன; பேதையார் - அறிவில்லாதவர். 782

3. நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

நல்ல நூலில் உள்ள அரிய கருத்துக்கள் படிக்குந் தோறும் கற்போர் உள்ளத்தே புதுமையாகத் தோன்றி இன்பந் தருதல் போன்று நற்குணமுடையார் நட்பானது பழகுந்தோறும் வளர்ந்து இன்பத்தைத் தரும்.

நவிலல் - கற்றல்; நூல்நயம் - நூலில் உள்ள அரிய கருத்துக்கள், அழகுகள் முதலியன; பயிலுதல் - பழகுதல்; பண்பு - நற்குணம்; தொடர்பு - நட்பு. 783

**4. நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்**
**மேற்சென்று இடித்தற் பொருட்டு.**

நட்புச் செய்தல் ஒருவரோடொருவர் எள்ளி நகையாடுதற் பொருட்டு அன்று; தன் நண்பரின் அளவுக்கு மீறிய நடத்தையைக் கண்டால் கண்டித்து அறிவுரை கூறி திருத்துவதற்கே ஆகும்.

மிகுதி - அளவுக்கு மீறிய நடத்தை; அஃதாவது பழியும் பாவமும் விளையத்தக்க பொருந்தாச் செயல்கள்; மேற்சென்று - முன்னதாகச் சென்று; இடித்தல் - கண்டித்துக் கூறுதல். 784

**5. புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்**
**நட்பாங் கிழமை தரும்.**

நட்பாவதற்குப் பலப்பல நாட்கள் சேர்ந்து பழகுதல் வேண்டா; ஒருநாள் கண்டாராயினும், அன்றிக் காணாமலேயே ஒருவருக்கொருவர் குணநலம் அறிந்திருந்தாராயினும் அமையும். அவ்விருவர்தம் ஒத்த உணர்ச்சி மட்டும் இருந்துவிட்டால் அந்த உணர்ச்சியே அவர்கட்கு நட்பாகிய உரிமையை உண்டாக்கும்.

புணர்ச்சி பழகுதல் - சேர்ந்து பலப்பல நாட்கள் பழகுதல்; உணர்ச்சி - அறிவு அல்லது எண்ணம்; கிழமை - உரிமை.

**குறிப்பு :** கோப்பெருஞ் சோழன், பிசிராந்தையார் நட்பு இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். 785

**9. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து**
**அகநக நட்பது நட்பு.**

ஒருவர் முகத்தைக் கண்டு மற்றொருவர் சிரித்து மகிழ்வது மட்டும் நட்பாகாது. அவர்கள் இருவரும் உள்ளத்தோடு உள்ளம் கலந்து உறவாடி மகிழ்வதே நட்பாகும். 786

**7. அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்**
**அல்லல் உழைப்பதாம் நட்பு.**

நண்பன் கேட்டினைத் தரும் தீயவழிகளில் செல்லும் போது அந்த வழிகளிலிருந்து அவனை விலக்கி, நல்ல வழியில் செலுத்தி அவன் துன்பப்படும்போது தானும் துன்பப்படுவதே நட்பாகும்.

அழிவினவை - கேட்டினைத் தரும் தீயநெறிகள்; அழிவின் + நவை என்று பிரித்து அழிவைத் தரும் குற்றங்கள் என்றும் கூறலாம்; ஆறு - நல்வழி; அல்லல் — துன்பம்; உழத்தல் - வருந்துதல். 787

8. உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.

உடுத்திருந்த ஆடை ஒருவன் உடம்பினின்று நெகிழ்ந்த போது அவன் கை உடனே விரைந்து அந்த நெகிழ்ந்த ஆடையைத் தாங்கிக்கொள்வது போன்று நண்பனுக்குத் துன்பம் நேர்ந்தால் அப்போதே சென்று அந்தத் துன்பத்தைப் போக்குவதே நட்பாகும். 788

9. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.

நட்பினுக்குச் சிறந்த நிலை எது என்றால் எக்காலத்தும் மாறுபாடில்லாமல் இயலும் வழிகளிலெல்லாம் உதவி செய்து தாங்கும் உறுதிவாய்ந்த நிலை ஆகும்.

வீற்றிருக்கை - சிறப்பாகத் தங்கியிருக்கும நிலை; கொட்பு — திரிபு, தளர்ச்சி, நிலையின்மை. 789

10. இனையர் இவரெமக்கு இன்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு.

இவர் எமக்கு இத்துணை அன்பினர்; யாம் இவர்க்கு இத்தன்மையுடையோம் என்று ஒருவரை ஒருவர் சிறப்பித்துப் பேசிக் கொண்டாலும் நட்பானது சிறுமைப் பட்டதாகத் தோன்றும். 790

## 80. நட்பாராய்தல்

1. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

நட்புச் செய்யும் குணமுடையவர்க்கு ஒருவரோடு நட்புச் செய்தபின் அந்த நண்பனை விடுதல் முடியாது. ஆதலால், ஆராயாது நட்புச் செய்வதைப் போல் கெடுதியானது வேறில்லை.

வீடுஇல்லை - விடுதலை இல்லை. 791

2. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரம் தரும்.

குணத்தையும் செயலினையும் பலமுறையும் பலவகைகளாலும் ஆராய்ந்து கொள்ளாதவன் கொண்ட நட்பு, முடிவில் தான் இறத்தற்குக் காரணமாகிய துயரத்தை அவனுக்குத் தந்துவிடும். 792

3. குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு.

ஒருவனுடைய குணத்தையும், குடிப்பிறப்பினையும், குற்றத்தையும், குறைவற்ற சுற்றத்தினையும் ஆராய்ந்து அறிந்து அவனோடு நட்புக் கொள்ளவேண்டும்.

குன்றா இனன் என்பதற்குக் 'குற்றமற்ற சுற்றம்' என்றும் பொருள் கூறுவர்; யாக்க - கட்டுக, சேர்த்துக் கொள்ளுக. 793

4. குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு.

நல்ல குடும்பத்திற் பிறந்து தன்னிடத்தில் வரக்கூடிய பழிக்கு அஞ்சும் குணமுடையவனை அவன் விரும்பத்தக்க பொருள்களைக் கொடுத்தேனும் நட்பாகக் கொள்ளுதல் சிறந்தது. 794

5. அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல்.

நல்லதல்லாத ஒன்றைத் தன் நண்பன் செய்யக் கண்டால் அவன் அவ்வாறு செய்ததற்காக அவனே வருந்தி அழக்கூடிய வகையில் எடுத்துச் சொல்லித் தடுத்து, அவன் அவ்வாறு செய்யாதபடி அவனுக்கு உறுதிமொழிகளை வற்புறுத்திக் கூறி, உலக வாழ்க்கையும் அறிந்து உணர்த்த வல்லவர்களுடைய நட்பினை ஆராய்ந்து பெற்றுக் கொள்ளுதல் வேண்டும்.

அல்லது - நல்லது அல்லாதது; அழச்சொல்லுதல்- எண்ணி வருந்தச் செய்தல், 'இடித்து' என்பது வற்புறுத்திக் கூறுதலைக் குறிக்கும் சொல்; வழக்கறிதல்- முன்னோர் காட்டிச் சென்ற நல்வழியை அறிந்திருத்தல். 795

**6. கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை**
**நீட்டி அளப்பதோர் கோல்.**

ஒருவனுக்குக் கேடு வந்த காலத்தும் அதனால் அவனுக்கு ஒருவகை நன்மையுண்டு. அந்தக் கேடு அவன் நண்பர்களின் குணநலன்களைச் செவ்வையாக அளந்து பார்த்துத் தெரிந்து கொள்வதற்கு ஓர் அளவுகோலாகப் பயன்படும்.

கேடாகிய அளவுகோல் நண்பர்களின் உள்ளங்களை ஆய்ந்து அறிந்து கொள்வதற்கு உதவியாக இருப்பதால் கேடும் ஒருவனுக்கு ஒருவகையில் நன்மையே தருகின்றது என்று வள்ளுவர் கூறுகின்றார். 796

**7. ஊதியம் என்பது ஒருவர்க்குப் பேதையார்**
**கேண்மை ஒரீஇ விடல்.**

அறிவில்லாதவர்களுடன் செய்துகொண்ட நட்பிலிருந்து நீங்கியிருப்பது ஒருவனுக்கு இலாபமான செயல் என்றே சொல்லுதல் வேண்டும்.

ஊதியம் - இலாபம்; பேதை - அறிவில்லாதவன்; கேண்மை - நட்பு. 797

**8. உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க**
**அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு.**

ஊக்கம் குறைதற்குக் காரணமான செயல்களை எண்ணாமல் இருத்தல் வேண்டும்; அதுபோலத் தனக்குத் துன்பம் வருங்காலத்துத் தனக்குத் துணையாக இராமல் தன்னைக் கைவிடுவார் நட்பினையும் கொள்ளாதொழிக.

உள்ளம் சிறுகுவ - ஊக்கம் குறைவதற்குக் காரணமாக உள்ள செயல்கள்; ஆற்றறுத்தல் - கைவிடுதல். 798

**9. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை**
**உள்ளினும் உள்ளம் சுடும்.** [அடுங்காலை

ஒருவனுக்குக் கேடுவருங் காலத்து அவனைவிட்டு நீங்குவாரது நட்பானது அவன் தான் இறக்கும்போது அதை எண்ணிப் பார்த்தாலும் அவன் உள்ளத்தைச் சுடும்.

கைவிடுதல் - விட்டு நீங்குதல்; அடுங்காலை - இறக்கும் போது; அடுதல் - சுடுதல்; எமனால் கொல்லப்படுதல். 799

10. மருவுக மாசற்றார் கேண்மைஒன் றீத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு.

குற்றமற்றவர் நட்பினைத் தேடி அடைக; ஒத்த பண்பு இல்லாதவர் நட்பினை ஏதாவது ஒன்றைக் கொடுத்தாயினும் விட்டு நீங்குக.

மருவுதல் - சேர்தல்; ஒருவுக - நீங்குக; ஒப்பிலார் நட்பு - ஒத்த பண்பு இல்லாதவர் நட்பு. 800

## 81. பழைமை

1. பழைமை எனப்படுவ தியாதெனில் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

பழைமை என்று சொல்லப்படுவது எது என்று வினவினால், அது பழகியவர் உரிமையால் செய்வனவற்றைக் கீழ்ப்படுத்தாமல் அதற்கு உடன்படும் நட்பாகும்.

கிழமை - உரிமை; கீழ்ந்திடா நட்பு - தாழ்வுபடுத்தாமல் அதற்கு உடன்படும் நட்பு; கீழ்ந்திடல் - சிதைத்தல், கீழ்ப்படுத்துதல்.

உரிமையால் செய்வன; 1. ஒரு செயலைக் கேளாது செயல். 2. கெடும் வகை செயல். 3. தமக்கு வேண்டுவன தாமே கொள்ளுதல். 4. பணிவு அச்சம் முதலியன இன்மை. இவை முதலாயன என்பர் பரிமேலழகர். 801

2. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்கு
உப்பாதல் சான்றோர் கடன்.

நட்பு என்பதற்குச் சிறந்த அங்கமாக இருப்பது நண்பர் உரிமை பாராட்டுவதே ஆகும் அந்த உரிமைக்கு அன்போடு இடங்கொடுத்தல் சான்றோரின் கடமையாகும்.

உறுப்பு - அவயவம். இங்கே 'நட்புக்கு இன்றியமையாத ஒரு பகுதி' என்பது பொருத்தமான பொருள். கெழுதகைமை - உரிமை, உப்பு - இனிமை. 802

3. பழகிய நட்பெவன் செய்யும் கெழுதகைமை
செய்தாங்கு அமையாக் கடை.

தமக்கு உடன்பாடில்லாததாக இருப்பினும் நட்பின் உரிமை பற்றி ஒருவர் செய்த செயலைத் தாம் செய்தாற் போல எண்ணி, அந்தச் செயலுக்கு உடன்படாவிட்டால் பழகிய நட்பு என்ன பயனைத் தரும்?

செய்தாங்கு அமைதல் - தாம் செய்தது போன்றே எண்ணி ஏற்றுக்கொள்ளுதல்; அமையாக் கடை - உடன் படாவிடின். 803

**4. விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்**
**கேளாது நட்டார் செயின்.**

நண்பர் உரிமைபற்றித் தம்மைக் கேளாமலே ஒன்றைச் செய்தால் அதற்கு முனியாது அதனையும் தாம் விரும்பும் தன்மையோடு போற்றி, அதற்கு உடன்பட்டிருப்பர் அறிஞர்.

விழைதகையால் - விரும்பும் தன்மையால்; வேண்டி - விரும்பி; கெழுதகையால் - உரிமை பற்றி. 804

**5. பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க**
**நோதக்க நட்டார் செயின்.**

எண்ணி வருந்தத்தக்க செயலை நண்பர் செய்தாராயின் அஃது அவருடைய அறியாமை என்றாவது, அன்றி மிக்க உரிமை என்றாவது உணர்தல் வேண்டும். 805

**6. எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்**
**தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.**

நட்பு முறையில் முதிர்ந்து அதன் எல்லைக்கண் நின்றவர்கள் தம்மோடு பழைமையில் மாறுமல் நின்றவர் தம் நட்பினை அவரால் துன்பம் வந்தபோதிலும் கைவிட மாட்டார்கள்.

எல்லை - நட்பின் அளவு அல்லது வரம்பு; துறவார் - நீக்கி விடமாட்டார்; தொலைவிடத்தும் - துன்பம் நேர்ந்தபோதும்; தொலைக்கண் நின்றார் - நெடுங்காலம்தொட்டு நண்பராக இருப்பவர். தொடர்பு - நட்புரிமை. 806

**7. அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்**
**வழிவந்த கேண்மை யவர்.**

அன்புடன் தொன்றுதொட்டுப் பழகிய நட்பினை யுடையவர் தமக்குக் கேடுவிளையத்தக்க செயல்களைத் தம் நண்பர் செய்தாலும் அவரோடுள்ள அன்பிலிருந்து நீங்க மாட்டார்.

அழிவந்த - கேடு விளையத்தக்க; வழிவந்த கேண்மை - தொன்றுதொட்டுப் பழகிய நட்பு. 807

8. கேளிழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கம் நட்டார் செயின்.

பழகிய நண்பர் புரிந்த தவறுபற்றிப் பிறர் சொன்னாலும் அதைக் கேளாமல் நட்பின் உரிமையையே பாராட்ட வல்லவர்களுக்கு அந்த நண்பர் தவறு செய்வாராயின், அந்த நாள் ஒரு நன்னாளாகும்.

கேள் - நண்பர்; இழுக்கம் - குற்றம்; நாள் - இங்கே இச்சொல் 'நல்லநாள்' என்பதைக் குறிக்கும். 808

9. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையும் உலகு.

என்றும் பிரியாமல் பழைமை வாய்ந்த நட்பினையுடையவர் தம் நட்பினைக் கைவிடாதவரை உலகத்தவர் விரும்பிப் போற்றுவர்.

கெடாஅ – பிரியாத அல்லது நட்பின் தொடர்பு அறாத; உலகு – உலகம் அல்லது உலகத்தில் உள்ள பெரியோர்; தலைப்பிரிதல் - விட்டு நீங்குதல். 809

10. விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பின் தலைப்பிரியா தார்.

பழைய நண்பர் தவறு செய்தபோதிலும் அந்த நண்பரிடத்துத் தாம் முன்பு கொண்டிருந்த உரிமைப் பண்பிலிருந்து மாறாதவர் தம் பகைவராலும் விரும்புதற்குரியவராவார். 810

## 82. தீ நட்பு

1. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலின் குன்றல் இனிது.

தமக்கு விருப்பமான ஒன்றை உண்ண விரும்புவோர் எவ்வளவு ஆவலோடு அதை அணுகுவாரோ அவ்வளவு அன்போடு வந்து ஒருவர் பழகினாலும் அவர் தீக்குணம் உடைய

வராக இருந்தால் அத்தகையோர் நட்பு வளர்வதைக் காட்டிலும் தேய்ந்து குறைவதே நல்லது. 811

2. உறின்நட்டு அறின்ஒரூஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என்.

தமக்குப் பயனுள்ளபோது நட்புச் செய்து, பயனில்லாத போது விலகிப் போகும் பொருத்தம் இல்லாதவர்தம் நட்பினைப் பெற்றால் வரும் நன்மை யாது? இழந்தால் வரும் கேடு யாது?

உறின் - பயன் அடையின்; அறின் - பயன்அற்றுவிடின்; ஒரூஉம் - விட்டு நீங்கிவிடும்; ஒப்பிலார் – பொருத்தம் இல்லாதவர், தகுதியற்றவர்; கேண்மை - நட்பு. 812

3. உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர்.

நட்பினால் தமக்கு வரும் பயனை அளந்து பார்க்கும் நண்பரும், அன்பினைக் குறித்துக் கவலை கொள்ளாது பெறுகின்ற பொருளை மட்டும் பெரிதாகக் கொள்ளும் குணம் உடையவரும், பொருளைக் கவரும் திருடரும் தம்முள் ஒப்புமை உடையவராவர்.

அன்பு காரணமாக நட்புக்கொள்ளாமல் பெறும் பயன் காரணமாக நண்பராக இருப்பவர் பொருளைக் கவரும் திருடருக்குச் சமம் ஆவர் என்பது கருத்து.

உறுவது - தமக்குக் கிடைக்கும் பயன்; சீர்தூக்குதல் - அளந்து பார்த்தல்; பெறுவது கொள்வார் – தாம் பெறும் பொருளின்மீதே கண்ணாக இருப்பர்; கள்வர் - திருடர். 813

4. அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை.

போர் இல்லாத காலத்துத் தாங்கிச்சென்று போர் நேர்ந்தபோது போர்க்களத்திலே கீழே தள்ளிவிட்டு ஓடும் அறிவில்லாத குதிரை போன்றவரின் நட்பைப் பெற்றிருத்தலைவிடத் தனிமையாக இருத்தலே சிறந்தது.

அமரகம்-போர் புரியும் இடம்; ஆற்றறுத்தல்-இடையில் கைவிடல், தாங்கிச் செல்வதை ஒழித்துக் கீழே தள்ளி

விட்டுச் செல்லுதல்; கல்லா - கல்வி அறிவில்லாத; மா - மிருகம், குதிரை; நமர் - நண்பர்; தலை-சிறந்தது. 814

5. செய்தேமம் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று.

நட்புச் செய்தும் தமக்குப் பாதுகாவலினைத் தாராத கீழ்மக்களது தீயநட்பு ஒருவருக்கு இருப்பதைவிட இல்லாமல் இருத்தலே நன்று.

ஏமம் - பாதுகாவல்; சாரா - தாராத; புன்கேண்மை - புல்லிய நட்பு, தீயநட்பு. 815

6. பேதை பெருங்கழீஇ நட்பின் அறிவுடையார்
ஏதின்மை கோடி உறும்.

அறிவில்லாதவனுடைய மிகவும் நெருங்கிய நட்பை விட அறிவுடையாரது நட்பில்லாத தன்மை கோடி மடங்கு நல்லது.

பேதை - அறிவில்லாதவர்; பெருங்கழீஇ - மிகவும் நெருங்கிய; ஏதின்மை - நட்பற்ற தன்மை; 'பகைமை' என்றும் பொருள் கூறுவர். 816

7. நகைவகைய ராகிய நட்பின் பகைவரால்
பத்தடுத்த கோடி உறும்.

அன்பு சிறிதும் இல்லாமல் மேலுக்கு மட்டும் சிரித்து விளையாடும் குணமுடையவர்தம் நட்பினும் பகைவரால் வரும் தீங்குகள் பத்துக்கோடி மடங்கு மேலாகும்.

மேலுக்குச் சிறிது நட்புச் செய்வோரால் வரும் நன்மையினும் பகைவரால் வரும் நன்மை பத்துக்கோடி மடங்கு மிகும் என்றும் பொருள் கூறுவர். 817

8. ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

தம்மால் செய்ய இயலும் செயலையும் செய்ய முடியாதபடி கெடுப்பவரின் நட்பினை அவருக்குத் தெரிவிக்காமலேயே விட்டு விலகுதல் வேண்டும்.

ஒல்லும் - இயலும்; கருமம் - செயல்; உடற்றுதல்- கெடுத்தல்; சொல்லாடார் - ஏதும் சொல்லாதவராய்; சோரவுடல் - தளர விடுதல், விட்டு விலகுதல். 818

9. கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

செய்யும் செயல் வேறாகவும் சொல்வது வேறாகவும் இருப்பாரது நட்பு ஒருவருக்குக் கனவிலும் துன்பத்தைத் தரும்.

இன்னாது -இன்பத்தைத் தராதது; அதாவது துன்பத்தைத் தருவது என்பது பொருள்; மன், ஓ என்னும் இரண்டிற்கும் பொருள் இல்லை; இரக்கங் காரணமாக வந்தன என்றும் சொல்லலாம். 819

10. எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றில் பழிப்பார் தொடர்பு.

தனியே வீட்டில் உள்ளபோது நண்பராய் இருந்து பலர் கூடியுள்ள மன்றத்தில் பழித்துப் பேசுவோரின் நட்பினைச் சிறிதும் கொள்ளாமல் தடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

எனைத்தும் - எவ்வளவும், ஒருசிறு அளவும்; குறுகுதல்- அடைதல். ஓம்பல் - தவிர்க, நீங்குக; மனைக்கெழீஇ- வீட்டில் நண்பராக இருந்து; கெழீஇ - நட்புச்செய்து; மன்று - சபை. மன்றம் - பொது இடம்; பழிப்பார்- பழித்துப் பேசுபவர்; தொடர்பு - நட்பு. 820

## 83. கூடா நட்பு

1. சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

உள்ளத்தால் நட்புச் செய்யாமல் புறத்தே பொருந்தி நடப்பவர்தம் நட்பு, தகுந்த இடம் வாய்க்கும்போது ஓங்கி அடித்தற்குப் பயன்படும் பட்டடையாகும்.

சீரிடம்-தகுந்த இடம்; எறிதல்-ஓங்கி அடித்தல்; பட்டடை-கொல்லன் உலைக்களத்தில் உள்ள ஒரு கருவி; நேரா நிரந்தவர்-உள்ளத்தால் நட்புச் செய்யாமல்

புறத்தே பொருந்தி நட்பாயவர். அஃதாவது பகை உள்ளத் தோடு ஒழுகுபவர்; நேரா-(உள்ளத்தால்) கூடாதிருந்து; நிரந்தவர் - (தமக்கு வாய்ப்பு நேரும்வரை வெளிக்கு) நண்பராயிருப்பவர்.

விளக்கம் : கொல்லன் உலைக்களத்தில் உள்ள பட்டடை தக்க சமயம் வாய்க்கும்போது ஓங்கி அடித்தற்கு உதவுவது போல் புறத்தே நண்பர் போல் ஒழுகுவார் செய்யும் நட்பு சமயம் நேர்ந்ததும் தம் எண்ணத்தை முடித்துக் கொள்வதற்கே ஆகும். 821

2. இனம்போன்று இனமல்லார் **கேண்மை மகளிர்**
மனம்போல வேறு படும்.

உறவினர் போல் இருந்து, உறவினர் அல்லாதவராக இருப்பவர் தம் நட்பானது பொது மகளிரின் மனம் போன்று உள்ளொன்று புறமொன்றாக வேறுபட்டு நிற்கும்.

இனம் போன்று இனம் அல்லார்-ஒத்த உள்ளத்தினர் போல இருந்து ஒவ்வாத எண்ணமுடையவர், உற்றார் போல் இருந்து உற்றாரின் வேறுபட்டிருப்பவர்; மகளிர்-இங்கே இச்சொல் பொது மகளிரையே குறிக்கும். 822

3. பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்
ஆகுதல் மாணார்க் கரிது.

பல நல்ல நூல்களைக் கற்றிருந்தாலும் மனம் திருந்தி நட்பினர் ஆகுதல் நற்குண மாண்புகள் இல்லாதவர்க்கு இல்லை.

கற்றக்கடைத்தும்-கற்றிருந்த போதிலும்; மன நல்லர் ஆகுதல்-உள்ளத்தால் நட்பினர் ஆகுதல்; மாணார்-குண நலம் இல்லாதவர், பகைவர் எனினும் பொருந்தும். 823

4. முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா
வஞ்சரை அஞ்சப் படும்.

முகத்தால் இனியர் போன்று நடித்துச் சிரித்து மனத்தால் இனியர் அல்லாத வஞ்சகரை அஞ்சுதல் வேண்டும். 824

5. மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்
சொல்லினாற் தேறற்பாற்று அன்று.

உள்ளத்தால் கலந்து பழகாதவரை அவர்தம் சொல்லைக் கொண்டு ஒரு சிறிதும் நம்புதற்கு இல்லை.

தேறற்பாற்று அன்று-நம்புவதற்கு இல்லை. 825

6. நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை உணரப் படும்.

நண்பர்போல் நன்மையானவைகளைச் சொல்லினும் பகைவர்தம் சொற்களின் உண்மைத் தன்மை விரைவில் உணரப்படும். 826

7. சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க
தீங்கு குறித்தமை யான். [வில்வணக்கம்

வில்லினது வணக்கம் தீமை செய்தலைக் குறித்தமையால் பகைவர்தம் வணக்கத்தோடு கூடிய சொல்லினை நன்மையாகக் கொள்ளுதல் கூடாது.

சொல் வணக்கம்-வணக்கத்தோடு கூடிய இனிய சொற்கள்; ஒன்னார்கண்-பகைவரிடம்; வில்வணக்கம்-வணங்குதல் போன்று தோன்றும் வில்லினது வளைவு.

வில்லினது வணக்கம் தீங்கையே குறிக்கிறது போலப் பகைவருடைய சொல்லில் காணப்படும் வணக்கமும் (பணிவும்) தீங்கையே விளைவிக்கும். ஆதலால், அப்பணிவு மொழியில் மயங்கக் கூடாது என்பதாம். 827

8. தொழுதகை யுள்ளும் படைஒடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து.

தம்மை வணங்குவது போன்று காட்டிக் கொள்ளும் பகைவரின் கைகளின் உள்ளேயும் உயிரைப் போக்குதற்கு உரிய கொடிய கொலைக் கருவி மறைந்திருத்தல் கூடும்; அந்தப் பகைவர் அழுவது போன்று விடும் கண்ணீரும் அத்தன்மை வாய்ந்ததே ஆகும். 828

9. மிகச்செய்து தம்எள் ளுவாரை நகச்செய்து
நட்பினுள் சாப்புல்லற் பாற்று.

பகைமை தோன்றாதபடி வெளியே மிகுதியாக நட்புத் தோன்றும்படி செய்தே உள்ளத்தே தம்மை இகழும்

தன்மை வாய்ந்த பகைவரை மகிழும் வண்ணம் செய்து அவரிடம் நட்புக் கொள்ளுதலில் மட்டும் எச்சரிக்கையாக இருந்து, அவர்தம் நட்பு தானே அழிந்து போகும்படி அவரிடம் நெருங்கிப் பழகாமல் இருத்தல் வேண்டும்.

மிகச் செய்தல்-நட்புடையார் போல் மிகுதியாகக் காட்டிக் கொள்ளுதல்; சாப்புல்லல்-அந்த நட்பு ஒழியும்படி நடந்து கொள்ளுதல். 829

**10.** **பகைநட்பாம் காலம் வருங்கால் முகநட்பு**
**அகநட்பு ஒரீஇ விடல்.**

பகைவர் நமக்கு நட்பினராக ஒழுகவேண்டிய சமயம் நேர்ந்தால் அந்தச் சமயத்திலும் அவரிடம் முகத்தால் மட்டும் நட்புடையாரைப் போல ஒழுகி, மனத்தால் நட்புச் செய்தலைக் கைவிடுதல் வேண்டும். 830

## 84. பேதைமை

**1.** **பேதைமை என்பதொன்று யாதெனின் [ஏதங்கொண்டு**
**ஊதியம் போக விடல்.**

பேதைமை என்று சொல்லத் தக்கது ஒன்று உண்டு. அஃது யாதெனின் தனக்குக் கெடுதியானவற்றைக் கைக்கொண்டு தனக்கே நன்மை பயப்பவனவற்றைக் கைவிடுதலாகும்.

பேதைமை-யாதும் அறியாமை; ஒன்று-ஒரு குணம்; ஏதம்-குற்றம்; ஊதியம்-நன்மை பயக்கத் தக்கது; போக விடல்-கைவிடுதல். 831

**2.** **பேதைமையுள் எல்லாம் பேதைமை காதன்மை**
**கையல்ல தன்கண் செயல்.**

அறியாமை எல்லாவற்றுள்ளும் மிகுந்த அறியாமை யாவது தனக்குத் தகாத ஒழுக்கத்தின்கண் ஆசை வைத்தலே ஆகும்.

காதன்மை-ஆசை; கையல்லது-ஒழுக்கம் அல்லாதது; கை-ஒழுக்கம். 832

**3.** **நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்**
**பேணாமை பேதை தொழில்.**

வெட்கப்பட வேண்டியவற்றுக்கு வெட்கப்படாமை, தேட வேண்டியவற்றைத் தேடாமை, அன்பின்மை, பாது காக்க வேண்டுவனவற்றைப் பாதுகாவாமை ஆகிய இவை பேதையின் தொழில்கள்.

நாடுதல்-தேடிப் பெறுதல்; நார்-அன்பு; பேணாமை-பாதுகாவாமை அல்லது போற்றாமை; நாணவேண்டுவன-பழிபாவங்கள். 833

4. ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தான்அடங்காப்
பேதையின் பேதையார் இல்.

கற்க வேண்டிய நூல்களைக் கற்றும், அவைகளை நன்கு உணர்ந்தும், அவ்விதம் கற்று உணர்ந்தவைகளைப் பிறருக்கு உரைத்தும் கற்ற நெறியின்கண் தாம் நின்று அடங்கி ஒழுகாத பேதையரைப் போன்ற பேதையார் உலகத்தில் இல்லை. 834

5. ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக்கு அழுந்தும் அளறு.

ஏழு பிறவியிலும் தான் புகுந்து அழுந்தி வருந்துவதற்குரிய நரகத்தை அடையத்தக்க ஒரு செயலைப் பேதை ஒரு பிறவியிலேயே செய்து கொள்ள வல்லவனாவான்.

ஒருமை-ஒரு பிறவி; எழுமை-ஏழு பிறவிகள்; அளறு-நரகம்; புக்கு அழுந்தும்-அடைந்து வருந்துவான். 835

6. பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

செய்யும் வகையறியாத பேதை ஒரு செயலைச் செய்ய மேற்கொள்வானாகில் அந்தச் செயலும் பொய்த்துப் போவதோடு தானும் விலங்கு பூணுவான்.

பொய்படுதல்-செயல் முடிவு பெறாமலே பொய்த்துப் போதல்; ஒன்றோ-அந்த ஒன்றுமட்டும் அன்று, வேறொன்றும் உண்டு என்பதைக் குறிக்க வந்த சொல்; புனை பூணுதல்-விலங்கு பூணுதல்; கையறியாப் பேதை-செய்யும் முறைமை அறியாத பேதை, ஒழுக்க நெறி அறியாத பேதை; கை - ஒழுக்க நெறி. 836

7. ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதைமை
பெருஞ்செல்வம் உற்றக் கடை.

அறிவில்லாதவன் பெரிய செல்வத்தைப் பெற்றால் அவனோடு தொடர்பு இல்லாத அயலார் அனுபவிக்க, அவனுடைய சுற்றத்தார் உண்ண உணவு இன்றிப் பசியால் வருந்துவர்.

ஏதிலார் - அயலார் ; யாதொரு தொடர்பும் இல்லாதவர் : ஆர - அனுபவிக்க ; தமர் - தம்மவர், சுற்றத்தார் ; உற்றக்கடை - பெற்றால். 837

8. மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன்று உடைமை பெறின்.

இயல்பிலே தவறு செய்யத்தக்க பேதை தன் கையில் ஒரு பொருளையும் பெற்றிருப்பானாகில் இயல்பிலேயே பித்துக்கொண்டுள்ள ஒருவனுக்குக் கள்ளையும் வார்த்தால் அவன் எத்தகைய தன்மையில் தலைகால் தெரியாமல் மயங்கிக் கிடப்பானோ அத்தகைய தன்மையில் இருப்பான்.

மையல் – பித்து; களித்தற்று - கள்குடித்து மயங்கியிருத்தற்குச் சமம் ; தன் கையொன்று உடைமை - தன் கையில் உள்ள ஒரு பொருள். 838

9. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதொன்று இல்.

அறிவில்லாதவர் நட்பு மிகவும் இனியது. ஏனெனில் அவர் பிரிவாலே எவர்க்கும் எத்தகைய துன்பமும் நேரப் போவதில்லை. 839

10. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

அறிவிற் சிறந்தோர் கூடியுள்ள கூட்டத்தில் அறிவற்ற பேதை புகுவது தூய்மை யல்லாதவற்றை மிதித்து, கழுவப் படாத காலை நல்ல படுக்கையில் வைத்ததற்குச் சமம் ஆகும். 840

## 85. புல்லறிவாண்மை

**1. அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதின்மை**
**இன்மையா வையாது உலகு.**

ஒருவனுக்கு இல்லாமை பலவற்றுள்ளும் மிக்க இயலாமையாவது அறிவில்லாமையே ஆகும். மற்றைப் பொருள் இல்லாமையையோ என்றால் அதனை இல்லாமையாக அறிவுடையோர் கொள்ளமாட்டார்கள்.

இன்மை - இல்லாமை, வறுமை; உலகு - உலகத்தில் உள்ள அறிவிற் சிறந்த மக்கள்; புல்லறிவு - சிற்றறிவு, அற்ப அறிவு ; ஆண்மை - ஆளும் தன்மை. 841

**2. அறிவிலான் நெஞ்சுவந்து ஈதல் பிறிதுயாதும்**
**இல்லை பெறுவான் தவம்.**

அறிவில்லாதவன் உள்ளம் மகிழ்ந்து ஒருவனுக்கு ஒரு பொருளைக் கொடுத்தல் என்ன காரணம் பற்றியோ எனில், அஃது அந்தப் பொருளைப் பெறுகின்றவன் செய்த நல்வினையின் பயனே ஆகும் ; வேறொன்றுமில்லை.

தவம் - முற்பிறப்பில் அல்லது இப்பிறப்பில் செய்த நல்ல செயல்கள், நல்வினை. 842

**3. அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை**
**செறுவார்க்கும் செய்தல் அரிது.**

அறிவில்லாதவர் என்று சொல்லத்தக்க புல்லறிவாளர் தாமே வருந்திக்கொள்ளும் வருத்தத்தை அவர் தம் பகைவராலும் அவருக்குச் செய்ய முடியாது.

பீழித்தல் - துன்புறுத்தல்; பீழை - துன்பம் ; செறுவார் - பகைவர். 843

**4. வெண்மை எனப்படுவது யாதெனின் ஒண்மை**
**உடையம்யாம் என்னும் செருக்கு.**

புல்லறிவு என்று சொல்லப்படுவது யாது என்றால், 'யாம் அறிவுடையோம்' என்று ஒருவன் தன்னைத் தானே மதித்துக் கொள்ளும் அகந்தையே ஆகும்.

வெண்மை - புல்லறிவு, அறிவின்மை; ஒண்மை - அறிவுடைமை ; செருக்கு - அகந்தை, கர்வம். 844

**5. கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடற**
**வல்லதூஉம் ஐயம் தரும்.**

புல்லறிவாளர் தாம் கல்லாத நூல்களையும் கற்றதாக காட்டிக்கொண்டு நடத்தல், அவர் குற்றமறக் கற்றதாகிய ஒரு நூல் இருப்பின் அந்த நூலையும் 'அவர் கற்றிருப்பாரோ?' எனறே பலரும் ஐயங்கொள்ள இடம் தரும்.

கற்றறியாத நூல்களையும் கற்றிருப்பதாகக் காட்டிக் கொள்ளுவதும் புலலறிவாகும் என்பது கருத்து. 845

**6. அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்**
**குற்றம் மறையா வழி.**

தம்மிடத்தில் உள்ள குற்றத்தை உணர்ந்து அதைப் போக்காமல் தம்மிடமுள்ள மறைக்கவேண்டிய உறுப்புக்களை மட்டும் மறைத்துக்கொள்ள எண்ணுவதும் புல்லறிவே ஆகும்.

அற்றம்-மறைக்கத்தக்கது; தம் வயின்-தம்மிடம். 846

**7. அருமறை சோரும் அறிவிலான் செய்யும்**
**பெருமிறை தானே தனக்கு.**

பிறருக்குத் தெரிவிக்கக்கூடாத அரிய இரகசியங்களையும் வெளிப்படுத்திவிடும் புல்லறிவாளன் தனக்குத் தானே பெரிய துன்பத்தினைத் தேடிக்கொள்வான்.

அருமறை - அரிய இரகசியங்கள் அல்லது பிறருக்குத் தெரிவிக்கக் கூடாதவைகள்; சோர்தல் - கை நழுவவிடல், வெளியிடல்; மிறை - துன்பம். 847

**8. ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்**
**போஒம் அளவும்ஓர் நோய்.**

பிறர் செய்யச் சொல்லியும் செய்யாதவனாய்த் தானே எண்ணிப் பார்த்து அறிந்துகொள்ளவும் இல்லாதவனாய் உள்ள ஒருவன் இவ்வுலகத்தை விட்டு ஒழிந்துபோகும் அளவும் இவ்வுலகத்துக்கு ஒரு பெரிய நோய் போன்றவன் ஆவான்.

ஏவுதல் - செய்யும்படி கட்டளையிடுதல்; தேறான் - தெளியாதவன்; அவ்வுயிர் - அந்த மனிதன். எதற்கும் பயன்படாமல் நெட்டுயிர்ப்போடு உலவிவருதலால் 'அவன்'

என்னாமல் 'அவ்வுயிர்' என்று வெறுத்துக் கூறுகின்றார் திருவள்ளுவர் ; போஒம் - இவ்வுலகத்தை விட்டுப் பிரியும்.

எதற்கும் பயனில்லாதவன் இறந்துபோவதே நலம் என்பது கருத்து. 848

9. காணாதான் காட்டுவான் தான்காணான்
கண்டானாம் தான்கண்ட வாறு. [காணாதான்

அறிவில்லாத ஒருவனுக்கு ஒன்றை அறிவிக்க முயலுபவன் முடிவில் தான் அவனுக்கு உணர்த்த முடியாமைகருத் தன் அறியாமையை எண்ணித் தானே வருந்த நேரும்; அந்த அறிவற்றவனோ தான் முன்பு இருந்த நிலையிலேயே இருந்து கொண்டு தான் எல்லாம் அறிந்தவன் என்று தனக்குத் தானே எண்ணிக்கொள்வான்.

கருத்து : அறிவற்றவன் தனக்கு உரைத்தவனையும் அறிவிலலாதவனாக்கித் தான் எல்லாம் அறிந்தவன்போல தன் எண்ணத்தில் விடாப்பிடியாய் இருப்பான். 849

10. உலகத்தார் உண்டென்பது இல்லென்பான்
அலகையா வைக்கப் படும். [வையத்து

உலகத்தில் உள்ள பெரியோர்கள், 'உண்டு' என்று கூறும் ஒன்றை, 'இல்லை' என்று சாதிக்கும் ஒருவன் இவ்வுலகத்தினரால் மகன் என்று கருதப்படாமல் பேய் எனவே எண்ணப்படுவான்.

வையம் - பூமி, உலகத்தில் உள்ள மக்கள் ; அலகை - பேய். 850

## 86. இகல்

1. இகல்என்ப எல்லா உயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய்.

எல்லா உயிர்களையும் ஒன்றோடொன்று பொருந்தியிருக்க வொட்டாமல் அவைகளை வேறுபடுத்தி வைத்தல் என்னும் தீய குணத்தினை வளர்க்கும் நோயினை இகல் என்று அறிஞர் சொல்லுவர்.

இகல் - பிறரோடு மாறுபடுதல்; பகல் - பகுத்தல், வேறுபடுத்துதல்; பண்பின்மை - நற்குணம் இன்மை; அஃதாவது தீயகுணம்; பாரித்தல் - வளர்த்தல், பரப்புதல். 851

**2. பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி**
**இன்னாசெய் யாமை தலை.**

தம்மோடு கூடியில்லாமையை எண்ணி ஒருவன் அன்பில்லாத செயல்களைச் செய்வானாயினும் தாம் அவனோடு மாறுபடுதலைக் குறித்து அவனுக்குத் துன்பம் செய்யாது இருத்தலே சிறந்ததாகும்.

பகல் - வேறுபட்டிருத்தல், ஒன்றுகூடா திருத்தல்; பற்றா - பற்று இல்லாத செயல்கள், அன்பில்லாத சொற்கள்; இகல் - மாறுபாடு; இன்னா - துன்பம் தருவன. 852

**3. இகலென்னும் எவ்வநோய் நீக்கின் தவம்இல்லாத்**
**தாவில் விளக்கம் தரும்.**

ஒருவன், இகல் என்று சொல்லப்படும் துன்பந்தரும் நோயினை நீக்கிவிட்டால் அஃது அவனுக்கு அழிவில்லாததும் நிலையானதுமான புகழைத் தரும். 853

**4. இன்பத்துள் இன்பம் பயக்கும் இகல்என்னும்**
**துன்பத்துள் துன்பம் கெடின்.**

துன்பங்கள் எல்லாவற்றிலும் மிகவும் கொடிய துன்பம் இகல் என்னும் மாறுபாடே ஆகும். அந்த இகல் என்னும் துன்பம் ஒருவனுக்கு இல்லையானால், அஃது அவனுக்கு இன்பங்கள் எல்லாவற்றிலும் மிகுந்த இன்பத்தினைத் தரும்.

இன்பத்துள் இன்பம் என்பதற்குப் பேரின்பம், அஃதாவது மோட்சம் என்றும் பொருள் கொள்ளுவர். 854

**5. இகலெதிர் சாய்ந்துஒழுக வல்லாரை யாரே**
**மிகலூக்கும் தன்மை யவர்?**

இகல் என்னும் மாறுபாடு நேர்ந்தவிடத்து அந்த மாறுபாட்டை மேற்கொள்ளாமல் விலகி நடக்க வல்லவரை வெல்லக் கருதும் தன்மையுடையவர் எவர்? எவரும் இலர்.

சாய்ந்து ஒழுகல் - விலகி நடத்தல்; மிகல் ஊக்குதல் - வெல்லக் கருதுதல். 855

6. இகலின் மிகல்இனிது என்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் நணித்து.

பிறன் தன்னோடு மாறுபடும்போது அவனை எதிர்த்து நிற்றலே இனியது என்று ஒருவன் எண்ணுவானானால் அவன் வாழ்க்கையானது விரைவில் அழிந்துபோவதோடு அவனும் அழிந்து போவான்.

மிகல் - எதிர்த்தல்; தவல் – அழிதல்; நணித்து - மிகவும் அருகில் உள்ளது; விரைவில் நிகழக்கூடியது. தவல் என்பது பொருள் அழிவையும், கெடல் என்பது சாதலையும் குறிக்கும். 856

7. மிகன்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்
இன்னா அறிவி னவர்.

இகல் என்னும் மாறுபாட்டினை விரும்பும் தீய அறிவினை உடையவர்கள் வெற்றியடைவதற்குக் காரணமான உண்மைப் பொருளைக் காணமாட்டார்கள்.

மிகல் - வெற்றி; மேவல் – அடைதல்; மெய்ப்பொருள் உண்மைப்பொருள்; மேவல் – விரும்புதல்; இன்னா அறிவு- தமக்கும் பிறர்க்கும் தீங்கு பயக்கும் அறிவு. 857

8. இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் அதனை
மிகலூக்கின் ஊக்குமாம் கேடு.

இகலுக்கு விலகிச் சொல்லுதல் ஒருவனுக்கு ஆக்கம் தரும்; அவ்விதம் விலகிச் செல்லாமல் அதனை எதிர்ப்பதில் ஊக்கம் கொள்வானாயின் அஃது அவனுக்குக் கேட்டினை விளைவிக்கும்.

மாறுபாட்டை எதிர்த்துச் செல்லாது விலகிப் போதல் ஒருவனுக்கு ஆக்கம் தருவதாகும். அவ்விதம் விலகிப் போதலிலும் ஓர் அளவு வேண்டும். விலகிபபோகும் செயலை ஒருவன் மேலும் அதிகமாகச் செய்வானானால் அவனுக்கு அது கேட்டினையும் ஊக்குவிக்கும் என்றும் இதற்குப் பொருள் கூறுவர்.

ஆக்கம் - செல்வம்; மிகல் ஊக்கம் - இகலை எதிர்த்துச் செல்லுதலை ஊக்குவித்தல்; ஊக்குதல - தூண்டுதல், விளைவித்தல். 858

9. இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை
மிகல்காணும் கேடு தரற்கு.

ஒருவன் தனக்குச் செல்வம் வரும்போது இகலைக் கருதமாட்டான்; தனக்குக் கேடு வருவதற்குக் காரணம் நேரும்போது இகலை எதிர்த்து வெல்லக் கருதுவான்.

மிகல் காணுதல் - இகலை எதிர்த்து வெல்லக் கருதுதல்; கேடு - துன்பம், தீவினை.

நல்வினையுடையவர் இகலை எதிர்க்கமாட்டார்; தீவினையுடையவரே எதிர்க்க எண்ணுவர் என்பது கருத்து. 859

10. இகலானாம் இன்னாத எல்லாம் நகலானாம்
நன்னயம் என்னும் செருக்கு.

ஒருவனுக்கு இகல் என்னும் மாறுபாட்டினாலே துன்பமானவை எல்லாம் உண்டாகும்; அவ்வாறு மாறுபடாது நட்புக் கொள்வதாலே நல்ல குணம் உடையவன் என்னும் மதிப்பு ஏற்படும்.

இன்னாத - துன்பம் தருவன; நகல் - மகிழ்தல், நட்புடன் இருத்தல்; நன்னயம் - நல்ல பண்பு, நற்குணம்; நன்னயம் என்பதற்கு 'நல்ல நீதி' என்றும் பொருள் கொள்வர்; செருக்கு - மதிப்பு, பெருமிதம். 860

## 87. பகைமாட்சி

1. வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக ஓம்பா
மெலியார்மேல் மேக பகை.

தம்மைக் காட்டிலும் வலிமையினால் மிகுந்துள்ளவர்களைப் பகைத்து எதிர்த்தலை விட்டொழிக; தம்மைப் போற்றாத எளியாரைப் பகைத்தலை மேற்கொள்ளுக.

மாறேற்றல் - பகைத்து எதிர்த்தல்; ஓம்புக - விட்டொழிக; ஓம்பா – போற்றாத; மேக – மேவுக, விரும்புக. மேற்கொள்க. 861

2. அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு.?

ஒருவன் தன்னைச் சூழ்ந்துள்ளவர்மீது அன்பில்லாதவனாகவும், வலிமை பொருந்திய துணையில்லாதவனாகவும்,

தானும் வலிமையில்லாதவனாகவும் இருப்பானேயானால் அவன் பகைவனுடைய வலியை எவ்வாறு தொலைக்க முடியும்; (சிறிதும் இயலாது என்பது கருத்து.)

ஆன்ற அமைந்த - வலிமை பொருந்திய; துவ்வான் - வலிமையற்றவன்; என் பரியும் - எங்ஙனம் தொலைக்க முடியும்? ஏதிலான் - பகைவன்; துப்பு - வலிமை. 862

3. அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான்
தஞ்சம் எளியன் பகைக்கு.

அஞ்சவேண்டாதவைக்கு அஞ்சுவான்; அறியவேண்டிய வற்றை அறியான்; பிறரோடு இணங்கி நடக்கமாட்டான்; பிறருக்கு ஒன்றும் ஈயமாட்டான; இத்தகைய குணமுடைய ஒருவன் பகைவர்க்கு மிகவும் எளியன்.

அமைவு - அமைதியான தன்மை, இணங்கி நடக்கும் குணம்; தஞ்சம் எளியன் - மிக எளியன். 863

4. நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது.

சினம் நீங்காதவனாய்த் தன் மனத்தை அடக்கி ஆளும் தன்மையில்லாதவனாய் ஒருவன் இருந்தால் அவன் எக்காலத்தும் எவ்விடத்தும் யாவர்க்கும் எளியன்.

நிறை - உள்ளத்தை அடக்கி ஆளும் தன்மை. 864

5. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க்கு இனிது.

காரியங்களைச் செய்யத்தக்க நல்ல வழிகளை ஆராய்ந்து பாரான்; பொருத்தமானவற்றைச்செய்யான்; தனக்கு வரத் தக்க பழியையும் எண்ணிப் பாரான்; நல்ல குணமும் இல் லான்; இத்தகைய ஒருவன் பகைவர்க்கு எளியவனாவான்.

வழிநோக்குதல்—தக்க நல்ல வழிகளை ஆராய்ந்து பார்த் தல்; வாய்ப்பன செய்தல் - பொருத்தமான செயல்களைச் செய்தல்; பண்பு - நற்குணம்; பற்றார் - பகைவர்; இனிது- இங்கே எளிமை என்னும் பொருளில் வந்தது. 865

**6. காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்.**

தன் நிலைமையையும், பிறர் நிலைமையையும் எண்ணிப் பாராமல் பிறரைக் கோபிக்கும் குணமுடையவனும் அளவுக்கு விஞ்சிய காமத்தை உடையவனும் ஆகிய ஒருவனது பகைமை பகைவரால் விரும்பி ஏற்றுக்கொள்ளப்படும்.

காணா – எண்ணிப்பாராத ; கழி - மிகுதி ; கழி பெருங் காமம் - மிகப் பெரிய ஆசை ; பேணாமை - பகைமை ; பேணுதல் - விரும்புதல். 866

**7. கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து
மாணாத செய்வான் பகை.**

தமக்கு மிகவும் நெருக்கத்தில் இருந்தும் (தன் பாதுகாப்புக்குத் தேவையானவற்றைச் செய்து கொள்ளாமல்) சிறிதும் பொருந்தாச் செயல்களையே செய்கின்ற ஒருவனது பகையைப் பொருள், நாடு முதலியனவற்றைக் கொடுத்தேனும் தாம் நிச்சயமாகக் கொள்ளுதல் வேண்டும். 867

**8. குணன்இலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்கு
இனன்இலனாம் ஏமாப் புடைத்து.**

ஒருவன் குணமில்லாதவனாய்ப் பலப்பல குற்றங்களையும் உடையவனாக இருப்பின், அவன் துணை இல்லாதவன் ஆவான். அந்தத் துணையற்ற நிலை பகைவர்க்குத் தக்க பாதுகாப்பாக இருக்கும்.

ஏமாப்பு – பாதுகாப்பு, அஃதாவது பகைவர்க்கு நல்ல வாய்ப்பு. 868

**9. செறுவார்க்குச் சேணிகவா இன்பம் அறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின்.**

போர்புரிதற்கு வேண்டிய அறிவு இல்லாதவராய், பகைவரைக் கண்டு அஞ்சத்தக்க குணமும் உடையவராய் இருப்போரைப் பகைவராகப் பெற்றால் அவரை எதிர்ப்போர்கட்கு வெற்றி இன்பம் தொலைவில் இராமல் அருகிலேயே நிலைத்திருக்கும். 869

10. கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்
ஒல்லானை ஒல்லாது ஒளி.

அரசியல் அறிவு இல்லாதவனோடு பகைக்க நேர்ந்த போது அவனிடமிருந்து பெறத்தக்க சிறிய பொருளையும் கைக்கொள்ள மாட்டாதவனைப் புகழ் எந்தக் காலத்திலும் வந்து பொருந்தாது.

'கல்லான்' என்பதற்கு அரசியல் அறிவு இல்லாதவன், நீதிநூல் அறிவு இல்லாதவன், பொது அறிவு இல்லாதவன் என்றெல்லாம் பொருள் கொள்வர். ஒல்லானை - இயலாதவனை; ஒல்லாது - வந்து பொருந்தாது; ஒளி - புகழ். 870

## 88. பகைத்திறம் தெரிதல்

1. பகைஎன்னும் பண்பி லதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற்று அன்று.

பகை என்று சொல்லப்படுகின்ற தீய குணத்தை ஒருவன் விளையாட்டாகவும் விரும்புதல் கூடாது.

பண்புஇல் அதனை - நற்குணம் இல்லாததை, அஃதாவது தீய குணத்தை; நகை - விளையாட்டு.

பகைத்திறம் தெரிதல் - பகையினுடைய தன்மைகளை ஆராய்ந்து அறிதல். 871

2. வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை.

ஒருவன் வில்லை ஏராக உடைய உழவர்களாகிய வீரர்களுடன் பகை கொண்டான் ஆயினும் சொல்லை ஏராக உடைய உழவர்களாகிய அறிஞர்களுடன் பகை கொள்ளாமல் இருத்தல் வேண்டும்.

வில்லேர் உழவர் - விற் பயிற்சியில் வல்ல வீரர்; சொல்லேர் உழவர் - நூல் பயிற்சியுடைய புலவர், அமைச்சர் முதலிய அறிஞர்.

அரசரோடு பகை கொள்ளினும் அமைச்சர், புலவர் முதலாயினரோடு பகை கொள்ளலாகாது என்பது கருத்து. 872

3. ஏமுற்ற வரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

தான் தனியனாக இருந்து பலருடைய பகையையும் தேடிக் கொள்பவன் பித்துப் பிடித்தவரைப் பார்க்கினும் அறிவில்லாதவனாகக் கருதப்படுவான்.

ஏமுறுதல் - பித்துப் பிடித்தல்; ஏழை - அறிவில்லாதவன்; தமியன் - தனியன்; பல்லார் - பலர். 873

4. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு.

பகைவரையும் நண்பராகச் செய்து கொள்ளவல்ல நல்ல தன்மையுள்ள ஒருவனது பெருந்தன்மையில் உலகம் தங்கியிருப்பதாகும். 874

5. தன்துணை இன்றால் பகைஇரண்டால் தானொருவன்
இன்துணையாக் கொள்கவற்றின் ஒன்று.

தனக்கு உதவி புரியும் துணையோ எனில் இல்லை. தன்னைத் துன்புறுத்தக் காத்திருக்கும் பகையோ இரண்டு. தானோ ஒருவன். இந்நிலையில் அந்தப் பகைகளுள் ஒன்றை அப்போதைக்கு இனிய துணையாகச் செய்து கொள்ள வேண்டும். 875

6. தேறினும் தேறா விடினும் அழிவின்கண்
தேறான் பகாஅன் விடல்.

ஒருவனைக் குறித்துத் தாம் முன்பு ஆராய்ந்து தெளிந்தாராயினும், தெளிந்திலர் ஆயினும் தாழ்வு வந்தவிடத்து ஆவனை ஆராய்ந்து நீக்காமலும் சேர்த்துக் கொள்ளாமலும் ஓர் அயலாமைப் போல அவனை விட்டு வைக்க வேண்டும்.

தேறுதல் - தெளிதல்; தேறாவிடுதல் - தெளிந்து கொள்ளாமல் இருத்தல்; அழிவு - தாழ்வு; பகாஅன் விடல்- நீக்காது விட்டு வைத்தல்; பகுதல் – நீக்குதல். 876

7. நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க
மென்மை பகைவர் அகத்து.

தாம் வருந்தியதைத் தாமாக அறியாத ஒருவருக்கு அந்தத் துன்ப நிகழ்ச்சியைச் சொல்லக்கூடாது. அது போலப் பகைவரிடத்துத் தமது வலிமைக் குறைவை வெளிப்படுத்தலாகாது.

நோவற்க - நொந்ததைச் சொல்லற்க; மேவற்க — மேலிட்டுக் கொள்ளற்க, வெளிப்படுத்தற்க; மென்மை - மெலிவாக இருக்கும் தன்மை, வலிவற்ற தன்மை. 877

**8. வகைஅறிந்து தன்செய்து தன்காப்ப மாயும்**
**பகைவர்கண் பட்ட செருக்கு.**

ஒருவன் தான் செய்யவேண்டிய வகையை அறிந்து, அதற்கு வேண்டிய பொருள்களையும் பெருக்கிக் கொண்டு தன்னையும் காத்துக் கொள்வானானால் அவன் பகைவரிடத்துள்ள செருக்கு தானாகவே அழியும்

வகை அறிதல் - பகைவனை எதிர்த்தற்கு வேண்டிய வழிகளைத் தெரிந்து கொள்ளுதல், தன் செய்தல் - தனக்கு வேண்டிய பொருள், ஆயுதம் முதலியவைகளைப் பெருக்கிக் கொள்ளுதல்; தன் காத்தல் - தன்னைக் காத்துக் கொள்ளுதற்கு வேண்டிய அரண்களை அமைத்துப் பாதுகாத்துக் கொள்ளுதல்; மாயும் - அழியும், செருக்கு - பெருமிதம். 878

**9. இளைதாக முள்மரம் கொல்க களையுநர்**
**கைகொல்லும் காழ்த்த இடத்து.**

முள்ளையுடைய மரத்தை அது சிறியதாக இருக்கும் போதே களைந்து எறிதல் வேண்டும்; அது முதிர்ந்தபோது தன்னை வெட்டுகிறவர்களின் கையையே வருத்தும்.

பகை சிறிதாக இருக்கும்போதே அதனை அழித்தொழிக்க வேண்டும். அதனை வளரவிட்டால் தன்னையே அழித்துவிடும் என்பது கருத்து. 879

**10. உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்**
**செம்மல் சிதைக்கலா தார்.**

தம்மைப் பகைப்பவரது தருக்கினைக் கெடுக்க முடியாதவர் அந்தப் பகைவர் மூச்சுவிடும் அளவுகூட உயிரோடு வாழ்கின்றவர் அல்லர், இது நிச்சயம்.

உயிர்த்தல் — மூச்சுவிடுதல்; மன்ற — நிச்சயமாக, உறுதியாக; செயிர்ப்பவர் — பகைப்பவர்; செம்மல் — தலைமைப் பதவி; சிதைத்தல் — அழித்தல். 880

## 89. உட்பகை

**1. நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்**
**இன்னாவாம் இன்னா செயின்.**

அனுபவிக்க வேண்டுவன ஆகிய நிழலும் நீரும் ஒருவனுக்கு முதலிய இன்பம் தருவனவாய்த் தோன்றிப் பின் தீங்கினை விளைவிப்பனவாயின் அவை தீயனவே ஆகும். அதுபோலச்சுற்றத்தார் இயல்புகளும் முன்புஇனியனவாய்த் தோன்றிப் பின் தீங்கு விளைவிப்பனவாயின் அவை துன்பம் தருவனவே ஆகும்.

நீரும் நிழலும் நல்லனவாகவே இருக்கலாம். ஆனால் உடம்புக்கு அவை ஏற்றுக்கொள்ளாவிட்டால் அந்தக் குளிர்ந்த நீரையும் நிழலையும் ஒதுக்கியே வைக்கிறார்கள். அதுபோல இன்றியமையாத சுற்றத்தார் போல் காணப்பட்டாலும் அவர் தன்மைகள் தீங்கு விளைவிப்பனவாக இருந்தால் அவரைப் பகைவர் போன்று நீக்கி வைக்கவே வேண்டும்.

'நிழல் நீர்' என்பதற்கு சூரிய வெளிச்சம் படாத மர நிழலில் உள்ள நீர் என்று பொருள் கொள்வர். இன்னாத - துன்பந் தருவன; தமர் - சுற்றத்தார்; நீர் — தன்மை; தமர் நீர் - சுற்றத்தாரின் இயல்புகள்.

உட்பகை - அருகே இருந்துகொண்டே தீங்கு விளைவிக்கும் இயல்புடையவன். 881

**2. வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக**
**கேள்போல் பகைவர் தொடர்பு.**

வாளைப்போல வெளிப்படையாகத் துன்பம் புரியும் இயல்புடைய பகைவரைக் குறித்து ஒருவன் அஞ்சவேண்டுவதில்லை. ஆனால், உறவினரைப் போலத் தன்னோடு இருந்துகொண்டே தனக்குத் தீங்கு புரியும் உட்பகைவரின் தொடர்புக்கு ஒருவன் அஞ்சுதல் வேண்டும்.

கேள்-சுற்றம்; தொடர்பு — நெருங்கியிருக்கும் தன்மை.

வெளிப்படையான பகைவரைக் கண்டு ஒருவன் முன்னதாகவே எச்சரிக்கையாக இருத்தல் கூடும். ஆதலால் அந்தப் பகையைக் குறித்து அவன் அஞ்ச வேண்டுவது இல்லை.

உறவினர் போன்றும் நெருங்கிய நண்பர் போன்றும் இருந்து கொண்டே இருக்கும் பகைவருக்காகவே அவன் அஞ்சுதல் வேண்டும் என்பது கருத்து. 882

**3. உட்பகை அஞ்சித்தன் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.**

உட்பகைக்கு அஞ்சி ஒருவன் தன்னைக் காத்துக் கொள்ளுதல் வேண்டும். இல்லையானால் மட்கலத்தைச் செய்வதற்குப் பயன்படும் ஊசி என்னும் கருவி அந்த மட்கலத்தையே சக்கரத்தில் இருந்து வெட்டி உடுப்பதற்கும் பயன்படுவது போன்று எட்பகைவர் அவன் உள்ளத் தளர்ச்சியோடு இருக்கும் காலம் பார்த்து அவனைத் தப்பாமல் ஒழித்துவிடுவர்.

உலைவிடம் - தளர்ச்சி அடைந்த சமயம்; இஃது உள்ளத் தளர்ச்சி, உடல் தளர்ச்சி இரண்டுக்கும் பொருந்தும்; மட்பகை - மட்கலத்தைச் சக்கரத்திலிருந்து வெட்டி எடுக்கப் பயன்படும் ஊசி என்னும் கருவி; மண்ணைப் பகும் கருவி ஆதலின் மட்பகை எனப்பட்டது. அந்தக் கருவி பிறர் அறியாத நிலையில் அந்தக் குடத்தைச் சக்கரத்திலிருந்து பெயர்த்து எடுக்கப் பயன்படுதல் நோக்கி உட்பகைக்கு வள்ளுவர் உவமையாக்கினார். 883

**4. மனம்மாணா உட்பகை தோன்றின் இனம்மாணா
ஏதம் பலவும் தரும்.**

சிறந்த மனப் பான்மையில்லாத உட்பகைவர் ஒருவனுக்கு ஏற்படுவாரானால் அவன் சுற்றத்தார் அவனோடு சேராமைக்குரிய குற்றங்கள் பலவற்றையும் அவர் விளைவிப்பார். 884

**5. உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்
ஏதம் பலவும் தரும். [முறையான்**

வெளிக்குச் சுற்றத்தார் போன்று காட்டிக்கொண்டு உள்ளத்தில் பகைமைக் குணத்துடன் இருப்பார்களானால் அந்தப் பகைமை ஒருவனுக்கு, அவன் இறந்துபடுவதற்குக் காரணமான குற்றம் பலவற்றையும் கொடுக்கும்.

உறல் முறை - உறவு முறை, சுற்றம்; இறல் முறை — இறப்பதற்குக் காரணமானவை. 885

6. ஒன்றாமை ஒன்றியார் கட்படின் எஞ்ஞான்றும்
பொன்றாமை ஒன்றல் அரிது.

ஒருவனுக்கு அவனுடைய உறவின்முறை போல் ஒன்று பட்டு இருப்போரிடமே உட்பகை தோன்றுமானால் அந்த உட்பகையால் அவன் அழியாமலிருத்தல் எப்போதும் அரிது.

ஒன்றாமை - ஒன்று சேராமை, பகைமை; ஒன்றியார் - ஒன்றுசேர்ந்திருப்போர் சுற்றத்தார்; பொன்றாமை-அழிந்து போகாமை, இறவாமை; ஒன்றல் - தங்கியிருத்தல்; பொன்றாமை ஒன்றல் - இறவாமல் உலகில் தங்கியிருத்தல். 886

7. செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி.

செப்பும் அவன் மூடியும் பார்ப்பதற்கு ஒன்று சேர்ந்து இருப்பனபோல உட்பகையுள்ளவர்கள் ஒரு குடும்பத்தில் கூடியிருந்தாலும் அந்தச் செப்பும் மூடியும் வேறுவேறாக இருப்பது போல் அந்த உட்பகை கொண்டவர்களும் உள்ளத்தால் கூடியிருக்க மாட்டார்கள்; பிரிந்தே இருப்பார்கள்.

செப்பு - செம்பு என்னும் உலோகத்தால் ஆகிய சிமிழ்; புணர்ச்சி - சேர்ந்திருக்கும் தன்மை; குடி -குடும்பம். 887

8. அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை உற்ற குடி.

உட்பகையால் பீடிக்கப்பெற்ற குடும்பமானது அரத்தினால் தேய்க்கப்பட்ட இரும்பு போன்று அதன் வலிமை குறைக்கப்பட்டுத் தேய்ந்து போகும். 888

9. எட்பகவு அன்ன சிறுமைத்தே யாயினும்
உட்பகை உள்ளதாம் கேடு.

உட்பகையானது எள்ளின் பிளவு போன்று மிகச்சிறியதாக இருந்தாலும் அஃது ஒரு குடியை அழிக்கவல்ல தன்மையை உடையதாகும்.

எட்பகவு - (எள்+பகவு) எள்ளின் பிளவு. 889

**10. உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடனுறந் தற்று.**

உள்ளத்தில் உடன்பாடு இல்லாதவரோடு கூடி, ஒருவன் வாழும் வாழ்க்கை ஒரு குடிசையில் பாம்போடு கூடி வாழ்ந்தாற் போன்றதே ஆகும்.

உடம்பாடு - மனப் பொருத்தம்; குடங்கர் - குடிசை; உடன் உறைதல் - ஒன்று சேர்ந்து இருத்தல்; அற்று - அத்தன்மைத்து. 890

## ௯0. பெரியாரைப் பிழையாமை

**1. ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலுள் எல்லாம் தலை.**

எடுத்துக் கொண்ட செயல்களை முடிக்கவல்லவர் தம் திறமையை இகழாதிருத்தல், தமக்குத் தீங்கு நேராமல் காத்துக் கொள்பவர்கள் செய்யும் காவல் எல்லாவற்றிலும் முதன்மையானது.

பெரியாரைப் பிழையாமை - "அறிவு ஆற்றல்களால் சிறந்த பெரியோர்களை இகழாதிருத்தல்; ஆற்றுவார் - எடுத்த செயலைச் செய்து முடிக்க வல்லவர்; ஆற்றல் - வல்லமை; போற்றுவார் - காப்பாற்றிக் கொள்ள முயலுவார்; போற்றல் - காத்தல். 891

**2. பெரியாரைப் பேணா தொழுகின் பெரியாரால்
பேரா இடும்பை தரும்.**

ஆற்றல் மிகுந்த பெரியோர்களை ஒருவன் நன்கு மதியாது அவமதித்து ஒழுகுவானானால் அஃது அந்தப் பெரியாரால் நீங்காத துன்பத்தைத் தருவதாகும். 892

**3. கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண் இழுக்கு.**

தான் கெட விரும்பினால் ஒருவன் பெரியோர்களைக் கேளாமலேயே ஒரு செயலைச் செய்வானாக; தன்னைக் கொலை செய்து கொள்ள ஒருவன் விரும்புவானானால் அவன் வலிமை யுடையாரிடம் தவறு செய்வானாக.

கெடல்-அழிதல்; அடல்-கொல்லுதல், ஆற்றுபவர்-ஆற்றலில் வல்லவர்; இழுக்கு-குற்றம், தவறு; 'செய்க' என்பது இரண்டு வாக்கியங்களுக்கும் இடையில் இருந்து விளக்குகின்றது. இதனை இடைநிலைத் தீவகம் என்பர். 893

4. கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல்.

ஆற்றல் உடையவர்கட்கு ஆற்றல் இல்லாதார் தீமை செய்தல் தம்மைக் கொல்லத்தக்க எமனைக் கைகாட்டி அழைத்தாற்போல் ஆகும்.

கூற்றம்-எமன்; விளித்தற்று-அழைத்தாற் போன்றது; ஆற்றுவார்-வல்லமை வாய்ந்தவர்; ஆற்றாதார்-ஆற்றல் இல்லாதவர், வல்லமை இல்லாதவர்; இன்னா-தீமை. 894

5. யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

மிகுந்த வலிமையினையுடைய வேந்தனாலே வெகுளப் பட்டவர் அந்த வேந்தனிடமிருந்து தப்பி எங்குச் சென்றாலும் எவ்விடத்தும் உயிர் வாழமாட்டார்.

யாண்டு-எங்கு; வெந்துப்பு-மிக்க வலிமை; செறப்பட்டவர்-வெகுளப்பட்டவர். 895

6. எரியால் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

தீயால் சுடப்படினும் ஒருவாற்றால் உயிர் வாழ்தல் கூடும்; ஆற்றல் மிக்க பெரியாரிடத்தில் குற்றம் செய்து நடப்பவர் எவ்வாற்றாலும் தப்பிப் பிழைக்க முடியாது.

உய்வு-உயிர் தப்புகை; பிழைத்து ஒழுகுவார்-குற்றம் செய்து நடப்பவர். 896

7. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் [என்னாம்
தகைமாண்ட தக்கார் செறின்.

பெருமையால் சிறப்புற்ற பெரியார், ஒருவன்மீது கோபம் கொள்வாராயின் அவனுக்கு எல்லா வகையாலும்

மாட்சிமைப்பட்ட வாழ்க்கையும், மிகுந்த பொருளும் இருந்தும் என்ன பயன்? பயன் சிறிதும் இல்லை.

அவன் தன் வாழ்க்கையில் கவலையற்று வாழ மாட்டான் என்பது பொருள். 897

**8. குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு**
**நின்றன்னார் மாய்வர் நிலத்து.**

தவத்தால் மலைபோன்ற மதிப்புமிக்க பெரியாரை ஒருவர் குறைவாக மதிப்பாராயின், உலகில் என்றும் அழியாமல் நிலைபெற்றார்போல் உள்ளவரும் தம் குடும்பத்தோடு அழிந்து போவர்.

குன்றன்னார் - மலைபோன்றவர்; குன்ற மதித்தல்-குறைவாக எண்ணுதல்; நிலத்து நின்றன்னார்-உலகில் அழியாமல் நிலைத்து நிற்கத் தக்கவர். 898

**9. ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து**
**வேந்தனும் வேந்து கெடும்.**

தவத்தால் உயர்ந்த கொள்கையை உடையவர் வெகுள்வாராயின் இந்திரனும் இடை நடுவே தன் இந்திர பதவியை இழந்து அழிவான்.

ஏந்திய கொள்கை-உயர்ந்த கொள்கை; சீறுதல்-வெகுளல்; இடைமுரிதல்-இடைக்காலத்திலேயே நிறை கெடுதல்; வேந்தன்-இந்திரன்; வேந்து-இந்திரபதவி. 899

**10. இறந்தமைந்த சார்புடையர் ஆயினும் உய்யார்**
**சிறந்தமைந்த சீரார் செறின்.**

மிகவும் சிறந்த தவத்தினையுடையவர் வெகுள்வாராயின் அளவுகடந்த நல்ல துணையுடையாரும் தப்பிப் பிழைக்கமாட்டார்.

இறந்தமைந்த-அளவுகடந்த; சார்பு-துணை; உய்யார்-பிழைக்கமாட்டார்; சிறந்துஅமைந்த சீரார்-மிகவும் சிறந்த தவத்தினை யுடையவர் ; செறின்-வெகுளின். 900

## 91. பெண்வழிச் சேறல்

1. மனைவிழைவார் மாண்பயன் எய்தார்; வினைவிழை
வேண்டாப் பொருளும் அது. [வார்

இன்பம் காரணமாக மனைவியை விரும்பி அவள் சொன்னபடி நடக்க விரும்புபவர் சிறந்த அறப் பயனை அடையமாட்டார். யாதானும் ஒரு செயலைச் செய்து முடிக்க விரும்புபவர் வேண்டாத பொருளும் மனைவியை விரும்பி அவள் வழி ஒழுகுதலேயாம்.

மனை-மனைவி; விழைதல்-விரும்புதல்; வினை விழைதல்-ஒரு வேலையைச் செய்துமுடிக்க விரும்புதல். 901

2. பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

அறத்தினையும் பொருளினையும் பேணாது மனையாளை மட்டும் விரும்புபவன் செல்வம் பெரியதோர் நாணம் உலகத்தே நிற்கும்படியாக அவனுக்கு நாணினைத் தரும்.

பேணாது-விரும்பாது, பாதுகாவாது; பெண்விழைதல்-மனையாளை விரும்புதல்; பெரியதோர் நாண்-உலகோரெல்லாம் கண்டு நாணும்படியான வெட்கம். 902

8. இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும்.

ஒருவன் தன் மனைவியிடத்தில் எந்தக் காலத்திலும் தாழ்ந்து நடக்கும் தகுதியற்ற தன்மை, நல்லாரிடம் செல்லும் போது அவனுக்கு எப்போதும் நாணத்தைக் கொடுக்கும்.

தாழ்ந்த இயல்பின்மை-தாழ்ந்து நடக்கும் தகுதியற்ற தன்மை; எஞ்ஞான்றும் எக்காலத்தும்; (இதை இரண்டு இடத்தும் கூட்டிப் பொருள் செய்க.) 903

4. மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்தல் இன்று.

மனைவிக்கு அஞ்சி நடந்து மறுமைப் பயனை அடையமுயலாத ஒருவன் செயலாற்றும் திறமையில் புகழடைதல் இல்லை.

இம்மை இன்பத்தை மனைவியிடம் அடைவதற்காக மறுமைக்கு வேண்டிய அறங்களைச் செய்யாமல் தன் மனைவிக்கு அஞ்சி நடக்கும் ஒருவனை மறுமை இலாளன் என்றார் வள்ளுவர்.

மறுமையிலாளன்-மறுமைப்பயனை அடையமாட்டாதவன்; வினைஆண்மை-செயலாற்றும் வல்லமை; வீறு-புகழ் பெருமை; இன்று-இல்லை. 904

**5. இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற்று எஞ்ஞான்றும்**
**நல்லார்க்கு நல்ல செயல்.**

மனைவிக்குப் பயந்து வாழ்கின்றவன் நல்லவர்கட்கு ஒரு நல்ல செயலைச் செய்யவும் எப்போதும் அஞ்சுவான். 905

**6. இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள்**
**அமையார்தோள் அஞ்சு பவர்.**

தன் மனைவியின் மூங்கில் போன்ற அழகிய தோளின் மீது கொண்டுள்ள மயக்கத்தால் அவளுக்கு அஞ்சி நடக்கும் ஒருவர், இவ்வுலகில் தேவரைப் போன்று தேவலோக இன்பத்தில் திளைத்து வாழ்ந்தாலும் அவர் பெருமை இல்லாதவரே ஆவர்.

இமையார்-இமைத்தல் இல்லாதவர், தேவர்; பாடு-பெருமை; அமை-மூங்கில். 906

**7. பெண்ஏவல் செய்தொழுகும் ஆண்மையின்**
**பெண்ணே பெருமை உடைத்து.** [நாணுடைப்

நாணம் இல்லாமல் தன் மனைவியின் கட்டளைகட்குக் கீழ்ப்படிந்து நடக்கும் ஓர் ஆண்மகனைவிட நாணம் மிகுந்த பெண்ணே பெருமையுடையவள்.

ஆண்மை என்பதற்கு ஆளுந் தன்மை என்றும், 'பெண்மை' என்பதற்கு அமைதித் தன்மை என்றும் உரையாசிரியர்கள் பொருள் கூறியிருத்தல் நோக்கத்தக்கது. 907

**8. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்**
**பெட்டாங்கு ஒழுகு பவர்.**

தாம் விரும்பியவாறு நடவாமல் தன் மனைவியின் விருப்பத்துக்கு இணங்க நடப்பவர், தம் நண்பருடைய வேண்டுகோளைச் செய்து முடிக்க மாட்டார்; நல்ல அறச் செயலையும் செய்யமாட்டார்.

நட்டார்-நண்பர்; குறை-வேண்டுகோள்; நன்று-நல்ல அறச் செயல்; நன்னுதலாள்-அழகிய நெற்றியையுடையவள்; பெட்டாங்கு-விரும்பிய வண்ணம். 908

9. அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்கண் இல்.

அறச் செயலும், அதை முடித்தற்குக் காரணமாக அமைந்துள்ள பொருளும், பிற கடமைகளும் தம் மனைவியின் கட்டளைப்படி அடங்கி நடப்போருக்கு இல்லை.

அறவினை-அறச்செயல், நீதி நூல்களில் கூறியுள்ளபடி நடக்க முயலும் செயல்கள்; ஆன்ற-அமைந்த, ஆன்ற பொருள்-(அறச் செயற்கு) அமைந்த பொருள்; பிறவினை-பிற கடமைகள். 909

10. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்கு எஞ்ஞான்
பெண்சேர்ந்தாம் பேதைமை இல். [றும்

சிந்தித்துப் பார்க்கும் உள்ளத்தோடு தகுந்த நிலையும் உடைய ஒருவருக்கு எந்தக் காலத்தும் மனையாள் வயப்பட்டு ஒழுகும் அறியாமை இல்லை.

எண்-எண்ணுதல், சிந்தித்தல்; இடம்-நிலை; நெஞ்சத்து இடம் என்பதற்கு விரிந்த உள்ளம் என்றும் பொருள் கொள்வர்; பெண் சேர்ந்து ஆம் பேதைமை-பெண்ணுக்கு அடங்கி நடக்கும் அறியாமை. 910

## 91. வரைவின் மகளிர்

1. அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடி
இன்சொல் இழுக்குத் தரும். [யார்

ஒருவனை அன்புபற்றி விரும்பாது பொருள்பற்றி விரும்பும் பொது மகளிர் இனியசொற்கள் அவனுக்குத் தீமையைத் தரும்.

விழைதல்-விரும்புதல்; ஆய்தொடியார்-ஆய்ந்தெடுத்த வளைகளை அணியும் பெண்களைக் குறிக்கும் சொல்; இங்கே பொது மகளிரைக் குறிப்பிடுகிறது.

வரைவின் மகளிர்-பொது மகளிர்; வரைவு-அளவு; உரிய கணவன் இவன் என்னும் வரையறையின்றிப் பொருள் கொடுப்போர் எவராய் இருப்பினும் அவருக்கு மனைவி போன்று இருந்து இன்பம் தருதலால் 'வரைவின் மகளிர்' என்பது வழக்கு. 911

2. பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பில் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல்.

தமக்குக் கிடைக்கக்கூடிய பயனை அளந்து பார்த்து அதற்கு ஏற்றவாறு இனிய சொற்களைச் சொல்லும் பண்பற்ற மகளிரது அன்பினை ஆராய்ந்து பார்த்து அவர்களை விரும்பாமல் இருத்தல் வேண்டும்.

தூக்குதல்-ஆய்ந்து பார்த்தல், அளந்து பார்த்தல்; பண்புரைத்தல்-இன்சொல் கூறல்; பண்பில் மகளிர்-நற்குணமில்லாத பொருட் பெண்டிர்; நயன்-நன்மை, விருப்பம்-அன்பு; நள்ளல்-விரும்புதல். 912

3. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் [இருட்டறையில்
ஏதில் பிணம்தழீஇ யற்று.

பொருள் தருவாரை விரும்பாமல் பொருளை மட்டும் விரும்பும் பொதுமகளிரது பொய்யாகத் தழுவி மகிழும் இன்பம் பிணம் எடுப்பார் பொருள் பெறும் பொருட்டு முன்பின் அறியாத பிணத்தினை இருட்டறையில் தழுவி யெடுத்தாற் போன்றதே ஆகும்.

பொருட் பெண்டிர்-பொருளுக்காகவே மனைவியைப் போல் நடிக்கும் பொது மகளிர்; முயக்கம்-தழுவி மகிழும் சிற்றின்பம்; ஏதில் பிணம் - முன்பின் அறியாத அயலார் பிணம்; தழீ இயற்று-தழுவுதல் போன்றது.

பொய்ம்மையுடைய பொருட்பெண்டிரைக் கூடிப் பெறும் இன்பம் இருட்டறையில் முன்பின் அறியாத பிணத்தினைத் தழுவிப் பெறும் இன்பம் போன்றதாம் என்றும் பொருள் கூறலாம். 913

4. பொருட்பொருளாளர் புன்னலம் தோயார் அருட் [பொருள்
ஆயும் அறிவி னவர்.

பொருட் செல்வத்தையே பொருளாகக் கருதும் பொது மகளிரின் புன்மையான இன்பத்தை, அருட் செல்வத்தையே பொருளாகக் கொண்டு ஆராயும் அறிவுடையார் அனுபவிக்க எண்ண மாட்டார்.

பொது மகளிரை விரும்புபவர் பொருட் செல்வத்தோடு அருட் செல்வத்தையும் இழப்பர் என்பது கருத்து.

பொருட் பொருளார் – பொருள் ஒன்றையே பொருளாக எண்ணும் பொருட் பெண்டிர்; புன்னலம்-அற்பமான சிற்றின்பம்; தோயார்-அனுபவிக்க எண்ணார்; அருட் பொருள்- அருள் என்னும் உயரிய பொருள். 914

5. பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர்.

இயற்கையான நல்லறிவோடு மாட்சிமைப்பட்ட கல்வி அறிவையும் உடையவர், பொதுவாக எல்லாருக்கும் இன்பம் தரும் பொதுமகளிரின் புன்மையான நலத்தினில் திளைக்க மாட்டார்.

பொது நலத்தார்-பொது மகளிர்; மதிநலம்-இயற்கை அறிவு. 915

6. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

ஆடல், பாடல், அழகு முதலிய தகுதிகளால் செருக்குற்றுச் சிற்றின்பத்தை யாவருக்கும் விலைக்கு விற்கும் தொழிலைப் பரப்பும் பொதுமகளிர் தோளினை நல்லொழுக்கத்தைப் போற்றும் அறிஞர்கள் தழுவமாட்டார்கள்.

தந்நலம்-தங்கள் நல்லொழுக்கம்; பாரிப்பர்-போற்றிப் பாதுகாப்போர், பரப்புவோர்; தோயார்-தழுவமாட்டார்; தகை-தகைமை; பாரிப்பார் தோள்-தம் எண்ணத்தை எவர்க்கும் பரப்பும் பொருட் பெண்டிர் தோள். 916

7. நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சின்
பேணிப் புணர்பவர் தோள்.

மனத்தை நிலைநிறுத்தி அடக்கி ஆளும் ஆற்றல் இல்லாதவர், அன்பு நீங்கலாகப் பிறவற்றின்மேல் ஆசை வைத்துத்

தழுவ எண்ணும் பொருட் பெண்டிர் தோளைப் பொருந்த எண்ணுவர்.

நிறை நெஞ்சம்-உறுதிப்பாடுள்ள மனம்; தோய்வர்-தழுவுவர்; நெஞ்சில் பிற பேணுதல்-அன்பு நீங்கலாகப் பிற வாகிய பணம், ஆடை, ஆபரணம் முதலியவற்றை நெஞ்சில் நினைத்துப் போற்றுதல். 917

8. ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

வஞ்சித்தலில் வல்ல பொதுமகளிரின் சேர்க்கை ஆராய்ந்து பார்க்கும் அறிவில்லார்க்கு 'மோகினி மயக்கு' என்று கூறுவர்.

ஆய்தல்-ஆராய்ந்து பார்த்தல், அணங்கு-மோகினி மயக்கு, வருத்தம் என்றும் கூறலாம். 918

9. வரைவிலா மாணிழையார் மென்தோள் புரைஇலாப்
பூரியர்கள் ஆழும் அளறு.

பிறரைத் தழுவுதலில் ஒரு வரையறை கொள்ளாத பொது மகளிர் மெல்லிய தோள்கள் உயர்வு இல்லாத கீழ் மக்கள் ஆழ்ந்து கிடக்கின்ற நரகம் ஆகும்.

மாண் இழையார்-மாட்சிமைப்பட்ட அணிகலன்களை அணிந்துள்ள பொது மகளிரைக் குறிக்கும்; புரை-உயர்வு, பூரியர்-கீழ்மக்கள்; அளறு-நாகம். 919

10. இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

இருவகைப்பட்ட மனத்தினையுடைய பொது மகளிரும், கள்ளும், சூதும் ஆகிய இம்மூன்றும் திருமகளால் ஒதுக்கப் பட்டார்க்கு நட்பாகும்.

இருமனம்-இருவகைப்பட்ட மனம், அஃதாவது ஒருவர் மீது அன்பு உள்ளவர்போல் நடித்து, அதே சமயத்தில் அவர் மீது அன்பில்லாமல் இருக்கும் மனம்; கவறு-சூது, சூதாடு கருவி; திரு-இலக்குமி; தொடர்பு-பற்று, நட்பு. 920

## 93. கள்ளுண்ணாமை

1. உட்கப் படாஅர் ஒளிஇழப்பர் எஞ்ஞான்றும்
கள்காதல் கொண்டு ஒழுகுவார்.

எப்பொழுதும் கள்ளின் மீது காதல் கொண்டு ஒழுகுபவர் பகைவரால் எப்பொழுதும் அஞ்சப்படமாட்டார்; அன்றியும் அவர் தமக்கு உள்ள மதிப்பையும் இழப்பர்.

உட்குதல்-அஞ்சுதல்; ஒளி - மதிப்பு, புகழ்; எஞ்ஞான்றும்-எப்போதும்; காதல்-ஆசை.

'எஞ்ஞான்றும்' என்பது இடைநிலைத் தீவகம். 921

2. உண்ணற்க கள்ளை உணில்உண்க சான்றோரால்
எண்ணப் படவேண்டா தார்.

கள்ளை உண்ணுதல் கூடாது; சான்றோரால் நன்கு மதிக்கப்படுவதை விரும்பாதவர் உண்ண விரும்பினால் உண்ணக்கடவர்.

சான்றோர் - அறிவு ஒழுக்கங்களால் நிறைந்த பெரியோர்; எண்ணுதல்-நன்கு மதித்தல்.

நன்மதிப்பை விரும்பாதவர் ஒருவரும் இரார். எனவே, கள்ளுண்ணுதல் கூடாது என்பதனையே வள்ளுவர் இவ்வாறு வற்புறுத்தினார். 922

3. ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

தன்னைப் பெற்றெடுத்த தாயின் முகத்திலும் கள்ளுண்ட மயக்கத்துடன் விழித்தல் அவளுக்குத் துன்பத்தையே தரும். அப்படியானால் ஒழுக்கம் நிறைந்த சான்றோர் முன்னால் ஒருவன் கள்ளுண்ட களிப்போடு நிற்றல் எத்துணை வெறுப்பைத் தரும்.

ஈன்றாள்-பெற்றெடுத்த தாய்; இன்னாது-இன்பத்தைத் தராது. துன்பத்தைத் தரும்; களி-கள்ளுண்டு மயங்கி நிற்கும் நிலை; தாய்க்கு அடுத்தபடியாகச் சான்றோர் அருள் உள்ளம் வாய்ந்தவர், அவராலும் மன்னிக்க முடியாத குற்றம் ஆகும் கள்ளுண்டல் என்பது கருத்து. 923

4. நாணென்னும் நல்லாள் புறங்கொடுக்கும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு. [கள்ளென்னும்

கட்குடித்தல் என்னும் விரும்பத்தகாத பெருங் குற்றத்தைப் புரிபவர் முன்பு நாணம் என்று சொல்லப்படுகின்ற நல்லாள் எதிர் நில்லாமல் திரும்பிப் போய் விடுவாள்.

நாண் என்னும் நல்லாள்-நாணம் என்னும் நற்குணத்தை வள்ளுவர் ஒரு பெண்ணாக இங்கே உருவகித்துக் கூறுகின்றார்; நல்லாள்-நற்குணம் பலவும் அமைந்த பெண்; புறங்கொடுத்தல் - முதுகிடுதல், திரும்பிச் செல்லுதல்; பேணா-விரும்பத்தகாத.

கட்குடியன் நாணம் என்பதையே இழந்து நிற்பவன் என்பது கருத்து. 924

5. கையறி யாமை உடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

ஒருவன் தான் வருந்திப் பெற்ற பொருளை விலையாகக் கொடுத்துக் கள்ளுண்டு தன் உடம்பைத் தான் அறியாத நிலையை மேற்கொள்ளுதல் பழைய விளைவின் பயன் என்றே சொல்லுதல் வேண்டும்.

கை - செயல்; கையறியாமை - செய்வது அறியாமை; ஆதலால் இதற்குப்'பழவினைப்பயன்' என்றே பரிமேழகர் பொருள் கொள்ளுகின்றார்; பழவினை - முன் பிறப்பில் செய்த தீவினை. 925

6. துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

உறங்கினவர் செத்தாரைவிட வேறுபட்டவர் அல்லர்; அதுபோலவே எஞ்ஞான்றும் கள் உண்டு அறிவு மயங்கி இருப்பவர், விஷத்தை உண்டு அறிவு மயங்கி இருப்போருக்குச் சமமாகவே இருப்பர்.

கள்ளுண்பவர் உறங்குபவர் போன்று மயங்கி இருந்தாலும் செத்துக் கிடப்பவருக்குச் சமமாகவே கருதப்படுவர்; கள்ளுண்டலும் விஷம் உண்டல் போன்று சீக்கிரத்தில் மக்களை இறக்க வைக்கிறது. ஆதலால், இம்மூன்றும் கள் உண்போருக்கு ஒரு வகையில் உவமைகளாகவே அமைந்திருத்தல் காண்க. 926

7. உள்ளொற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

கள்ளை மறைந்துண்டு அறிவுமயங்கி இருப்பவர் உள்ளூரில் வாழ்கின்றவரால் துப்பறியப் பெற்று எந்நாளும் எள்ளி நகையாடப் பெறுவர்.

உள்ளொற்றி-உள்ளே நிகழும் செயல்கள் துப்பறியப் பெற்று; உள்ளூர்-தம் சொந்த ஊரில் வாழும் மக்களால்; நகப்படுவர்-எள்ளி நகையாடுதல்: ஏளனச்சிரிப்பு; எஞ்ஞான்றும்-எக்காலத்தும்; கள் ஒற்றி-கள்ளினை மறைவாக இருந்து அருந்தி; கண் சாய்தல்- அறிவு மயங்கியிருத்தல். 927

8. களித்தறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்து
ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்.

மறைந்து கள்ளுண்பவன் ''யான் ஒருபோதும் கள்ளுண்டறியேன்'' என்று சொல்லுதலை விட்டுவிடுக. ஏனெனில் நெஞ்சில் மறைத்துவைத்திருந்த அந்தக்குற்றமும் கள்ளுண்ட அப்போதே அவன் வாயிலிருந்து வெளிப்பட்டு விடும்.

குறிப்பு : 'கள்ளைக் குடித்தவன் உள்ளதைச் சொல்லுவான்' என்பது பழமொழி. 928

9. களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

கள் குடியன் ஒருவனுக்குக் கள்ளினால் விளையும் கெடுதிகளைக் காரணம் காட்டி விளக்குதல் நீரில் மூழ்கியுள்ள ஒருவனை மற்றொருவன் விளக்கினைக் கொண்டு தேடுவாற் போன்றதே ஆகும்.

நீரில் மூழ்கி இருப்பவனை விளக்கைக் கொண்டு தேடிக் கண்டறிவது முடியாதது போலக் கள்ளுண்டு களிப்பவனுக்கும் அதன் கெடுதியை விளக்கிக் கூறி அவனைத் திருத்த முடியாது என்பதாம்.

காரணம் காட்டுதல்-விளக்கிக் கூறல்; நீர்க் கீழ்க் குளித்தான்-நீரில் மூழ்கியுள்ளவன்; தீ-விளக்கு; துரீஇயற்று-தேடுவாற் போன்றது. 929

10. கள்ளுண்ணாப் போழ்தில் களித்தானைக்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு. [காணுங்கால்

கள்ளுண்பான் ஒருவன் தான் கள்ளுண்ணாதபோது கள்ளுண்டு மயங்கிக் கிடக்கும் பிறனொருவனைக் காணும்போது கள்ளுண்டு மயங்குவதனால் அடையும் இழிந்த நிலையை நினைத்துப் பார்க்க மாட்டான் போலும்; (அந்த இழிந்த நிலையை நினைப்பானாயின் அவன் கள்ளுண்டலைக் கைவிடுவான் என்பது கருத்து.)

கொல்-ஐயப்பாட்டினைக் குறிக்க வந்த இடைச்சொல். 930

## 94. சூது

1. வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டில்பொன் மீன்விழுங்கி யற்று.

ஒருவன் சூதாட்டத்தில் வெல்லும் திறமையுடையவனாக இருந்தாலும் அவன் சூதாடுதலை விரும்புதல் கூடாது. சூதாட்டத்தில் வென்ற பொருளும் இரை வைத்து மறைந்த தூண்டில் இரும்பை இரை என்று மயங்கி மீன் விழுங்கினாற் போன்றதே ஆகும்.

தூண்டில்-மீன் பிடிக்கும் கருவி; பொன்-இரும்பு; ஒருமுறை சூதாடி வென்றவன் மீண்டும் மீண்டும் சூதாடுவதால் தன் கைப்பொருளை இழந்து வருந்துவதற்குத் தூண்டில் இரும்பை விழுங்கிய மீன் அழிந்துபோவதை உவமையாகக் கூறினார்.

இரும்பில் உள்ள புழுவை விரும்பி விழுங்கிய மீனானது முடிவில் தன் உயிரையே மாய்த்துக் கொள்வது போன்று முதலில் வந்த சிறுபொருளை எண்ணிச் சூதாடுபவன் முடிவில் தன் கையில் உள்ள எல்லாப் பொருள்களையும் இழந்து விடுகின்றான் என்பது இக்குறளின் பொருளாகும். 931

2. ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு.

சூதாட்டத்தில் ஒரு பொருளைப் பெற்ற ஆசையாலே மேலும் மேலும் பொருள் பெறலாம் என்று எண்ணிச் சூதாடி, நூறு மடங்குப் பொருளை இழந்து வருந்தும் சூதாட்டக்காரருக்கும் அவர் நலம் பெற்று வாழும் ஒரு வழி உண்டாகுமோ? உண்டாகாது.

சூதர் - சூதாடிகள் ; கொல் - ஐயத்தைக் குறிக்க வந்த இடைச் சொல் ; நன்று - நன்மை ; ஆறு - வழி. 932

**3. உருளாயம் ஓவாது கூறின் பொருளாயம்**
**போஒய்ப் புறமே படும்.**

உருளுந் தன்மை வாய்ந்த சூதாடு கருவியை வைத்துக் கொண்டு ஒருவன் இடைவிடாது (பகடை பன்னிரண்டு, தாயம் என்பன போன்றவற்றைக்) கூறிச் சூதாடினால் பொருள் வருவாய் அவனை விட்டுத் தொலைந்து போய்ப் பிறனொருவனிடம் தங்கும்.

உருள் ஆயம்-உருளுந் தன்மை வாய்ந்த சூதாடு கருவி; ஓவாது - ஒழியாது ; கூறுதல் - தனக்கு வேண்டும் எண்களை வாயால் சொல்லிக் கொண்டேயிருத்தல் ஆயம் - வருவாய் ; புறமே படும் - பிறரிடம் சேரும். 933

**4. சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்**
**வறுமை தருவதொன்று இல்.**

ஒருவனுக்குத் துன்பம் பலவற்றையும் செய்து, அவனுடைய புகழையும் கெடுக்கின்ற சூதினைப் போல வறுமையைத் தருவது வேறொன்றும் இல்லை. 934

**5. கவறும் கழகமும் கையும் தருக்கி**
**இவறியார் இல்லாகி யார்.**

சூதாடு கருவியையும், அஃது ஆடும் இடத்தையும், ஆடும் கைத்திறனையும் மதித்துக் கைவிடாதவர் வறியராயினார்.

கவறு - சூதாடும் கருவி ; கழகம் - சூதாடும் இடம் ; கை - சூது ஆடும் கைத்திறமை ; தருக்குதல் - மதித்தல்; இவறுதல் - விடாது பற்றுதல், விரும்புதல்; இல்லாகியார் - வறியராயினார். 935

6. அகடாரார் அல்லல் உழப்பர் சூதுஎன்னும்
முகடியான் மூடப்பட் டார்.

சூது என்னும் மூதேவியால் மறைக்கப்பட்டவர் வயிறு நிறைய உண்ணமாட்டார்; மிக்க துன்பப்பட்டு வருந்துவர்.

அகடு - வயிறு; ஆர்தல் - உண்டல்; அல்லல் - துன்பம்; உழப்பர் - வருந்துவர்; முகடி - மூதேவி; மூடப்படுதல் - மறைக்கப்படுதல். 936

7. பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்.

ஒருவனுடைய காலமானது சூதாடும் இடத்தில் கழியுமானால் அது தொன்றுதொட்டு வந்த செல்வத்தையும் இயல்பான நற்குணத்தையும் கெடுக்கும்.

பழகிய செல்வம் - மூதாதையர் சேர்த்து வைத்த செல்வம், பழமையாய் இருந்து வந்த செல்வம்; காலை - காலம், இளம்பருவம் என்றும் பொருள் கொள்வர். 937

8. பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள்
அல்லல் உழப்பிக்கும் சூது. [கெடுத்து

சூதானது தன்னைப் பற்றினவனது பொருளைத் தொலைத்துப் பொய்யை மேற்கொள்ளச் செய்து, அவனது இரக்க குணத்தையும் கெடுத்துத் துன்பத்திலும் வருந்தச் செய்யும்.

மேற்கொளீஇ - மேற்கொள்ளச் செய்து, அருள் - கருணை; அல்லல் - துன்பம்; உழப்புதல் - வருந்தச் செய்தல். 938

9. உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்
அடையாவாம் ஆயம் கொளின்

சூதாடுதலை ஒருவன் மேற்கொள்ளுவானானால் உடை, செல்வம், உணவு, புகழ், கல்வி என்னும் ஐந்தும் அவனைச் சேரமாட்டா.

ஊண் - உணவு; ஒளி - புகழ்; ஆயம் - சூதாடும் கருவி. 939

10. இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற் றுயிர்.

பொருளை இழக்குந்தோறும் மேலும்மேலும் ஆடத் தூண்டும் சூதைப்போல உடல் துன்பப்பட்டு வருந்த வருந்த, உயிர் அந்த உடம்பின்மீது ஆசையை உடையதாகிறது.

இழத்தொறூஉம் - இழக்குந்தோறும்; காதலித்தல் விரும்புதல்; உழத்தொறூஉம் - வருந்த வருந்த; காதற்று- காதலை உடையதாக இருக்கிறது. 940

## 95. மருந்து

1. மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று.

மருத்துவ நூலோர் வாதம், பித்தம், சிலேத்துமம் என வகுத்துச் சொல்லும் மூன்றும் உடம்புக்கு ஏற்ற அளவில் இல்லாமல் மிகுந்தாலும் குறைந்தாலும் நோய் செய்யும்.

நூலோர் . மருத்துவம் வல்ல நூலாசிரியர்கள்; வளி முதலா எண்ணிய மூன்று - வாதம், பித்தமம், சிலேத்தும் என வகுத்துச் சொல்லிய மூன்று ' வளி - வாதம், வாயு; சிலேத்துமம் - கபம். 941

2. மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்.

ஒருவன் தான் முன்பு உட்கொண்ட உணவு நன்றாகச் செரித்த தன்மையை ஆராய்ந்து அறிந்து பின்பு உண்டால் அவன் உடம்பிற்கு மருந்து என ஒன்று வேண்டியதில்லை.

யாக்கை - உடம்பு; அருந்தியது அற்றது - முன்பு உட்கொண்ட உணவு செரித்தது; போற்றுதல் - தெளிய அறிதல். ஆராய்ந்து அறிதல். 942

3. அற்றால் அளவறிந்து உண்க அஃதுஉடம்பு
பெற்றான் நெடிதுய்க்கும் ஆறு.

முன்பு உண்ட உணவு செரித்துவிட்டால், பின் வயிறு செரித்துக் கொள்ளும் அளவு அறிந்து உண்ணவேண்டும். அவ்விதம் செய்தலே உடம்பைப் பெற்றவன் அதனை நெடுங்காலம் நிலைத்து நிற்கும்படி செலுத்தும் வழி ஆகும்.

அற்றல் - செரித்தல் ; நெடிது உய்த்தல் - நீண்ட காலம் நிலைத்து நிற்கும்படி செலுத்துதல் ; ஆறு - வழி. 943

**4. அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல**
**துய்க்க துவரப் பசித்து.**

முன் உண்ட உணவு செரித்ததனை அறிந்து, நன்றாகப் பசித்த பிறகு உடம்புக்கு மாறுபாடு இல்லாத உணவு களையே உண்ண வேண்டும் என்பதை உறுதியாகக் கொண்டு அவற்றையே உண்ணவேண்டும்.

கடைப்பிடித்தல் - உறுதியாக இருத்தல் ; மாறல்ல - மாறுபாடு இல்லாதவை, உடம்புக்குத் தீங்கு புரியாதவை ; துவரப் பசித்தல் - நன்றாகப் பசித்தல். 944

**5. மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்**
**ஊறுபாடு இல்லை உயிர்க்கு.**

உடல் நலத்துக்கு மாறுபாடு இல்லாத உணவை அளவுக்கு மீறாமல் உண்டால் உயிருக்கு நேரக்கூடிய பிணித் துன்பம் யாதும் இல்லை!

மாறுபாடு - உடம்புக்கு ஒவ்வாத தன்மை ; மறுத்து உண்ணல் - (அளவு மீறின்) தடுத்து அளவோடு உண்ணல். 945

**6. இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்**
**கழிபேர் இரையான்கண் நோய்.**

ஒருவன் தன் உடம்புக்கு ஏற்ற குறைந்த அளவு உணவு இன்ன அளவினது என்பதை அறிந்து உண்பவனிடத்தில் இன்பம் நீங்காது நிற்றல்போல் மிகப் பெரிய உணவை உட் கொள்ளுபவனிடம் நோய் நீங்காது நிற்கும்.

இழிவு அறிதல் - உட்கொள்ளத்தக்க உணவின் குறைந்த அளவை அறிதல் ; உண்பான்கண் - உண்பவனிடம் ; கழிபேர் இரை - மிகவும் அதிகமான உணவு. 946

**7. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்**
**நோயள வின்றிப் படும்.**

உணவு செரித்தற்குத் தன வயிற்றில் உள்ள சூட்டின் அளவுக்கு ஏற்றவாறு இல்லாமல் ஒருவன் அறியாமையால் மிகுதியாக உண்பானாயின் அவனுக்கு நோய்கள் அளவில் லாமல் ஏற்படும்.

தீ அளவு - உணவு செரித்தற்கு ஒருவன் வயிற்றில் தங்கியிருக்கும் சூட்டின் அளவு, படும் - ஏற்படும் ; செரிக்கும் அளவறிந்து உண்ணுதல் வேண்டும் என்பதாம். 947

8. நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

நோய் இன்னது என்பதை ஆராய்ந்து அறிந்து, அந்நோய்க்கு முதற் காரணம் இன்னது என்பதையும் ஆராய்ந்து அறிந்து அந்நோயினை தீர்க்கும் வழியையும் ஆராய்ந்து உணர்ந்து, அவரவர் உடம்பின் தன்மைக்கும் கால நிலையின் தன்மைக்கும் ஏற்ற வண்ணம் மருத்துவம் செய்தல் வேண்டும்.

நாடுதல் - ஆராய்ந்து அறிதல் ; முதல் நாடி - முதற் காரணத்தை ஆராய்ந்து அறிந்து ; தணித்தல் - ஆற்றல், தீர்த்தல் ; வாய் - வழி ; வாய்ப்ப - பொருந்த. 948

9. உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல்.

நோயாளியின் உடல் நிலை, வயது முதலியவைகளின் அளவையும், அவனுக்கு நேர்ந்துள்ள நோயின் அளவையும், அந்நோயைத் தீர்த்தற்கு ஏற்ற காலத்தையும் நன்றாகத் தன் உள்ளத்தில் எண்ணிப் பார்த்துக் கற்றறிருந்த மருத்துவன் மருத்துவம் புரிதல் வேண்டும்.

உற்றான் - நோய் உற்றவன், நோயாளி; கற்றான் - கற்றுவல்ல மருத்துவன்; கருதுதல் - எண்ணிப்பார்த்தல்.
949

10. உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வான்என்று
அப்பால்நால் கூற்றே மருந்து.

நோய் உற்றவன், நோயைத் தீர்ப்பவன், நோய்க்குத் தக்க மருந்து, மருந்தை அளவும் காலமும் அறிந்து அருகேயிருந்து தருபவன் என்ற அந்த நான்கு பாகுபாடுகளையும் உடையதே மருத்துவ முறையாகும்.

உற்றவன் - நோயாளன் ; தீர்ப்பான் - மருத்துவன் ; உழைச் செல்வான் - பிணியாளனுக்கு உடனிருந்து உதவுபவன் ; அப்பால் - அந்தப் பகுதி ; நால் கூற்று - நான்கு பாகுபாடு. 950

# ஒழிபியல்

## 96. குடிமை

**1. இற்பிறந்தார் கண்ணல்லது இல்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு.**

நல்ல குடும்பத்தில் பிறந்தவரிடம் அல்லாமல் பிறரிடம் நடுநிலைமை, நாணமுடைமை ஆகியவை ஒருசேர இயல்பாக அமைவதில்லை.

இல் பிறந்தார் - நல்ல குடும்பத்தில் பிறந்தவர்; இயல்பு-எந்த நூலையும் கற்காமலிருந்தும் பிறர் சொல்லக் கேளாமல் இருந்தும் குடும்பக் கால்வழியாக இயற்கையாக அமையும் குணம்; செப்பம் - நடுநிலைமை; நாணம் - செய்யத் தகாத ஒன்றைச் செய்யத் தயங்கும் குணம்; ஒருங்கு - ஒருசேர ஒன்றாக.

குறிப்பு: ஒழிபியல் நூலின்கண் முன் இயல்களில் சொல்லாது ஒழிந்தவற்றைக் கூறும் இயல். மணக்குடவரும் பிறரும் இதனைக் குடியியல் என்பர். குடி இயலாவது அரசரும் அமைச்சரும் வீரரும் அல்லாத மக்களது இயல்பு கூறுதல் என்பர் மணக்குடவர். 951

**2. ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்.**

உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர்கள் ஒழுக்கம், மெய்ம்மை, நாணம் ஆகிய இம்மூன்று குணங்களிலிருந்தும் தவறமாட்டார்கள். 952

**3. நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு.**

முகமலர்ச்சி, கொடுக்குங் குணம், இனிய சொல், பிறரை இகழ்ந்து பேசாமை ஆகிய நான்கும் உண்மையான நல்ல குடும்பத்தில் பிறந்தவர்க்கு உரிய கூறுபாடுகள் என்று நல்லோர் சொல்லுவர். 953

4. அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர்.

பல கோடி அளவில் அடுக்கிய பொருளைப் பெற்றாலும் நல்ல குடும்பத்தில் பிறந்தவர்கள் தங்கள் குடியின் சிறப்புக் குன்றுவதற்குக் காரணமான தீய செயல்களைச் செய்ய மாட்டார்கள்.

குன்றுவ – பிறரால் இகழப்படுவதற்குக் காரணமான தீய செயல்கள். 954

5. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பின் தலைப்பிரிதல் இன்று.

தாம் முன்பு பிறருக்குக் கொடுத்துதவியதைவிட வறுமையின் காரணமாகக் குறைவாகக் கொடுத்துதவக் கூடிய நிலை நேர்ந்த போதும் பழம் பெருமையுடைய குடும்பத்தில் பிறந்தவர்கள் தம் இயல்பிலிருந்து நீங்குவது இல்லை.

உள் வீழ்தல் – சுருங்க நேர்தல், குறைவாகக் கொடுக்க நேர்தல் ; பழங்குடி - பல தலைமுறையாக நல்ல குடும்பம் என்று பேரெடுத்து வந்த குடும்பம் ; பண்பு – கொடுத்துதவும் குணம் ; தலைப்பிரிதல் - நீங்குதல். 955

6. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்தும்என் பார்.

'குற்றமற்ற நற்குடிப் பண்புடன் வாழ்வோம்' என்று எண்ணி வாழ்பவர், கோபம் காரணமாக அல்லது வஞ்சிக்கும் காரணம் கொண்டு தமக்குத் தகுதியில்லாத இழிசெயல்களைச் செய்யமாட்டார்.

சலம் - வஞ்சனை அல்லது கோபம்; சால்பு-தகுதி, நல்ல பண்பு ; மாசு அற்ற குலம் - குற்றம் அற்ற குடி. 956

7. குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து.

உயர்ந்த குடும்பத்தாரிடம் உண்டாகும் குற்றம் வானத்தில் உள்ள சந்திரனிடம் காணப்படும் களங்கம் போலப் பலரும் அறியும்படி உயர்ந்து தோன்றும்.

விசும்பு - வானம்; மதி - சந்திரன் ; மறு - களங்கம். 957

**8. நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்**
**குலத்தின்கண் ஐயப் படும்.**

ஒருவனுக்கு நல்ல குணத்தில் அன்பின்மை தோன்றினால் அவன் குடிப் பிறப்பின்கண் ஐயங்கொள்ள நேரும்.

*நார் – அன்பு ; ஐயப்படல் - சந்தேகப்படுதல்.* 958

**9. நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்**
**குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல்.**

நிலத்தின் இயல்பை அந்த நிலத்தில் முளைத்த முளை தெரிவிக்கும் ; அதுபோல ஒருவன் பிறந்த குலத்தின் தன்மையை அவன் வாய்ச்சொல் அறிவிக்கும்.

*கால் - முளை ; காட்டும் - அறிவிக்கும்.* 959

**10. நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்**
**வேண்டும் யார்க்கும் பணிவு. [வேண்டின்**

ஒருவன் தனக்கு நலம் வேண்டும் என்று விரும்புவானானால் அவன் நாணம் என்னும் பண்பினை விரும்புதல் வேண்டும். அவ்விதமே குடியின் உயர்வை அவன் விரும்புவானானால் அவன் எல்லாரிடத்தும் பணிந்து நடத்தலை விரும்புவானாக.

*நாணுடைமை - தகாதவற்றைச் செய்ய அஞ்சும் தன்மை.* 960

## 97. மானம்

**1. இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்**
**குன்ற வருப விடல்.**

இன்றியமையாத சிறந்த செயல்களே ஆயினும் அவற்றால் ஒருவன் குடிப்பிறப்புத் தாழ நேரின் அந்தச் செயல்களை அவன் ஒழித்தல் வேண்டும்.

*இன்றி அமையாச் சிறப்பின - பசுவுக்கு நீர் வேண்டுதல் பெற்ற தாயின் பொருட்டு இழி செயல் புரிதல் போல்வன. குன்ற வருப - தன் நிலை அல்லது தன் குடும்ப நிலை தாழ்வாகக் கருதப்படத்தக்க செயல்கள்.*

மானம் - 'எக்காலத்தும் தமது நிலையில் திரியாமை' என்பர் மணக்குடவர்; 'எந்தக் காலத்தும் தம் நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு நேர்ந்தபோது உயிர் வாழாமையும்' என்பர் பரிமேலழகர். 961

**2. சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு**
**பேராண்மை வேண்டு பவர்.**

மிகுந்த சிறப்பினையும், பேராண்மையினையும் விரும்புகின்றவர் செல்வம் முதலிய பெருமைகள் ஏற்படுமாயினும் புகழைத் தாராத இழிந்த செயல்களைச் செய்யமாட்டார்.

சீர் - சிறப்பு, புகழ், செல்வம்; பேராண்மை - மிகுந்த ஆண்மை.

'சீரினும் சீர் அல்ல செய்யார்' என்னும் சொற்றொடருக்குப் பரிமேலழகர் 'புகழ் செய்யுமிடத்தும் தம் குடிமைக்கு ஒவ்வாத இளிவரவுகளைச் செய்யார்' என்று பொருள் கொள்கின்றார். இதே தொடருக்கு மணக்குடவர் 'தமக்குப் பொருள் மிகுதி உண்டாயினும் நிகரல்லன செய்யார்' என்று பொருள் கொள்கின்றார். 962

**3. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய**
**சுருக்கத்து வேண்டும் உயர்வு.**

நல்ல குடியில் பிறந்தவர் நிறைந்த செல்வம் பெற்ற போது எல்லாரிடமும் பணிவாக இருத்தல் வேண்டும்; செல்வம் குறைந்து சுருங்கிய காலத்தில் அவர் (தம்மைத் தாழ்த்திக் கொள்ளாமல்) தம் குடிப்பிறப்பின் உயர்வைக் காப்பாற்றிக் கொள்ளுதல் வேண்டும்.

பெருக்கம் - செல்வம், பதவி முதலியன உயர்ந்து இருக்கும் சிறந்த நிலை; சிறிய சுருக்கம் - செல்வம், பதவி முதலியன மிகவும் சுருங்கிய வறுமைக்காலம். 963

**4. தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்**
**நிலையின் இழிந்தக் கடை**

மக்கள், தங்கள் உயரிய நிலையிலிருந்து தாழ்ந்த நிலையை அடையும்போது தலையிலிருந்து நீங்கிய மயிரைப்போன்று இகழப்படுவார்கள்.

தலையில் உள்ளவரை நறுநெய் பூசி அணி செய்யப் படும் மயிர் தலையிலிருந்து உதிர்ந்துவிட்டால் வெறுத்து ஒதுக்கப் படுகிறது. அங்ஙனமே தம் நிலையில் உள்ள வரையில் ஒருவருக்குப் பெருமை உண்டு; நிலையின் இழிந்தால் உலகத்தவரால் வெறுக்கவே படுவர் என்பது கருத்து.

மாந்தர் – மக்கள்; இங்கே உயர்குடி மக்களைக் குறிக்கும்; இழிந்த - நீங்கிய, தாழ்ந்த; நிலை - பதவி. 964

5. குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின்.

செல்வம், சிறப்பு முதலியவைகளால் மலை போன்ற நிலையில் உள்ளவரும் இழிவுக்குரிய செயல்களில் ஒரு குன்றி மணி அளவு செய்ய நேர்ந்தாலும் தமக்குரிய மதிப்பில் குறைந்து போய்விடுவர்.

குன்றின் அனையார் - மலைபோன்று உயர்ந்த தன்மையர்; குன்றுவர் - குறைந்துவிடுவர்; குன்றுவ - தாழ்தற்குக் காரணமான செயல்; குன்றி - குன்றிமணி. 965

6. புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை.

தன்னை இகழ்ந்துரைப்பார் பின் சென்று நிற்கும் நிலை ஒருவனுக்கு இம்மையிலும் புகழைத் தாராது; மறுமையிலும் அவனைத் தேவருலகத்துச் செலுத்தாது. எனவே, அவரைப் பின்பற்றிச் செல்வதால் என்ன பயன்?

இகழ்ந்துரைப்பார் பின்சென்று நிற்பவனுக்கு இழிவைத் தவிர்த்து நன்மை சிறிதும் இல்லை என்பது கருத்து.

இன்றால் – இன்று, ஆல், அசை; புத்தேள் நாடு - தேவர் உலகம்; உய்யாது - செலுக்காது; என் - என்ன பயன்; மற்று – அசை நிலை; சென்று நிலை - சென்று நிற்கின்ற நிலை. 966

7. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்
கெட்டான் எனப்படுதல் நன்று. [நிலையே

தன்னை மதித்துத் தம்முடன் சேர்த்துக் கொள்ளாதவர் பின் சென்று ஒருவன் உயிர் வாழ்வதைவிட அவன் தன் நிலையிலேயே நின்று அழிந்தான் என்று சொல்லப் படுதல் அவனுக்கு நன்று.

ஒட்டார் - சேர்த்துக் கொள்ளாதவர், அவமதிப்பவர்; அந்நிலையே - தான் இருந்த துன்ப நிலையிலேயே; கெட்டான் - அழிந்தான், இறந்தொழிந்தான். 967

8. மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கைப் பெருந்
பீடழிய வந்த இடத்து. [தகைமை

ஒருவனுக்குள்ள பெருந்தன்மையானது தன் வலிவை இறக்கக்கூடிய நிலை நேர்ந்தபோது அவன் தன் உடம்பை மட்டும் காத்து வாழும் வாழ்க்கை இறவாமைக்கு மருந்தாகுமோ? ஆகாது.

மருந்து - இறவாமல் இருக்கச் செய்யும் தேவாமிர்தம்; ஊன் - தசை, இங்கே உடம் பினைக் குறிக்கும்; ஓம்புதல் - பாதுகாத்தல்; பீடு - பெருமை அல்லது வலிமை; பெருந்தகைமை-பெரிய தகைமை, பெருமதிப்பு. 968

9. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

தன் உடம்பிலிருந்து ஒரு மயிர் நீங்கினாலும் உயிர் வாழாத கவரிமான் போன்ற இயல்புடையவர் மானம் அழிய நேர்ந்தால் உயிரை விட்டுவிடுவர்.

கவரிமான் - ஒருவகை மான்; அன்னார் -போன்றவர்; உயிர் நீப்பர் - உயிரை விட்டுவிடுவர்; மானம் வரின் - மானம் கெடவரின். 969

10. இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு.

தமக்கு இழிவு நேர்ந்தவிடத்து உயிர் வாழாத மானமுடையவரின் புகழை உலகத்தார் வணங்கிப் போற்றுவர்.

இளி - இழிவு, மானக்கேடு; ஒளி பெருமை, புகழ் தொழுது ஏத்தும் - வணங்கிப் போற்றுவர். 970

## 98. பெருமை

1. ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை இளிஒருவற்கு
அஃதுஇறந்து வாழ்தும் எனல்.

ஒருவனுக்குப் பெருமதிப்பாவது செயற்கரிய செயலைச் செய்ய எண்ணும் ஊக்க மிகுதியே ஆகும் ; ஒருவனுக்கு இழிவானது அந்த ஊக்க மிகுதி இல்லாமலேயே உயிர் வாழலாம் என்று எண்ணுதலே யாகும்.

உள்ள வெறுக்கை - ஊக்க மிகுதி ; அஃது இறந்து அந்த ஊக்க மிகுதி நீங்கி ; வாழ்தும் - வாழலாம் ; எனல்- என்று எண்ணுதல். 971

2. பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒரு தன்மையானதே ; ஆனால் ஒருவன் செய்யும் தொழிலினது உயர்வு தாழ்வு வேறுபாடுகளால் சிறப்பியல்பு ஒத்திருப்பதில்லை.

ஒக்கும் - ஒத்திருக்கும், ஒரே தன்மையுடையதாக இருக்கும் ; சிறப்பு - பெருமை சிறுமை என்னும் சிறப்பியல்புகள். 972

3. மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லர் கீழல் லவர்.

மேலான இடத்தில் இருந்தாலும் மேன்மைக்குணம் இல்லாதவர் மேன்மக்கள் ஆகார். கீழான இடத்தில் இருந்தாலும் கீழ்மைக்குணம் இல்லாத மேன்மக்கள் கீழ்மக்கள் ஆகார்.

மேல் - மேலிடம், உயர்ந்த பதவி ,உயர்ந்த குடும்பம் முதலியன ; கீழ் - தாழ்ந்த பதவி, தாழ்ந்த குடும்பம். 973

4. ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு.

ஒரே மன உறுதியோடுள்ள கற்புடைய மகளிர் போல ஒருவன் தன் ஒழுக்கத்திலே ஒரே மன உறுதியோடு இருந்து தன்னைத்தான் காத்துக்கொண்டு ஒழுகி வருவானாயின் அவனிடம் பெருமைக் குணம் உண்டு.

ஒருமை மகளிர்-தம் கணவரையே தெய்வமாக மதித்து, அவர் கருத்துப்படி மன உறுதியோடு நடக்கும் கற்புடைய மகளிர்; தன்னைத் தானே காத்துக் கொண்டு வாழ்க்கையை நடத்துதல். 974

5. பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல்.

பெருமைக்கு உரிய குணம் உடையவர், பிறர் செய்வதற்கு அரியனவாய செயல்களைச் செய்து முடிக்கும் வழியில் வழுவாது இருந்து செய்து முடிப்பர். 975

6. சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னும் நோக்கு.

பெரியாரைப் போற்றி அவரது இயல்பினை நாம் துணையாகக் கொள்வோம் என்னும் கருத்து சிறுமையுடையார் அறிவில் புலப்படுதல் இல்லை.

சிறியார்-அறிவிற் சிறியார், குண நலன்களில் சிறுமை யுடையவர்; பேணுதல்-போற்றுதல், நோக்கு-கருத்து. 976

7. இறப்பே புரிந்த தொழிற்றாம் சிறப்பும்தான்
சீரல் லவர்கண் படின்.

பொருள், பதவி முதலியவைகளால் ஆன சிறப்பும் பெருந்தன்மை அற்ற சிறியாரிடத்தில் பொருந்துமானால் அது வரம்பு கடந்த செயல்களைச் செய்விக்கும் தொழிலை உடையதாகும்.

இறப்பு-வரம்பு கடந்த செயல்; தொழிற்று ஆம்-தொழிலை யுடையது ஆகும்; சிறப்பு-பொருள், பதவி முதலியவைகளால் ஆன உயரிய நிலை; சீர் அல்லவர்-சிறப்பற்ற சிறியோர்; படுதல்-பொருந்துதல், தங்குதல். 977

8. பணியுமாம் என்றும் பெருமை ; சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து.

பெருமைக் குணமானது எக்காலத்திலும் பணிவோடு இருக்கும்; மற்றைச் சிறுமைக் குணமோ தன்னைத் தானே புகழ்ந்து பாராட்டிக் கொள்ளும்.

பெருமை, சிறுமை என்பன முறையே பெருந்தன்மை வாய்ந்த பெரியாரையும், சிறுமைக்குணமுடைய சிறியாரையும் குறிக்க வந்தவைகளாகும்.

தன்னை வியந்து அணியும்-தன்னைத்தானே புகழ்ந்து பாராட்டிக் கொள்ளும். 978

9. பெருமை பெருமிதம் இன்மை; சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல்.

பெருமைக் குணமாவது, பெருமைப்படுதற்குரிய காரணம், உண்டான போதும் செருக்கு இல்லாமல் இருத்தல்; சிறுமைக் குணமாவது எத்தகைய காரணம் இன்றியும் அளவுகடந்த செருக்கினைக் கொண்டு இருத்தல்.

பெருமிதம்-செருக்கு, ஊர்ந்துவிடல்—மேற்கொள்ளல். 979

10. அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

பெருமைக் குணம் உடையோர் பிறருடைய குறைபாட்டை மறைத்துப் பேசுவர்; சிறுமைக் குணம் உடையோர் குணத்தை மறைத்துப் பிறருடைய குற்றத்தையே கூறிவிடுவர்.

அற்றம்-அவமானம், குறைபாடு, மறைக்கத் தக்கது; குற்றமே என்பதில் உள்ள ஏகாரம் குற்றத்தைத் தவிர்த்துப் பிற நலன்களை அவர் கூறார் என்பதைத் தெரிவிக்க வந்த இடைச்சொல். 980

## 99. சான்றாண்மை

1. கடனென்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

தம் கடமைகள் இவை என்பதை அறிந்து சான்றாண்மையை மேற்கொண்டு நடப்பவர்க்கு நல்லனவாய குணங்களெல்லாம் இயல்பாய் இருக்கும் என்று அறிஞர் சொல்லுவர்.

கடன்-கடமை, செய்யத்தக்கவை, இயல்பு; சான்றாண்மை—பெருந்தன்மை; பல நற்குணங்களையும் பெற்று ஆளுந்தன்மை. 981

2. குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத் துள்ளதூஉம் அன்று.

சான்றோர் நலமாவது அவருடைய குண நலமே. மற்றதை வேறு எவ்வகையான நலத்திலும் உள்ளதொரு நலம் அன்று. 982

3. அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மை
ஐந்துசால்பு ஊனழிய தூண். [யொடு

அன்புடைமை, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்தும் சால்பினைத் தாங்கும் தூண்களாகும்.

நாணம் – பழி பாவங்களைப் புரிய அஞ்சும் குணம்; ஒப்புரவு - உலக ஒழுக்கத்துக்கு ஒத்து நடந்துகொள்ளுதல்; கண்ணோட்டம் - தாட்சண்யம்; வாய்மை – உண்மை; சால்பு – நற்குணம்; ஊன்றிய - தாங்க நிறுத்திய. 983

4. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

தவம் என்பது ஓர் உயிரையும் கொல்லாத அறத்தை அடிப்படையாகக் கொண்டது. அதுபோலச் சால்பு என்பது பிறருடைய குற்றத்தை எடுத்துச் சொல்லாத நற்குணத்தை அடிப்படையாகக் கொண்டது.

நோன்மை - தவம்; சால்பு - நற்குணம். 984

5. ஆற்றுவார் ஆற்றல் பணிதல்; அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

ஒரு செயலைச் செய்து முடிப்பாரது ஆற்றலாவது அதற்குத் துணையானவர் எல்லார்க்கும் பணிவாக இருத்தல்; அந்தப் பணிவு சான்றோர் தம் பகைவரைப் பகைமையிலிருந்து மாற்றிக் கொள்ளும் கருவி ஆகும்.

ஆற்றுவார் - ஒரு செயலைச் செய்து முடிப்பவர்; ஆற்றல் - வல்லமை, செய்து முடிக்கும் தன்மை; மாற்றார் – பகைவர்; மாற்றுதல் - வேறுபடுத்தல்; படை - கருவி. 985

6. சால்பிற்குக் கட்டளை யாதெனின் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்.

சால்பாகிய பொன்னின் அளவை அறிதற்கு உரைகல்லாகிய செயல் யாது எனில், அது தமக்கு நிகரில்லாதவரிடமும் தோல்வியை ஏற்றுக் கொள்ளும் குணமே ஆகும்.

கட்டளை - உரைகல், பொன்னின் தரத்தை அறிந்து கொள்ள உரைத்துப் பார்க்கும் கல்; துலை - சமம். 986

7. இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு?

தமக்குத் தீமைகளைப் புரிபவர்க்கு இனிய செயல்களைச் செய்யாவிட்டால் 'சால்பு' என்னும் குணத்தால் உண்டாகக் கூடிய நல்ல பயன் வேறு என்னவாக இருத்தல் கூடும்?

இன்னா - தீயன; பயத்தது - பயனைத் தரக்கூடியது. 987

8. இன்மை ஒருவற்கு இளிவன்று சால்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின்.

சால்பு என்று சொல்லப்படும் வலிமை உண்டாகப் பெற்றால் ஒருவனுக்குப் பொருள் இல்லாத வறுமை நிலை இழிவானது அன்று.

இன்மை - பொருளின்மை, வறுமை; இளிவு - இழிவு; திண்மை - வலிமை; உறுதி. 988

9. ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார்.

சான்றாண்மை என்னும் குணத்துக்குக் கடலைப் போன்றவர் என்று புகழப்படுபவர் ஊழிக்காலத்தில் உலகமே நிலை மாறினாலும் தாம் தம் உயரிய கருத்து நிலையிலிருந்து மாறமாட்டார்.

ஊழி - பெருவெள்ளத்தால் உலகம் முடியும் காலம்; ஆழி - கடல். 989

10. சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை.

பல நற்குணங்களாலும் நிறைந்த சான்றோர் தம் தன்மையிலிருந்து குன்றுவாரானால் இந்தப் பெரிய உலகமானது தன்னுடைய பாரத்தைத் தாங்க முடியாததாகி விடும்.

சான்றவர் - பல நற்குணங்களும் நிறைந்தவர்; இருநிலம் - பெரிய உலகம்; பொறை - பாரம்; மன் ஓ என்னும் இரண்டும் இரக்கப் பொருளைக் காட்டவந்த இடைச் சொற்களாகும். 990

## 100. பண்புடைமை

1. எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு.

யாவரிடத்தும் அவர்கள் எளிதாகக் கண்டு உரையாடக் கூடிய தன்மையில் இருப்பதால், பண்புடையவராக வாழும் நல்ல வழியை அடைதல் எளிதென்று அறிஞர் சொல்லுவர்.

யாவரிடத்தும் எளிமையாகப் பழகினால் பண்புடைமை தானே வந்து எய்தும் என்பதாம்.

எண்பதம் – எவரும் எளிதாகக் காணக்கூடிய தன்மை, பண்புடைமை - ஒத்த அன்பினராய்க் கலந்து ஒழுகும் தன்மை; வழக்கு - வழி; என்ப - என்று சொல்லுவர். 991

2. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடைமை என்னும் வழக்கு.

அன்புடையவராக இருத்தலும் உயர்ந்த குடிபிறப்பு உடையவராக இருத்தலும் ஆகிய இவ்விரண்டும் பண்புடைமை என்று உலகத்தார் சொல்லும் நல்ல வழியாகும்.

ஆன்ற குடி - உயர்ந்த குடி; நல்ல வழியாகும். 992

3. உறுப்பொத்தல் மக்களொப்பு அன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு.

உறுப்புக்களில் ஒத்திருத்தல் மட்டும் மக்கள் எனப்படுதற்குரிய ஒப்புமையாகாது. செறியத்தக்க மக்கட்பண்பால் ஒத்திருப்பதே பொருத்தமான ஒப்புமையாம்.

உறுப்பு ஒத்தல் - அவயவங்கள் மட்டும் ஒத்திருத்தல்; வெறுத்தக்க - செறியத் தக்க (செறிவு - நெருக்கம்.)

உறுப்புக்களால் நன்மக்களுக்கு ஒப்பாக இருத்தல் ஒப்புமையாகாது. பண்பால் இவர்கட்கு ஒப்புமையுடையவராக இருத்தலே சிறந்த ஒப்புமையாகும் என்றும் பொருள் கூறலாம். 993

**4. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்**
**பண்புபா ராட்டும் உலகு.**

நீதியையும் நன்மையையும் விரும்பிப் பிறருக்குப் பயன் படும்படி வாழ்பவர்தம் பண்பை உலகத்தார் கொண்டாடுவர்.

நயன் – நீதி; நன்றி - நன்மை; புரிதல் – விரும்புதல்; பயனுடையார் - பயன்படும்படி வாழ்பவர்; உலகு - உலகில் உள்ள பெரியோர் அல்லது உலகத்தவர். 994

**5. நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்**
**பண்புள பாடறிவார் மாட்டு.**

ஒருவரை இகழ்ந்து பேசுதல் விளையாட்டில் கூட நல்லது அன்று. எனவே உலக இயல்பை அறிந்து நடப்பவரிடம் பகைவர்மாட்டும் நல்லபண்புகளே உள்ளனவாகும்.

பண்புடையார், தம் பகைவரிடமும் துன்பம் நேரும் வகையில் நடந்துகொள்ளமாட்டார் என்பது கருத்து.

நகை - விளையாட்டாகப் பேசுதல், சிரிக்க வைப்பதற்காகப் பேசுதல்; இன்னாது நல்லது அன்று, துன்பம் தருவது; பாடறிவார் – உலக இயல்பை அறிந்து நடப்பவர்; பாடு - உலக ஒழுக்கம்.

உதாரணம்: ‘பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்’ (கலித்தொகை) 995

**6. பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்; அதுஇன்றேல்**
**மண்புக்கு மாய்வது மன்.**

பண்புடையவர்கள் தோன்றி வாழ்வதனாலேயே இவ்வுலகம் வாழ்ந்து கொண்டிருக்கிறது. அவர்கள் தோன்றாதொழியின் இவ்வுலகம் மண்ணில் புகுந்து அழிவது உறுதியாகும்.

பண்பு - நல்ல குணம், படுதல் - தோன்றுதல்; மண்புக்கு- மண்ணில் புகுந்து; மாய்தல் - அழிதல்; உலகம் என்பது இங்கு உலகியலைக் குறிக்கிறது. 996

**7. அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்**
**மக்கட்பண்பு இல்லா தவர்.**

ஒருவர், அரம்போன்ற கூர்மையான அறிவுடையவராக இருந்தாலும் அவரிடம் மக்கட்பண்பு என்னும் நல்ல குணம்

இல்லாதிருந்தால் அவர் ஓர் அறிவுடைய மரத்துக்குச் சமம் ஆவார்.

அரம் - இரும்பு முதலிய உலோக வகைகளை ஆராயும் கருவி; மக்கட் பண்பு - மக்களுக்கு இருக்கவேண்டிய நல்ல குணம். மனிதத் தன்மை. 997

8. நண்பற்றா ராகி நயம்இல செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.

ஒருவர், தம்முடன் நட்புக்கொள்ளாது நன்மை அல்லாத செயல்களையே செய்யும் பகைவரிடத்திலும் பண்புடையவராக நடக்காவிட்டால் அவர் இழிந்தவரே ஆவர்.

நண்பு + ஆற்றார் - நண்பாற்றார் ஆற்றார் - நடந்து கொள்ளாதவர்; நயம் - நன்மை, அன்பு, இனிமை; கடை - இழிந்தவர். 998

9. நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள்.

பிறரோடு கலந்து மகிழ்வோடு பழகமுடியாதவர்க்கு மிகப் பெரிய இந்த உலகமானது பகற்காலத்திலும் இருண்டு கிடப்பதாகவே தோன்றும்.

நகல் - அன்போடு கலந்து உறவாடுதல்; மா - பெரிய; இரு - பெரிய; மாயிரு - மிகப்பெரிய; ஞாலம் பூமி, உலகம்.

பகலும் இருளாகப் பட்டன்று என்று கூட்டிப் பகல் பொழுதிலும் இருளின்கண் அழுந்திக் கிடக்கும் என்று கொள்க. 999

10. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று.

நல்ல குணம் இல்லாதவன் பெற்ற பெரிய செல்வம் பயனற்றுப் போவது நல்ல பசுவின் பால், அது வைக்கப் பெற்ற கலத்தின் தீமையால் கெட்டுப் போவது போன்றதாம்.

நன்பால் - நல்ல பசுவின் பால்; கலம் - பாத்திரம்; கலந்தீமை - கலத்தின் தீமை, நன்றாகக் கழுவப் பெறாததால் அழுக்குப் படிந்த செம்பு. திரிந்தற்று - கெட்டுப் போவது போன்றது. 1000

## 101. நன்றியில் செல்வம்

1. வைத்தான் வாய்சான்ற பெரும்பொருள் அஃதுண்
செத்தான் செயக்கிடந்தது இல். [ணான்

வீடுமுழுதும் நிறைந்துள்ள பெரும் பொருளை ஒருவன் சேர்த்து வைத்திருந்து, அதனை அவன் அனுபவிக்காமல் இறந்து போவானானால் அந்தப் பொருளால் அவனுக்குச் செய்ய முடிந்தது ஒன்றும் இல்லை.

வாய் - இடம், இங்கே இது வீட்டைக்குறிக்கும்; சான்ற நிறைந்துள்ள; சால் - நிறைதல்; வாய் சான்ற பொருள் - உண்பதற்காகவே தேடிய பெரும் பொருள் எனப் பொருள் கூறுவதும் பொருந்தும்.

குறிப்பு: "அஃது உண்ணான் செத்தான் செயக் கிடந்தது இல" என்னும் சொற்றொடருக்கு "அவன் அந்தப் பொருளை அனுபவியாமல் அவன் இருந்தானானால் அவன் இறந்தவனுக்கே சமமாவான் ஏனெனில், அவன் அந்தப் பொருளால் செய்யக் கூடியது ஒன்றுமில்லை" என்று உரைப்பினும் அமையும். 1001

2. பொருளானாம் எல்லாமென்று ஈயாது இவறும்
மருளானாம் மாணாப் பிறப்பு.

பொருளாலே எல்லாம் முடியக்கூடும் என்று எண்ணிப் பிறருக்குச் சிறிதும் கொடுக்காமல் இருக்கும் கருமித்தன மாகிய மயக்கத்தினால் சிறப்பில்லாத இழிந்த பிறப்பே உண்டாகும்.

ஆம் எல்லாம் – எல்லாம் ஆகும்; ஈயாது - உதவாமல்; இவறுதல் - கருமியாக இருத்தல்; மருள்-மயக்கம்; மாணாப் பிறப்பு– சிறப்பில்லாத இழிந்த பிறப்பு. மருளான் மாணாப் பிறப்பு ஆம் என இயைக்க. 1002

3. ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை.

பொருளைச் சேர்த்து வைப்பதிலே விருப்பங் கொண்டு பிறர்க்கு உதவுவதால் வரும் புகழையும் விரும்பாத மனிதர் பிறந்திருத்தல் பூமிக்கே பாரம் ஆகும்.

ஈட்டம் - சேர்த்து வைத்தல்; இவறல் - விரும்புதல்; இசை - புகழ்; நிலக்கு - நிலத்துக்கு, பூமிக்கு; பொறை - பாரம்.

'இவறி' என்பதற்கு உலோபகுணம் கொண்டு என்றும் பொருள் கொள்ளலாம். 1003

4. எச்சமென்று என்எண்ணும் கொல்லோ ஒருவரால்
நச்சப் படாஅ தவன்.

பிறருக்கு ஒன்றும் உதவா திருத்தலால், ஒருவராலும் விரும்பப்படாதவன், தான் இறந்த பிறகு எஞ்சி நிற்பது என்று எதனை எண்ணுவானோ?

எச்சம் - எஞ்சி நிற்பது; கொல்லோ - கொல், ஓ - இவை ஐயப்பொருளில் வந்தவை; நச்சுதல் - விரும்புதல். 1004

5. கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு
கோடியுண் டாயினும் இல். [அடுக்கிய

பிறருக்குக் கொடுத்து உதவுவதும், தாம் உண்டு களிப்பதும் இல்லாதாருக்கு அடுக்கடுக்காகப் பலப்பல கோடி மதிப்புள்ள செல்வம் இருப்பதாக இருந்தாலும் அவை யாவும் இல்லாததற்குச் சமமே ஆகும்.

துய்த்தல் - நுகர்தல்; அடுக்கிய கோடி-பலப்பல கோடி. 1005

6. ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்
ஈதல் இயல்பிலா தான். [கொன்று

தானும் அனுபவிக்காமல், தகுதி வாய்ந்தவர்க்கு ஒன்றைக் கொடுத்துதவும் குணமும் இல்லாமல இருபபவன் தன்னிடமுள்ள பெருஞ்செல்வத்துககு ஒரு நோய ஆவன்.

ஏதம் - துன்பம், இங்கே நோய் என்பது பொருள்; துவ்வான் - அனுபவிக்காமல். 1006

7. அற்றார்க்கொன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று.

ஆதரவு அற்றவர்களுக்கு ஒரு சிறு பொருளேனும் கொடுத்து உதவாதவன் செல்வம் எதற்குச் சமம் என்றால்,

ஒருவனை மணந்து கொள்வதற்கு வேண்டிய எல்லா நலங்களும் குறைவறப் பெற்ற கன்னி ஒருத்தி எவரையும் மணந்து கொள்ளாமல், தன்னந் தனியாகவே இருந்து முதுமை அடைந்து வருந்துவதற்குச் சமம் ஆகும்.

அற்றார் - ஆதரவு அற்றவர், வறியவர்; ஒன்று - ஒரு சிறு பொருள்; ஆற்றாதான் - கொடுத்து உதவாதவன்; ஆற்றுதல் - (வேண்டுவன கொடுத்துத் துன்பத்தைத் தணிவித்தல்; மிக நலம் - அளவுக்கு மீறிய நலம்; தமியள்); தனியாக இருப்பவள்; மூத்தற்று - முதுமையுற்றாற் போலும். 1007

**8. நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்**
**நச்சு மரம்பழுத் தற்று.**

பிறரால் விரும்பப்படாத கருமி ஒருவன் செல்வம் பெற்றிருத்தல் ஊர் நடுவில் நச்சு மரம் பழுத்திருத்தலுக்குச் சமம் ஆகும்.

நச்சு மரம் ஊருக்கு நடுவில் இருந்தாலும் அதன் பழத்தை எவரும் விரும்பார்; ஆதலால், அது யாருக்கும் பயனபடாது. அதுபோலப் பிறருக்கு உதவாத கருமியின் பணமும் ஒருவனுக்கும் பயன்படாமல் அழியும்.

நச்சுதல் - விரும்புதல்; நச்சுமரம் - விஷத்தன்மையுள்ள மரம்; பழுத்தற்று - பழங்களையுடையதாக இருத்தற்குச் சமம். 1008

**9. அன்பொரீஇத் தற்செற்று அறம்நோக்காது ஈட்டிய**
**ஒண்பொருள் கொள்வார் பிறர்.**

பிறருடைய அன்பையும் இழந்து, தன்னையும் வருத்தி, அறம் புரியவும் எண்ணாமல் சேர்த்துவைத்த மிக்க செல்வத்தை அயலார் கொண்டு செல்வர்.

ஒரீஇ - நீத்து, விடுத்து; தற்செற்று-தன்னை வருத்திக் கொண்டு. (அஃதாவது உண்ணாமலும் உடுக்காமலும் வருத்திக் கொள்ளுதல்); அறம் நோக்காது - தருமம் புரிய எண்ணாமல்; ஒண்மை-மிகுதி. "ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்" என்பது முதுமொழி. 1009

**10. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி**
**வறங்கூர்ந் தனையது உடைத்து.**

சிறந்த குணநலம் பொருந்திய செல்வர் சிறிதுகாலம் வறுமைப்பட்டிருந்தாலும் அந்தச் சிறிய காலம் எது

போன்று இருக்கும் என்றால் மழை பெய்து உலகைக் காக்கும் மேகமானது வறண்டுபோக மழையைப் பொழியாமல் இருந்தால் உலகத்துக்கு எவ்வளவு துன்பம் உண்டாகுமோ அவ்வளவு துன்பத்தை மக்கள் அனுபவிக்கும் காலமாக இருக்கும்.

சீர் - சிறப்பு, பெருமை; துனி - வெறுப்பு. இங்கே இச்சொல் வெறுக்கத்தக்க வறுமையைக் குறிக்க வந்துள்ளது; மாரி - மழை; மழையைப் பொழியும் மேகத்துக்கு ஆகிவந்தது; வறங்கூர்தல் - மழை பெய்யாது போதல்; வறம் - வற்றுதல்; கூர்தல் - மிகுதல்; அனையது - அத்தன்மையது. 1010

## 102. நாணுடைமை

**1. கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்**
**நல்லவர் நாணுப் பிற.**

செய்யத்தகாத செயல் காரணமாக நாணுவதே நாணம் ஆகும். அஃது அல்லாத பிற நாணங்கள் அழகிய நெற்றியையுடைய பெண்களுக்கு இயல்பாக அமைந்துள்ள நாணத்துக்கே ஒப்பாகும்.

கருமம் - செயல், இங்கே இச்சொல் இழிசெயலைக் குறிக்க வந்துள்ளது. நாணுதல் - நமக்கு ஒவ்வாத செயல்களைச் செய்ய வெட்கப்படுதல்; திரு - அழகிய; நுதல் - நெற்றி; நல்லவர் - பெண்கள். 1011

**2. ஊணுடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல**
**நாணுடைமை மாந்தர் சிறப்பு.**

உணவும் உடையும் அவைபோல்வன பிறவும் எல்லா உயிர்களுக்கும் பொதுவானவை. மக்களுக்குச் சிறப்பாக இருப்பது நாணமே ஆகும்.

ஊண் - உணவு; எச்சம் (ஊண், உடை ஒழிந்த) மிகுதி; அஃதாவது உறக்கம், அச்சம், ஆசை முதலியன போன்று எஞ்சி நிற்பவை; 'எச்சம்' என்பதற்குப் பதிலாக 'அச்சம்' என்று பாடங்கொள்வாரும் உளர். 1012

**3. ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாண்என்னும்**
**நன்மை குறித்தது சால்பு.**

உயிர்களெல்லாம் ஊனாலாகிய உடம்பைத் தமக்கு இருப்பிடமாகக் கொண்டு உள்ளன. அதுபோலச் சால்பு என்பது நாணம் என்று சொல்லப்படும் நற்குணத்தை இருப்பிடமாகக் கொண்டதாகும்.

ஊன் - ஊனாலாகிய உடல்; குறித்த இருப்பிடமாகக் கொண்டன; நன்மை - நல்லகுணம்; சால்பு - மேன்மை.

குறிப்பு: 'ஊனைக் குறித்த' என்றும் பாடபேதம் உண்டு. இதற்கு 'எல்லா உயிர்களும் உணவையே குறிக்கோளாகக் கொண்டு உயிர் வாழ்கின்றன' என்று பொருள் கொள்ளலாம். 1013

4. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு அஃதின்
பிணியன்றோ பீடு நடை? [றேல்

சான்றோருக்கு நாணுடைமையே ஆபரணமாகும்; அந்த நாணம் என்பதை மறந்து பெருமிதத்தோடு நடந்து செல்வது, அந்த நடையைக் கண்டாருக்குப் பிணிபோன்றே தோன்றும்.

பீடுநடை - பெருமித நடை, கர்வத்தோடு எவரையும் பொருட்படுத்தாமல் நடந்து செல்லும் நடை.

குறிப்பு: அழகு செய்தலின் 'அணி' என்றும், காண் போருக்குப் பொறுத்தற்கு இயலாத தன்மையில் இருத்தலின் 'பிணி' என்றும் கூறினார் என்பர் பரிமேலழகர். 1014

5. பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு.

பிறருக்கு வரும் பழியையும் தமக்கு நேர்ந்த பழியையும் அஞ்சி நாணுபவர்களை நாணுக்கு ஓர் இருப்பிடம் என்று உலகத்தார் சொல்லுவர்.

உறைபதி - இருப்பிடம்; உலகு - உலகத்தவர்.

தம் பழிக்கு அஞ்சி நாணுதலே அன்றிப் பிறர் பழிக்கும் அஞ்சி நாணவேண்டும் என்பது கருத்து. 1015

6. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

மேன்மக்கள் தங்களுக்கு நாணத்தைப் பாதுகாப்பாகக் கொள்வார்களே அன்றி அதனை ஒழித்து அகன்ற உலகில் வாழ்வதை விரும்பமாட்டார்கள்.

மேன்மக்கள் நாணத்தை விடுத்து உலகில் வாழ மாட்டார்கள் என்பது கருத்து.

வேலி - பாதுகாப்பு ; வியன் ஞாலம் - இடம் அகன்ற உலகம் ; பேணலர் - விரும்பார். மன்னும் ஓவும் அசை.

குறிப்பு : நாணத்தைப் பாதுகாப்பாகக் கொள்வதன்றி ஞாலமே பெறக்கூடும் எனினும் மேலோர் விரும்பார் என்று பொருள் கூறுவாரும் உண்டு. 1016

7. நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாணாள் பவர்.

நாணம் ஒன்றையே குறிக்கோளாகக்கொண்டு வாழ்பவர் நாணத்துக்காக உயிரை விடுவாரே அன்றி உயிருக்காக நாணினை இழக்கமாட்டார்.

துறத்தல் - இழத்தல், நீங்கியிருத்தல், விடுதல் ; நாண் ஆளுதல் - நாணினைத் தம் கொள்கையாகக் கொண்டு ஒழுகுதல்.

நாணம் உயிரினும் சிறந்தது என்பது கருத்து. 1017

8. பிறர்நாணத் தக்கது தான்நாணான் ஆயின்
அறம்நாணத் தக்கது உடைத்து.

பிறர் கண்டு நாணத்தக்க பழியைத் தான் நாணாது செய்வானானால் அச் செயல் அறம் நாணி அவனைவிட்டு விலகக்கூடிய குற்றத்தினை உடையதாகும்.

நாணமில்லாதவரிடம் அறச்செயல் சிறிதும் இராது என்பது கருத்து. 1018

9. குலம்சுடும் கொள்கை பிழைப்பின் நலம்சுடும்
நாணின்மை நின்றக் கடை.

ஒருவன் தன் ஒழுக்கத்திலிருந்து தவறி நடப்பானானால் அஃது அவன் குடிப்பிறப்பின் உயர்வை மட்டும் கெடுக்கும். அவனிடத்தில் நாணமில்லாத தன்மை நிலைபெற்று இருக்குமானால் அஃது அவன் நலன்களையெல்லாம் கெடுத்துவிடும்.

குலம் - குடிப்பிறப்பு ; சுடுதல் - கெடுத்தல், அழித்தல் ; நின்றக்கடை - நிலைபெற்று இருக்குமானால்.

ஒழுக்க அழிவினும் நாண் அழிவு மிகவும் தீயது என்பது கருத்து. 1019

**10. நாண்அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை**
**நாணால் உயிர்மருட்டி யற்று.**

உள்ளத்தில் நாணம் இல்லாத மக்கள் உலகத்தில் நடமாடுதல் எதற்குச் சமம் என்றால் மரத்தால் செய்யப் பட்ட பதுமையானது கயிறு கொண்டு ஆட்டப்படுவதனால் இயங்கிக் காண்போருக்கு உயிர் உள்ளதாகத் தோன்றி மயக்குவதற்குச் சமமாகும்.

அகம்-உள்ளம், மனம்; இயக்கம் -நடமாட்டம்; பாவை-பதுமை, நாண் – நாணம்; நாணால் - கயிற்றால்.

நாணம் இல்லாதார் மக்களே அல்லர்; உயிரற்ற மரம் போல்வர் என்பது கருத்து. 1020

## 103. குடிசெயல் வகை

**1. கருமம் செயஒருவன் கைதுவேன் என்னும்**
**பெருமையில் பீடுடையது இல.**

ஒருவன் தான் செய்ய மேற்கொண்ட செயலைச் செய்யும்போது இச் செயலைச் செய்து முடிக்கும்வரை தான் சோர்வடைய மாட்டேன் என்று சொல்லும் பெருமையைப்போல மேம்பாடானதுவேறு ஒன்றும் இல்லை.

கருமம்-செயல், இஃது இங்கே குடும்பச் செயலைக் குறிக்கும் ; கைதூவல் - சோர்வு கொள்ளல் ; கைதூவேன்-சோர் வடையமாட்டேன் ; பீடு - பெருமை, மேன்மை.

குடிசெயல் வகை - பிறந்த குடும்பத்தை உயரச் செய்யும் திறமை. 1021

**2. ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின்**
**நீள்வினையான் நீளும் குடி.**

முயற்சியும் நிறைந்த அறிவும் ஆகிய இரண்டினையும் உடைய இடையறாத செயலால் ஒருவன் குடும்பம் உயரும்.

ஆள்வினை - முயற்சி ; ஆன்ற - நிறைந்த ; நீள்வினை-விடாது புரியும் செயல்; நீளும் குடி-குடும்பம் உயரும். 1022

3. குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.

'என் குடும்பத்தை உயரச் செய்வேன்' என்று கூறி அதற்காக முயற்சி செய்யும் ஒருவனுக்குத் தெய்வம் தன் ஆடையை இறுகக் கட்டிக்கொண்டு உதவி புரிய முன்வந்து நிற்கும்.

செய்வல் - செய்வேன்; தெய்வம் - இச்சொல் இங்கே ஊழ்வினையைக் குறிக்க வந்தது. மடிதற்றுதல்-தொழில் புரிவார் தம் ஆடையை இறுகக்கட்டிக்கொள்ளும் பழக்கத்தைக் குறிக்கும்; தெய்வம் அல்லது ஊழ்வினை மடிதற்றுதலாவது, ஒருவன் செய்யும் முயற்சியை அவன் ஊழ்வினை மிகவும் எளிய தன்மையில் நிறைவேற்றி வைக்கும் என்பதாம்; முந்துறுதல் - முன்வந்து நிற்றல். 1023

4. சூழாமல் தானே முடிவெய்தும் தன்குடியைத்
தாழாது உஞற்று பவர்க்கு.

தம் குடும்பம் உயர்வதற்கான செயலை விரைந்து செய்ய முயல்வார்க்கு அவர் எண்ணிப் பார்ப்பதற்குள் அச்செயல் தானே நிறைவேறும்.

சூழ்தல் - எண்ணிப் பார்த்தல்; முடிவெய்தல் - நிறைவேறுதல்; தாழாது - தாமதம் செய்யாமல், அஃதாவது விரைந்து; உஞற்றுதல்- முயலுதல். 1024

5. குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு.

குற்றமற்றவராக இருந்து தன் குடும்பத்தையும் உயர்த்துவதற்கான முயற்சியில் ஈடுபட்டு வாழும் ஒருவனை உலகத்தார் வலிய வந்து சுற்றத்தார் போன்று சூழ்ந்து கொண்டிருப்பர்.

குற்றம் இலன் - உள்ளத்தாலும் உடலாலும் எத்தகைய குற்றமும் செய்யாதவன்; குடிசெய்தல் -குடும்பத்தை உயர்த்துதல்; சுற்றமா - உறவினர் போன்று; சுற்றும் - சூழ்ந்து கொண்டு இருப்பர்; உலகு - உலகத்தவர்.

உலகத்தார் அனைவரும் சுற்றத்தார் போன்று அவனைச் சூழ்ந்திருந்தால் அவன் குடும்ப உயர்ச்சிக்கு அவன் செய்ய முயலும் எதுவும் மிகவும் எளிதில் முடியும் என்பது கருத்து.
1025

**6. நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல்.**

ஒருவனுக்கு நல்லஆண்மை என்றுசிறப்பித்துச் சொல்லப் படுவது அவன் தான் பிறந்த குடும்பத்தைஆளும் சிறப்பைத் தனக்கு உண்டாக்கிக் கொள்வதே ஆகும்.

நல் ஆண்மை - நல்ல ஆண்மைத் தன்மை, ஆளுந் தன்மை ; இல்லாண்மை — இல்லாததை அல்லது குடும்பத்தை ஆளும் தன்மை; ஆக்கிக்கொள்ளல் - ஆளுதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொள்ளுதல். 1026

**7. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை.**

போர்க்களத்திலே போர்புரியும் வீரர் பலருள்ளே தலைமை தாங்கிப் போரை நடத்தும் பொறுப்பு எதற்கும் அஞ்சாத சிறந்த போர் வீரருக்கே அமைவதுபோலக் குடும்பத்தில் உள்ள சுற்றத்தார் பலருள்ளும் அந்தக் குடும்ப பாரத்தைத் தாங்கி நடத்தும் பொறுப்பு வாய்ந்தவர் மீதே குடும்பத்தைக் காக்கும் பொறுப்பு ஏற்பட்டுள்ளது.

அமரகம்-போர்க்களம் ; வன்கண்ணர்-அஞ்சா நெஞ்சர்; தமர் - சுற்றத்தார் ; தமரகம்-குடும்பம் ; ஆற்றுவார்- ஆற்றல் வாய்ந்தவர், வல்லமை மிகுந்தவர் ; மேற்று - மேலது ஆகும்; பொறை - குடும்ப பாரத்தைத் தாங்குதல். 1027

**8. குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும்.**

தம் குடும்பத்தை உயர்த்துவதற்கான செயலைப் புரிய எண்ணுவோருக்கு அச்செயலைச் செய்வதற்கு உரிய காலம் என்று ஒன்றுஇல்லை. 'இதற்குஏற்ற காலம் வரட்டும்' என்று சொல்லிக்கொண்டு அவர் சோம்பலை மேற்கொண்டு தமக்குள்ள பெருமையையும் எண்ணிப் பார்த்துக்கொண்டு இருப்பாரானால் அந்தக் குடும்பமே கெட்டுவிடும்.

குடிசெய்வார் - குடும்பத்தை உயர்த்த எண்ணுபவர் ; பருவம் - காலம் ; மடி — சோம்பல்; மானம்-பெருமை; இது இங்கே வீண் பெருமை, படாடோபம், கர்வம் முதலியவற்றுள் ஒன்றைக் குறிக்கும். 1028

9. இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்
குற்றம் மறைப்பான் உடம்பு. [தைக்

தன் குடும்பத்துக்கு நேரக்கூடிய குற்றத்தை வரவொட்டாமல் காத்து, அதனால் நேரும் துன்பங்களையெல்லாம் தாங்கிக்கொள்ளுகிறவனுடைய உடம்பு துன்பத்துக்கே இடமாகுமோ?

இடும்பை - துன்பம்; கொள்கலம் - பண்டம் இடுங் கலம். இங்கே இது துன்பங்கள் பலப்பல வந்து தங்கியிருத்தற்கு இடமாக இருக்கும் உடம்பைக் குறிக்கிறது; கொல் ஓ - இரக்கக் குறிப்பு; மறைத்தல் - பிறர்மீது தாக்காவண்ணம் காத்து மறைத்துக் கொள்ளுதல், காத்துக் கொள்ளுதல். 1029

10. இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்
நல்லாள் இலாத குடி.

குடும்பமாகிய அடிமரம் துன்பமாகிய கோடரியால் வெட்டி வீழ்த்தப்படும்போது குடும்பத் தலைவன் முட்டுக் கால் போல் உடனிருந்து அதனைத் தாங்கிக்கொள்ள வேண்டும். அப்படி அடுத்து இருந்து தாங்கிக்கொள்ளுதற்கு ஏற்ற நல்ல ஆண் மகன் இல்லாத குடும்பம் வீழ்ந்து அழியும்.

இடுக்கண் - துன்பம்; கால் - அடிமரம், மரத்தின் மூலம்; கொன்றிட - அழிக்க; அடுத்து - அருகே இருந்து; ஊன்றும் - தாங்கிக் கொள்ளும்; நல்லாள் - ஆண் மகன். 1030

## 104. உழவு

1. சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை.

உலகத்தவர் பல தொழில்களைச் செய்து திரிந்தாலும் முடிவில் ஏர் உழுதலைப் புரியும் உழவர் தொழிலையே பின்பற்றி நிற்கின்றனர். அதனால் மிக உழைத்து வருந்த நேர்ந்தாலும் உழுதலைச் செய்யும் உழவுத் தொழிலே சிறந்தது.

சுழன்றும் - அலைந்து திரிந்து; ஏர் - ஏரையுடைய உழவர்; பின்னது - பின்பற்றிநிற்பர்; உழத்தல் - வருந்துதல். 1031

2. உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃ தாற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து.

உழவுத் தொழிலைச் செய்ய இயலாமல் பிற தொழில்களைச் செய்கின்றவர் எல்லாரையும் உழவர் தாங்குதலால் இந்த உலகத்தாராகிய தேருக்கு உழவர் அச்சாணி போன்றவர் ஆவர்.

உழுவார் - உழவர் ; ஆணி - அச்சாணி, கடையாணி; ஆற்றாது - செய்ய இயலாமல்; எழுவார் - வேறு தொழில்களைச் செய்யச் சென்றவர்; பொறுத்தல்-தாங்குதல். 1032

3. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்.

எல்லாரும் உண்ணும்படி உழவுத் தொழிலைச் செய்து அதனால் தாமும் உண்டு வாழ்கின்றவர்களே உரிமையோடு வாழ்கின்றவர் ஆவர்; மற்றவர் எல்லாரும் பிறரைத் தொழுது, அதனால் உண்டு அவர் ஏவியதைச் செய்து அவரைப் பின் தொடர்ந்து செல்பவரே ஆவர்.

தொழுது உண்ணுதல் - ஏவிய ஏவலைச் செய்து வணங்கி ஊதியம் பெற்று உண்ணுதல்; பின் செல்லுதல் - இடும் தொழிலைச் செய்யப் பின் சென்று காத்துக் கிடத்தல்.

குறிப்பு : உழவுத் தொழில் புரிவதே சுதந்திர வாழ்வு; பிற வாழ்வுகளெல்லாம் அடிமை வாழ்வு என்பது கருத்து. 1033

4. பலகுடை நீழலும் தம்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்.

நெற்கதிர்களின் நிழலையே தமக்குடையதாகக் கொண்டு வாழும் உழவர், பல அரசர்களின் குடைக்கீழுள்ள நிலம் முழுவதையும் தம் அரசன் குடைக்கீழ்க் காணச் செய்ய வல்லவர் ஆவர்.

குடை - வெண்கொற்றக்குடை; நீழல் - அரசர்கள் ஆட்சி புரியும் நிலத்தைக் குறிக்க வந்த சொல்; பல குடை நீழல்-பல அரசர்களுடைய குடைகளின் ஆளுகைக்கு உட்பட்ட நிலம்; அலகு - கதிர். 1034

5. இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

கையால் உழுது உண்பதை இயல்பாக உடைய உழவர் பிறரிடம் சென்று பிச்சையெடுக்க மாட்டார்; அன்றியும் தம்மிடம் வந்து இரந்து கேட்பவர்க்கு ஒளிக்காமல் அவர் வேண்டும் பொருள் ஒன்றனைத் தருவர்.

இரவார் - பிச்சையெடுக்கமாட்டார்; இரப்பார் - பிச்சையெடுப்பவர்; கரவாது – ஒளிக்காமல்; கை செய்தல்— கையால் தொழில் செய்தல், இங்கே உழுதல் என்பது பொருள்; மாலையவர் - இயல்புடையவர்; மாலை-இயல்பு. 1035

6. உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.

உழவருடைய கை உழவுத் தொழிலைச் செய்யாது மடங்கியிருக்குமானால் 'பலராலும்விரும்பப்படும் பற்றினையும் விட்டு விட்டோம்' என்று கூறும் துறவிகளுக்கும் அவர்கள் மேற்கொண்ட துறவற நெறியில் நிலைத்து நிற்கும் ஆற்றல் இல்லாதொழியும்.

கைம்மடங்குதல் - தொழில் புரியாமல் கைகட்டிக் கொண்டு இருத்தல்; விழைதல் - விரும்புதல், பற்று; எல்லாராலும் விரும்பப்படும் உணவு என்றும் பொருள் கூறுவர்; நிலை - நிலைத்து இருத்தல். 1036

7. தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

ஒரு பலம் புழுதி கால்பலம் ஆகும்படி உழவன் நிலத்தினை நன்கு உழுது காயவிடுவானானால் ஒரு பிடி எருவும் இல்லாமல் அந்த நிலத்தில் பயிர் செழித்து விளையும்.

தொடி - ஒரு பலம் கொண்ட அளவு; கஃசு - கால் பலம்; உணக்குதல் - உலர்த்துதல்; பிடித்து எரு - ஒரு கைப்பிடி அளவுள்ளதாகிய எரு; சாலபபடும் - நிறைய விளையும்; படுதல் - முளைத்தல், தோன்றுதல்.

ஒரு பலம் புழுதி கால்பலமாக உலர வேண்டுமானால் மண் மிக்க மிருதுவாக இருக்கவேண்டும். ஆகவே, அந்த அளவுக்கு நிலத்தை நன்கு உழ வேண்டும் என்பது குறிப்பாக விளக்கப்பட்டுள்ளதை அறிக. 1037

**8. ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்**
**நீரினும் நன்றதன் காப்பு.**

ஏர் உழுதலைப் பார்க்கிலும் எரு இடுதல் நல்லது ; இவை செய்து களையெடுத்த பின் நீர் பாய்ச்சுவதைப் பார்க்கிலும் பயிர் அழிய வொட்டாமல் அதனைக் காப்பது நல்லது.

கட்டல் - களையெடுத்தல் ; காப்பது பசு, எருது முதலியவை மேயாதபடி காவல் காத்தல்.

குறிப்பு : உழுதல், எருவிடுதல், களையெடுத்தல், நீர் பாய்ச்சுதல், காத்தல் ஆகிய இவை ஐந்தும் பயிர் வளர்வதற்கு ஏதுவாகும். 1038

**9. செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து**
**இல்லாளின் ஊடி விடும்.**

நிலத்துக்கு உரியவன் உரிய காலங்களில் எல்லாம் சென்று நிலத்தைப் பார்வையிடாமல் வாளாயிருப்பானானால், அவனுடைய அன்புடன் கூடிய கவனிப்பு இல்லாத அவன் மனைவியைப்போல் அந்த நிலமும் வெறுத்து அவனோடு பிணங்கி விடும் ; அஃதாவது நல்ல பலன் தாராது போய்விடும்.

கிழவன் - நிலத்துக்கு உரியவன்; கிழமை - உரிமை ; புலத்தல் - வெறுத்தல்; ஊடுதல் - பிணங்குதல்; இல்லாள்- மனைவி.

பிறரை ஏவிவிடாது தானே சென்று வயலைப் பார்த்தல் வேண்டும் என்பது கருத்து. 1039

**10. இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்**
**நிலமென்னும் நல்லாள் நகும்.**

'எம்மிடம் சிறிதும் பொருள் இல்லை' என்று வயலைக் கவனிக்காமல் சோம்பலாக இருப்பவரைக் கண்டால் நிலம் என்னும் பெண் அவருடைய அறிவின்மையை எண்ணி இகழ்ந்து தன்னுள் சிரிப்பாள்.

இலம் - பொருள் பெற்றிலேம் ; அசைஇ - சோம்பி; நிலம் என்னும் நல்லாள் - நிலமாகிய பெண் ; நிலத்தைப் பெண்ணாக உருவகப்படுத்திக் கூறுகிறார் ஆசிரியர் ; நகும் - தனக்குள் சிரித்துக் கொள்வாள்.

பொருள் இல்லாவிட்டாலும் முயற்சி மட்டும் இருந்தால் நிலம் வேண்டிய பலனைத் தரும் என்பது கருத்து. 1040

## 105. நல்குரவு

**1. இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்**
**இன்மையே இன்னா தது.**

வறுமையைப் போலத் துன்பத்தைத்தருவது எது என்று கேட்டால் வறுமையைப் போலத் துன்பத்தைத் தருவது வறுமையே ஆகும்.

இன்மை - வறுமை; இன்னாதது - துன்பந் தருவது; நல்குரவு-வறுமை.

துன்பந் தருவதில் வறுமையைவிடக் கொடியது வேறொன்றும் இல்லை என்பது கருத்து. 1041

**2. இன்மை எனஒரு பாவி மறுமையும்**
**இம்மையும் இன்றி வரும்.**

வறுமை என்று சொல்லப்படும் பாவி ஒருவனைப்பற்றிக் கொண்டால் அவனுக்கு இவ்வுலக இன்பம், மறுஉலக இன்பம் ஆகிய இரண்டும் இல்லாமற் போய்விடும்.

பாவி-தீமையே செய்பவன்; மறுமை-மறு உலக இன்பம்; இம்மை-இவ்வுலக இன்பம். 1042

**3. தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக**
**நல்குரவு என்னும் நசை.**

நிரம்பப் பொருள் வேண்டும் என்னும் ஆசையால் வந்த வறுமையானது தொன்றுதொட்டு வருகின்ற குடிப்பிறப்பின் வரலாற்றையும் அதன் காரணமாக வந்துள்ள புகழ்மொழியையும் ஒருசேரக் கெடுக்கும்.

தொல்வரவு-குடிப்பிறப்பின் பழைய வரலாறு; தோல்-புகழ்மொழி; தொகையாகக் கெடுக்கும்-ஒருசேரக் கெடுக்கும்; நல்குரவு-வறுமை; நசை-விருப்பம். 1043

**4. இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த**
**சொற்பிறக்கும் சோர்வு தரும்.**

வறுமையானது நல்ல குடிப்பிறந்தாரிடத்தும் இழிவான சொல் பிறப்பதற்குக் காரணமான சோர்வினை உண்டாக்கிவிடும்.

இல்பிறந்தார்-நற்குடியில் பிறந்தவர்; கண்-இடத்தில் என்பதைக் குறிக்கும் ஏழாம் வேற்றுமை உருபு; இன்மை-வறுமை; இளி-இழிவு; சோர்வு-மறதி. 1044

5. நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

வறுமை என்னும் துன்பநிலை ஒன்றின் காரணமாகப் பலவகைப்பட்ட துன்பங்கள் வந்து விளையும்.

இடும்பை-துன்பம்; பல்குரை-பலப்பல; 'குரை' என்பதற்கு இங்கே பொருள் இல்லை. இச்சொல் அசை நிலையாக வந்துள்ளது; சென்றுபடும்-வந்து விளையும். 1045

6. நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

நல்ல நூல்களில் உள்ள பொருளினை நன்றாக ஆராய்ந்து அறிந்து தெளிவாகச் சொன்னபோதிலும் வறியவர் சொல்லிய நற்பொருள் பிறரால் ஏற்றுக் கொள்ளப்படாமல் போகும்.

நற்பொருள்-நல்ல நூற்பொருள், மெய்ந்நூற்பொருள்; நன்கு உணர்தல்-ஆராய்ந்து அறிதல்; சொற்பொருள்-சொல்லிய பொருள்; சோர்வுபடும்-ஏற்றுக் கொள்ளப்படாமல் போகும், பயன்படாமல் போகும். 1046

7. அறஞ்சாரா நல்குரவு ஈன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

அறஞ்செய்தற்குப் பொருந்தாத வறுமை ஒருவனை அடையுமானால், பெற்றெடுத்த தாயாராலும் அவன் அயலான்போல எண்ணப்படுவான்.

அறம் சாரா—அறஞ் செய்தற்குப் பொருந்தாத; ஈன்ற தாய்-பெற்றெடுத்த தாயார்; பிறன்போல நோக்குதல்-அயலானைப் போல எண்ணுதல். 1047

8. இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு.

நேற்றும் என்னைக் கொலை செய்வதுபோல் வந்து துன்புறுத்திய வறுமையானது இன்றைக்கும் என்னிடம் வந்து சேருமோ? (வந்தால் இனி யாது செய்வேன்.)

வருவது கொல்லோ: 'கொல்', 'ஓ' இவை இரண்டும் அசைக் குறிப்பைத் தருவன; நெருநல்-நேற்று; கொன்றது போலும்-கொன்றது போன்ற பெருந்துன்பத்தைத் தந்த; நிரப்பு-வறுமை. 1048

9. நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதொன்றும் கண்பாடு அரிது.

ஒருவர் நெருப்பின் நடுவே இருந்து உறங்குதலும் கூடும். ஆனால் வறுமை நிலையில் இருந்து வருந்தும் ஒருவர் எந்த வகையாலும் சிறிது கண்ணை மூடவும் இயலாது.

துஞ்சல்-உறங்குதல்; யாதொன்றும்-எந்த வகையாலும்; கண்பாடு-கண்படுதல், கண் இமையை மூடுதல்; அரிது-அருமையானது. 1049

10. துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று.

இன்புற்று வாழ்வதற்கு வேண்டிய பொருள்கள் இல்லாத வறியவர் முற்றிலும் துறக்கவேண்டியவராக இருந்தும் துறவாமல் குடும்பத்தில் தங்கியிருப்பதன் காரணம் என்னவென்றால் பிறர் வைத்துள்ள உப்புக்கும் கஞ்சிக்கும் எமனாக இருப்பதே ஆகும்.

துப்புரவு-இன்புற்று வாழ்வதற்கு வேண்டிய பொருள்கள். ஐம்புல நுகர்ச்சிக்கு வேண்டிய பொருள்கள்; துவர-முற்றிலும்; காடி-கஞ்சி; கூற்று-எமன்.

குறிப்பு: பொருள் தொகுத்து இன்புற்று வாழ இயலாதவர் பிறருக்குத் துன்பந் தாராமல் வீட்டை விட்டுத் துறந்து போதலே நலம் என்பது கருத்து. 1050

## 106. இரவு

1. இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்
அவர்பழி தம்பழி அன்று.

இரத்தற்குத் தகுந்தவரைக் கண்டால் வறியவர் அவரிடம் இரக்கலாம்; இரந்தபோது அவர் கொடாமல் மறுப்பாரானால் அஃது அவருக்குப் பழியே அல்லாமல் இரந்தவர்க்குப் பழி அன்று.

இரத்தல்-பிச்சை எடுத்தல்; காத்தல்-கொடுக்காமல் ஒளித்தல், இல்லை என்று சொல்லுதல்; பழி-பாவம், குற்றம். 1051

2. இன்பம் ஒருவற் கிரத்தல் இரந்தவை
துன்பம் உறாஅ வரின்.

பிறரிடம் சென்று ஒரு பொருளை வேண்டிக் கேட்டல் ஒருவருக்கு இன்பமே ஆகும்; ஆனால், அவ்விதம் அவர் இரந்து கேட்டபோது அந்தப் பொருள் அவருக்கு எந்த வகையான துன்பமும் இல்லாமல் எளிதில் கிடைப்பதாக இருத்தல்வேண்டும்.

துன்பம் உறாஅ வருதல்-எளிதில் கிடைத்தல். பல முறை நடக்க வைக்காமல் தருதல், அன்போடு உதவுதல், கேட்பதற்கு முன்பு குறிப்பறிந்து தருதல். 1052

3. கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் முன்னின்று
இரப்புமோர் ஏஎர் உடைத்து.

கள்ளம் இல்லாத உள்ளமும், கடமை அறிந்து உதவும் குணமும் உடையோர் முன்னே நின்று அவரிடம் ஒரு பொருளை வேண்டிக் கேட்டலும் ஓர் அழகுடையதே ஆகும்.

கரப்பு இலா நெஞ்சம் - கள்ளம் இல்லாத உள்ளம்; கடன்-கடமை; இரப்பு-இரந்து கேட்டல்; ஏர்-அழகு. 1053

4. இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு.

இரந்தார்க்குத் தம்மிடம் உள்ள பொருளை மறைத்து 'இல்லை' யென்று சொல்லும் இழிகுணத்தைக் கனவிலும் அறியாதவரிடம் ஒருவன் சென்று ஒரு பொருளை வேண்டிக் கேட்பதுவும் கொடுப்பது போன்ற சிறப்புடையதே ஆகும். (அஃது இழிவே ஆகாது.)

தேற்றுதல்-தெளிந்தறிதல், நன்றாக அறிதல். மாட்டு-இச்சொல் இடம் என்னும் பொருளில் வந்தது. 1054

5. கரப்பிலார் வையகத்து உண்மையான் கண்ணின்று
இரப்பவர் மேற்கொள் வது.

சிறிதும் ஒளிக்காமல் உதவுபவர் உலகத்தில் சிலரேனும் உள்ளனர். ஆதலால் ஒருவர் முன் நின்று இரந்து கேட்டலை இரப்பார் மேற்கொள்கின்றனர்; வேறு காரணம் இல்லை.

கரப்பிலார்-ஒளிக்காமல் கொடுப்பவர்; வையகம்-உலகம்; உண்மையான்-உள்ளத்தாலேயே; கண் நின்று-கண்ணுக்கும் தெரியும்படி நின்று. 1055

6. கரப்பிடும்பை இல்லாரைக் காணின் நிரப்பிடும்பை
எல்லாம் ஒருங்கு கெடும்.

தம்மிடம் உள்ளதை ஒளித்துக் கூறும் குற்றம் இல்லாதவரைக் கண்டால் இரப்பவரின் வறுமைத் துன்பம் எல்லாம் ஒருங்கே ஒழிந்து போகும்.

கரப்பு-ஒளித்து வைக்கும் குணம்; இடும்பை-துன்பம், குற்றம், நோய்; ஒருங்கு-ஒருசேர; கெடும்-ஒழியும். 1056

7. இகழ்ந்தெள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்
துள்ளம் உள்ளுள் உவப்பது உடைத்து.

தம்மை அவமதித்து இழிவுரை கூறாது பொருள் தருபவரைக் கண்டால் இரப்பவருடைய மனம் மகிழ்ச்சி அடைந்து உள்ளுக்குள்ளே இன்புறும் தன்மை உடையதாகும்.

இகழ்தல்-அவமதித்தல்; எள்ளுதல்-இகழ்ந்துரைத்தல், இகழ்ந்து நகைத்தல்; உள்ளுள்-மனத்துக்குள்; உடைத்து-உடையதாக இருக்கும் தன்மையுடையது. 1057

8. இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று.

குளிர்ந்த இடத்தையுடைய பெரிய உலகம் இரந்து கேட்கும் தன்மை வாய்ந்தவரைப் பெற்றில்லாது இருக்குமானால் இவ்வுலகத்தில் உள்ள மக்கள், உயிரற்ற மரப்பாவை சென்றும் வந்தும் இயங்கிக் கொண்டிருந்தால் எவ்விதம் இருக்குமோ அவ்விதம் சிறிதும் உணர்ச்சியற்றவராகக் காணப்படுவர்.

இல்லாயின்-இல்லாமல் இருந்தால்; ஈர்ங்கண்-குளிர்ச்சி வாய்ந்த இடம், செழிப்பு மிக்க இடம்; மா-பெரிய; ஞாலம்-பூமி அல்லது பூமியில் உள்ள மக்கள்; மரப்பாவை-மரத்தால் செய்யப்பெற்ற பதுமை; சென்று வந்து அற்று-செல்வதும் வருவதும் போலும் இருக்கும் அத்தகையது. 1058

9. ஈயார்கண் என்னுண்டாம் தோற்றம் இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை.

ஒரு பொருளை விரும்பி இரந்து கேட்டு அதைப் பெற்றுக் கொள்ள விரும்புவோர் இல்லாதபோது பொருள் தருவோரிடம் என்ன புகழ் உண்டாகும்? இல்லை என்பது பொருள்.

ஈவார்கண்-கொடுப்போரிடம்; தோற்றம்-புகழ்: முகத்தில் தோன்றும் உள்ள மகிழ்வின் பொலிவு; இரந்து கோள்-இரந்து பெற்றுக் கொள்ளுதல்; மேவார்-மேவுவார், விரும்புவார்; இலா அக்கடை-இல்லாதபோது.

இரப்பவர் இல்லையென்றால் வள்ளல்களும் இல்லாமலே போய்விடுவார் என்பது கருத்து. 1059

10. இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயும் சாலும் கரி.

இரந்துண்டு வாழ்பவன், தனக்குத் தாராதவரிடம் கோபங் கொள்ளுவதற்கு அவன் அடைந்துள்ள வறுமைத் துன்பமே அவனுக்கு அறிவு புகட்டச் சான்றாக அமையும்.

வெகுளுதல்-சினத்தல்; நிரப்பு இடும்பை-வறுமைத் துன்பம்; சாலும்-அமையும்; கரி-சான்று, சாட்சி. 1060

## 107. இரவச்சம்

1. கரவாது உவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி உறும்.

தம்மிடம் உள்ளதை ஒளிக்காமல் மனமகிழ்ந்து கொடுக்கும் கண்போலச் சிறந்தவரிடத்திலும் ஒரு பொருளை இரக்காமல் இருப்பது அந்தப் பொருளைக் காட்டிலும் கோடி மடங்கு நல்லது.

உவந்து-உளமகிழ்ந்து; கண் அன்னார்-கண்போன்று இருந்தவர்; கோடி உறும்-கேட்டுப் பெற்ற பொருளைக் காட்டிலும் கோடிமடங்கு நல்லதாகும். 1061

2. இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்.

இவ்வுலகத்தைப் படைத்தவன் அதில் உள்ளவர்கள் பிச்சையெடுத்தும் உயிர் வாழ்தல் வேண்டும் என்று ஏற்படுத்தியிருப்பானானால், அந்தக் கொடியோனும் இரப்பவரைப் போல எங்கும் அலைந்து திரிந்து கெடுவானாக.

'இது என் தலைவிதி' என்று சோம்பியிருந்து பிச்சை யெடுத்து வாழ விரும்புவதைக் கண்டிக்கும் முகத்தான் வள்ளுவர் இவ்விதம் கூறியிருக்கின்றார்.

பரந்து-எங்கும் அலைந்து திரிந்து; கெடுக - அழிந்து போவானாக; உலக இயற்றியான் - உலகைப் படைத்த முதல்வன். 1062

3. இன்மை இடும்பை இரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்டது இல்.

வறுமைத் துன்பத்தைப் பிச்சை யெடுப்பதன் வாயிலாகத் தீர்ப்போம் என்று எண்ணி முயற்சியைக் கைவிடும் வன்மையைப் போன்ற வன்மையுடையது வேறொன்று இல்லை.

இன்மை இடும்பை-வறுமைத் துன்பம்; இரந்து தீர்வாம்-பிச்சையெடுத்து ஒழிப்போம்; வன்பாடு-முரட்டுத் தன்மை. 1063

4. இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே இடமில்லாக்
காலும் இரவொல்லாச் சால்பு.

வாழ்வதற்கே வழி இல்லாதபோதும் பிச்சையெடுத்து உயிர்வாழ உடன்படாத மன அமைதி, அகன்ற உலகமெல்லாம் கொள்ளாத பெருமையுடையதாகும்.

இடம்-அகன்ற உலகம்; தகைத்து-மதிப்புடையது, பெருமையுடையது; இடமில்லாக்காலும்-வழி இல்லாத போதும், ஒல்லா-இசையாத, உடன்படாத; சால்பு-மன அமைதி. 1064

**5. தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்தது
உண்ணலின் ஊங்கினியது இல்.**

முயற்சியால் கிடைத்தது தெளிந்த நீர்போன்று சமைத்த கூழே ஆனாலும் அதை உண்பதைவிட இனிமையானது வேறு இல்லை.

தெண்ணீர்–தெள்+நீர், தெளிந்த நீர்; அடுபுற்கை–சமைத்த கூழ்; அடுதல்–சமைத்தல்; புற்கை – கூழ் அல்லது உணவு; தாள்–முயற்சி; ஊங்கு–மேம்பட்டது.

முயன்று பெற்றது எளிய உணவே ஆயினும் அஃது அமிழ்தினும் சிறந்தது என்பது கருத்து. 1065

**6. ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல்.**

பசுவிற்குத் தண்ணீர் வேண்டுமென்று அயலாரிடம் சென்று இரப்பதாக இருந்தாலும் அந்த இரத்தலைப்போல நாவினுக்கு இழிவைத் தருவது வேறொன்றுமில்லை.

ஆ–பசு; இரவின்–இரத்தலைப் போல; இளிவந்தது–இழிவைத் தருவது.

குறிப்பு: அறச்செயல் குறித்தும் பிறரிடம் சென்று இரத்தல் கூடாது என்பது கருத்து. 1066

**7. இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின்
கரப்பார் இரவன்மின் என்று.**

பிறரிடம் சென்று இரப்பாரையெல்லாம், "நீங்கள் பிறரிடம் இரக்கச் செல்லுவதாய் இருந்தால், தம்மிடம் உள்ளதைக் கொடாமல் ஒளிப்பவரிடம் இரக்கச் செல்லாதீர்கள்" என்று யான் மிகவும் வேண்டிக் கேட்டுக் கொள்ளுவேன்.

இரப்பன்–வேண்டிக்கேட்டுக்கொள்வேன்; இரவன்மின்–பிச்சை எடுக்காதீர்கள். 1067

**8. இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.**

பிச்சையெடுத்தல் என்னும் பாதுகாப்பு இல்லாத மரக்கலம், கொடாது ஒளித்து வைத்தல் என்னும் வலிய நிலத்தால் தாக்கப்பட்டால் உடைந்துவிடும்.

ஏமாப்பு-பாதுகாப்பு; தோணி-மரக்கலம்; பார்-பாறை நிலம்; பக்குவிடல-பிளந்துவிடுதல். 1068

9. இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும்.

இரத்தலை நினைத்தால் உள்ளம் கரைந்து உருகும். இரப்பவர்க்கு இல்லையென்று கூறி ஒளிக்கும் கொடுமையை நினைத்தால் கரைந்து நின்ற அந்த உள்ளமும் இல்லாமல் அழிந்து ஒழியும்.

உள்ள-நினைக்க; இன்றிக்கெடும்-இல்லாமல் அழியும். 1069

10. கரப்பவர்க்கு யாங்கொளிக்குங் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஓம் உயிர்.

'எமக்கு யாதும் இல்லை, சிறிது ஈயவேண்டும்' என்று வறியவன் ஒருவன் பிறன் ஒருவனை நோக்கிக் கேட்கும் போதே அந்த வறியனுக்குத் தன் உயிரே போய்விடும் போன்று தோன்றுகின்றது. அவ்விதம் அந்த அறிஞன் கேட்கும் நிலையைக் கண்டும் சிறிதும் இரங்காது தம்மிடமுள்ள பொருளை ஒளித்து வைத்துக்கொண்டு தாமும் அவனைப்போல் 'என்னிடம் ஒன்றும் இல்லை' என்று கூறுவாரானால் அவர் உயிர் எங்குப்போய் ஒளிந்திருக்குமோ, தெரியவில்லை.

யாங்கு ஒளிக்கும்-எங்கே ஒளிந்திருக்கும்; கொல், ஓ-அவை ஐயப்பொருளைக் குறிக்க வந்தன; சொல்லாட-சொல்லும்போதே; போம்-போகும். 1070

## 108. கயமை

1. மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாம்கண்டது இல்.

கயவர் என்பவர், வடிவத்தால் முழுவதும் மக்களையே ஒத்திருப்பர். அவர் மக்களை ஒத்திருப்பதுபோன்ற ஒப்புமை கூறத்தக்க வேறு ஒரு பொருளை யாம் கண்டதில்லை,

கயவர்-கீழ்மக்கள்; ஒப்பாரி-ஒப்புமை.

குறிப்பு: உறுப்பால் ஒத்திருந்தும் குணத்தால் ஒத்திராமையால் கயவர், மக்கள் என்று சொல்லத்தகாதவர் என்பது கருத்து. 1071

2. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத்து அவலம் இலர்.

நன்மையை ஆராய்ந்து அறிகின்ற அறிஞரைப் பார்க்கிலும் கீழ்மக்களே நன்மையுடையவராவர். ஏனென்றால் அந்தக் கீழ்மக்கள் எதைப்பற்றியும் தம் நெஞ்சில் கவலையில்லாதவர்கள் ஆதலால் என்க.

நன்று அறிதல்-நன்மையை ஆராய்ந்து அறிதல்; திருவுடையர்-தன்மையுடையவர், நல்வினையுடையவர்; திரு-செல்வம், நன்மை; அவலம்-கவலை.

குறிப்பு: கயவரைத் திருவுடையார் என்றது குறிப்பால் இகழ்ந்ததாகும். 1072

3. தேவர் அனையர் கயவர் அவரும்தாம்
மேவன செய்தொழுக லான்.

கயவரும் தேவரும் ஒரே தன்மையர் ஆவர். அஃது எவ்வாறெனில் கயவரும் தேவரைப்போன்றே தாம் விரும்புவனவற்றைத் தம் மனம் போனவாறு செய்து ஒழுகுவர் ஆதலால் என்க.

தேவர்-மேலுலகில் வாழ்வதாகக் கூறப்படும் ஒருவகைக் கடவுட் சாதியர்; மேவன-விரும்புவன; ஒழுகுதல்-நடத்தல். இது கயவரைப் புகழ்வது போலப் பழித்தலின் வஞ்சப் புகழ்ச்சியாம். 1073

4. அகப்பட்டி யாவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ்.

கீழ்மகன் தன்னினும் அடக்கம் இல்லாதவரைக் கண்டானாயின் அவரினும் தான் மேம்பாடுடையவனாக எண்ணி இறுமாந்து இருப்பான்.

அகப்பட்டி-மன அடக்கம் இல்லாதவன், அறநெறியை மீறி நடப்பவன்; செம்மாக்கும்-இறுமாந்திருப்பான்; கீழ்-கீழ்மகன்.

5. அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்
அவாவுண்டேல் உண்டாம் சிறிது.

கீழ்மக்களின் ஆசாரத்துக்குக் காரணமாக இருப்பது அச்சமே ஆகும். அஃது ஒழிந்தால் தம்மால் விரும்பப்படும் பொருள் அதனால் உண்டாகுமாயின் அதனாலும் சிறிதளவு ஆசாரம் உண்டாகும்.

ஆசாரம்-சாத்திர முறைப்படி ஒழுகுதல், நன்னடக்கை; எச்சம்-மிகுதி, எஞ்சி இருப்பது; அவா-ஆசை, பற்று. (இங்கே விரும்பும் பொருளைக் குறிக்கும்.) 1075

6. அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான்.

கயவர் தாம் கேட்டறிந்த இரகசியமான செய்திகளைப் பிறருக்கு வலியச் சுமந்து சென்று சொல்லி வருவதால் அறையப்படும் பறையினைப் போன்றவர் ஆவர்.

அறைபறை அன்னர்-அறையப்படும் பறையினைப் போன்றவர்; மறை-இரகசியம்; உய்த்தல்-செலுத்துதல், சுமந்து சொல்லுதல்.

பறையானது அடிக்கப்பட்டவுடன் பெரிதாக முழங்கி எல்லார்க்கும் உணர்த்துகிறது. அது போலக் கீழ்மக்களும் தம்மிடம் கூறப்பட்ட இரகசியச் செய்திகளை உடனே எல்லாரிடமும் சென்று கூறும் இயல்புடையவர் என்பது கருத்தாகும். 1076

7. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

கன்னத்தை இடித்து உடைக்கும் வளைத்த கையை உடையவர் அல்லாதார்க்குக் கீழ்மக்கள் தாம் உணவுண்ட ஈரக் கையையும்கூட உதறமாட்டார்கள்.

ஈர்ங்கை-ஈரக்கை, எச்சிற் கை; கொடிறு-கன்னம்; கூன் கையர்-வளைந்த, முறுக்கிய கையையுடையவர்.

மெலியார்க்கு - யாதும் கொடார். துன்புறுத்துவார்க்கு எல்லாம் கொடுப்பார் என்பது கருத்து. 1077

8. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ்.

ஒருவர் தம் குறையைச் சொல்லிய அளவிலேயே மனம் இரங்கிப் பயன்படுவர் சான்றோர்; மற்றைக் கீழாயினோர் கரும்பினை ஆலையில் வைத்துச் சாறு பிழிவதுபோல வருத்தினால்தான் பயன்படுவர்.

பயன்படுதல் - உள்ளது கொடுத்தல்; சான்றோர் - மேலாயினார்; கரும்புபோல்-கரும்பை ஆலையில் வைத்துச் சாறு பிழிவதுபோல; கொல்ல-வருத்த; கீழ்-கீழ்மக்கள். 1078

9. உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்
வடுக்காண வற்றாகும் கீழ்.

கீழ்மக்கள் பிறர் நன்றாக உடுப்பதையும் உண்பதையும் காணுவார்களாயின் அவற்றைப் பொறாது வேண்டும் என்றே அவர்பால் குற்றம் காணவல்லவர்கள் ஆவார்கள்.

உடுப்பது - நல்ல ஆடை அணிந்து கொள்ளுதல்; உண்பது-நல்ல உணவை உண்டு மகிழ்தல்; வடு-குற்றம்; வற்று-வல்லது. 1079

10. எற்றிற் குரியர்கயவர் ஒன்று உற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

கயவர் எதற்கு உரியார் என்றால் தமக்கு ஒரு சிறு துன்பம் நேர்ந்த காலத்தில் அதற்காகத் தம்மை விரைந்து பிறர்க்கு விலைக்கு விற்று விடுவதற்கு உரியவர் ஆவர்.

எற்றிற்கு-எதற்கு; உரியர்-உரியவர்; ஒன்று-ஒரு துன்பம்; உற்றக்கால்-நேர்ந்தபோது. 1080



தமிழ்நெறிக் காவலர்—முதுபெரும் புலவர்
பேராசிரியர் மயிலை சிவமுத்து அவர்கள்

உலகப் புலவன் வள்ளுவனின்
உள்ளம் அறிந்த சிவமுத்துப்
புலவன் இனிய எளியநடை
பொலியும் இந்த உரைநூலைப்
பலரும் வாங்கி நாடோறும்
படிப்போம்; சுவைப்போம்; இன்புறுவோம்;
நலமும் வளமும் பெருகிடவே
நடப்போம் வள்ளுவர் நெறியினிலே.

—தணிகை உலகநாதன்

மூவேந்தர் அச்சகம், சென்னை-600 014